# காயல்பட்டினம்



ஆசிரியர் :

அல்ஹாஜ் **R. S.** அப்துல் லத்தீபு, M.A.,



வெளியீடு :

**சம்சுத்தீன் அப்பா பதிப்பகம்**

36, அம்பல மரைக்காயர் தெரு

காயல்பட்டினம்

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| 1. Title of the book | — | Kayalpatinam |
| 2. Author | — | Alhaj R. S Abdul Latiff M. A.,<br>254, Saduckai Street<br>(Labbai Appa Street)<br>Kayalpatinam - 628 204 |
| 3 Language | — | Tamil |
| 4. Edition | — | First Edition |
| 5. Date of Publication | — | February 1993 |
| 6. Copyright | — | Author |
| 7. Size of the BooK | — | 19CM X 13CM |
| 8. Type used for Text | — | 10 pt. Tamil Roman |
| 9. Pages | — | 200 + 19 |
| 10. Number of copies | — | One thousand |
| 11. Printers | — | Gem Printers,<br>Kayalpatnam |
| 12. Publishers | — | Shamsuddeen Appa Publishers<br>36, Ambalamaraikar Street<br>Kayalpatnam |
| 13. Price | — | Rs. Twenty |
| 14. Subject | — | History of Kayalpatnam. |





நூல் கிடைக்கும் இடங்கள் :

**சுலைமானிய பப்ளிஷர்ஸ்**
28, நாராயண சாரங் கர்ர்டன் தெரு
சென்னை-600 001

**ஹசன் ஸ்டோர்**
K. T. M. தெரு
காயல்பட்டினம்-628 204


## காணிக்கை



"எம்மைப் பெற்றெடுத்து, இகபர
கல்வி ஞானங்களை வழங்கி,
எம்மை ஆளாக்கிய எம்
அருமை பெற்றோர்
மர்ஹூம், அல்ஹாஜ்,
S. A. L. ருக்னுத்தீன் சாஹிபு
மர்ஹூமா, ஹாஜிமா,
M.A.K. சாளை செய்கு பாத்திமா
இவர்களுக்கு

இந்நூலைக் காணிக்கை
ஆக்குகிறோம்!

# பதிப்புரை

"எல்லாப் புகழும் இறைவனுக்கே"

காயல்பட்டினமக்கள் இன்றுவரை ஆர்வத்துடன் எதிர் பார்த்து இருந்த 'காயல்பட்டின வரலாற்றை' முழுமையாகவும் தெளிவாகவும் எடுத்து இயம்பும் 'முன்மாதிரி நூல்' இது எனலாம்.

காயல்பட்டினத்தின் வரலாற்றைப் பற்றிய அனைத்து வகையான தகவல்கள், குறிப்புகள், தடயங்கள், ஆவணங்கள், கல்வெட்டுகள் ஆகியவற்றுடன் இந்நூல் செம்மையாக வெளிவருவதற்குப் பலவகையிலும் உதவிய அனைத்து ஜமாஅத்தினர் பெரியோர்கள், அன்பர்கள், நண்பர்கள், மன்றங்கள் அனைவருக்கும் எங்களது உளப் பூர்வமான நன்றியை உரிமை ஆக்குகிறோம்.

இந்த நூலை அனைத்துத் தரப்பினரும் வரவேற்றுப் போற்றுவர் எனவும் நம்புகிறோம்.

இவண்,

**சம்சுத்தீன் அப்பா பதிப்பகத்தார்**

# உள்ளடக்கம்





# முன்னுரை

அவூது பில்லாஹி மினஷ் ஷைத்தானிர் ரஜீம்
பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்.
நஹ்மதுஹூ வநுஸல்லி அலா ரஸூலிஹில் கரீம்

அல்லாஹ் தஆலாவின் பேரருளாலும் அவனுடைய திருத்தூதுவர் முஹம்மதுர் ரஸூல் (ஸல்) அவர்களின் நல்லாசியாலும், வலிமார்களின் துஆ பறக்கத்தாலும் இந்நூல் வெளிவருகிறது. அல்ஹம்துலில்லாஹ்.

காயல்பட்டின வரலாறு எழுத வேண்டும் என்று எங்கள் ஊரைச்சார்ந்த பெரியவர்கள் சிலர் வேண்டிக் கொண்டார்கள். எனவே நான் 1980 முதல் 1985 வரை பத்திரிகைகளுக்குக் காயலைப் பற்றி எழுதிய சில ஆய்வுக் கட்டுரைகளைச் சற்று மாற்றங்களுடனும், புதியதாகக் கிடைத்த ஆதாரங்களுடனும் இந்நூலில் எழுதியுள்ளேன் அதோடு புதிய ஆய்வுக்கட்டுரைகளும் இந்நூலில் இடம் பெறுகின்றன. காயல் என்பது மிகவும் தொன்மையான பெயர். கடற்கரைக்கு அருகில் இருப்பதனால் காயல்பட்டினம் என்றும், நகரமாகக் காட்சி அளிப்பதனால் காயல் பட்டணம் என்றும் அழைக்கிறார்கள். சுமார் 1180 ஆண்டுகளுக்கு முன் எகிப்து நாட்டிலுள்ள காஹிரா என்னும் ஊரிலிருந்து இவ்வூரில் குடியேறிய முஸ்லிம்கள் இவ்வூரை காஹிர் பத்தன் என்று அரபியில் அழைத்தனர். காயல் பட்டினம் அன்றும் இன்றும் தாமிர பரணி ஆறு (பொருனை ஆறு) கடலில் சங்கமமாகும் இடத்தை ஒட்டி தென் பகுதியில் அமைந்திருக்கிறது. எனவே தாமிரபரணி ஆறு காயல்பட்டினத்தின் வட எல்லையாக அமைகிறது.

இந்நூலில் சீர்மிகு காயல்பட்டினத்தின் நீண்ட சிறப்புயர் வரலாற்றைச் சுருக்கி காயலின்வரலாறுஎன்ற தலைப்பில் எழுதியுள்ளேன். கடந்த ஆயிரம் ஆண்டுகளில் இவ்வூர் வந்த வெளிநாட்டு பயணிகள், வரலாற்று ஆசிரியர்கள்

காயல்பட்டினம் மர்ஹூம் எஸ். ஏ நூர் முஹம்மது அவர்கள் காயல்பட்டினம் பற்றி சேகரித்து வைத்திருந்த சில குறிப்புகளையும், காயல்பட்டினம் மர்ஹூம் ஹாபிஸ் எம். கே. செய்யிது அஹமது அவர்களின் ''காயலின் செம்மல்கள்'' என்னும் கட்டுரையிலிருந்து சில குறிப்புகளையும் இந்நூலில் கையாண்டுள்ளேன். அவ்விருவர்களின்குடும்பத்தார்களுக்கு என் நன்றியைப் தெரிவித்துக் கொள்கிறேன். காயல்பட்டினம் முஹியித்தீன்மெட்ரிகுலேசன் மேல்நிலைப் பள்ளியின் முன்னாள் தமிழாசிரியர் கவிஞர் எஸ். எம். அபுல் பரக்காத் M.A. B. Ed., அவர்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ள புலவர் நாயகம் அவர்களின் நிருபச் செய்யுட்களுக்கும் காஹிரி நாட்டு வளத்தில் வரும் பாடல்களுக்கும் விளக்கம் தந்துதவியமைக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூலில் சிறப்பாக வெளிவர என்னோடு ஒத்துழைத்த எங்கள் ஊர் பெரியவர்களுக்கும், நண்பர்களுக்கும், என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மிகக் குறுகிய காலத்திலும் நன்முறையில் அச்சியற்றித் தந்த ஜெம் பிரிண்டர்ஸ் உரிமையாளர்கள், பணியாளர்களுக்கு எனது நன்றி உரியது. இந்நூலை ஆய்ந்து படித்து ஆய்வுரை வழங்கிய டாக்டர் செ. ப. சுருளிவேல் அவர்களுக்கும், அணிந்துரை வழங்கிய டாக்டர் அப்துல் ரசாக் அவர்களுக்கும், மதிப்புரை வழங்கிய பேராசிரியை திருமதி ஜெயா அவர்களுக்கும், சீருரை எழுதிய கவிஞர் எஸ். எம். அபுல் பரக்காத் அவர்களுக்கும், இந்நூல் வெளிவர துணைபுரிந்த அனைத்து தரப்பினருக்கும் எனது என்றுமான உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்வதில் அகம் மகிழ்ந்து இறைவனைப் போற்றுகின்றேன்.

**ஆர். எஸ். அப்துல் லத்தீபு**

**காயல்பட்டினம்**

**7—2—1993**

# ஆய்வுரை

டாக்டர் செ. ப. சுருளிவேல், எம்.ஏ., பிஎச்.டி., டிப்.லிங்.,
பேராசிரியர் & தமிழ்த் துறைத் தலைவர்,
மர்காசிஸ் கல்லூரி, நாசரேத்-628 617.

---

''பெற்ற தாயும் பிறந்த பொன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே.''

பெற்ற தாயைப் போலவே பிறந்த ஊரையும் போற்றுவது நமது மண் வாசனை யாகும். அதிலும் காயல்பட்டினத்தில் பிறந்தவர்கள் வேற்றூருக்குக் குடிபோனாலும் தமது தாய்மண்ணை மறப்பதில்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு.

தென்பாண்டிக் கிழக்குக் கரையில் அருகருகே உள்ள மூன்று ஊர்கள் முக்கியமானவை யாகும். திருச்செந்தூர் முருகன் கோவில் இந்துக்களுக்கு எப்படியோ, அதையடுத்துள்ள வீரபாண்டியன்பட்டினம் மாதா கோவில் கிறித்தவர்களுக்கு எப்படியோ, அப்படித்தான் முஸ்லிம்களுக்குக் காயல்பட்டினத்திலுள்ள பள்ளிவாசல்கள். ஒன்றா ? இரண்டா? ஒரே ஊரில் 64 பள்ளிவாசல்கள்! அவை தரும் வரலாற்றுண்டுகள் பல. அவை மட்டுமல்ல. ஆயிரக்கணக்கான இறைநேசச் செல்வர்களையும் ஞானியரையும் புலவர்களையும் வள்ளல்களையும் ஈன்றெடுத்த பெருமை இவ்வூருக்கு உண்டு. அத்துடன் 1200 ஆண்டுகளுக்கு முன்பே இஸ்லாமியர் குடியேறப் பெற்றது என்பதற்குரிய வரலாற்றுச் (கி.பி. 843) சான்றுகள் உள்ளன.

இந்தச் சிறப்புக்களை மறைக்க முயல்வோரைச் சாடுவதும் அவ்வூரார்க்கு இயல்புதான். அவர்களுள் அல்ஹாஜ் R. S. அப்துல் லத்தீபு M.A., அவர்கள் குறிப்பிடத்தக்கவர் ஆவார். இவர் தமது ஊரின் மீது கொண்டுள்ள பற்று வியக்கத்தக்கது. காயல்பட்டினத்தின் பல்வேறு சிறப்புக்களையெல்லாம் உலகறியச் செய்ய வேண்டுமென்று துடிக்கிறார் எனலாம். இவ்வூரின் சிறப்புக்களுள் சிலவற்றைக் கீழக்கரைக்குக் கடத்த முயன்றவர்களை இவர் இனங்காட்டுகிறார். இதற்காக இவர் எடுத்துக்கொண்ட முயற்சி, உழைப்பு, ஆராய்ச்சி முதலியன போற்றத்தக்கன.

இவரது இறைப்பற்று ஏற்கனவே வெளிவந்துள்ள ''காயலின் இறைநேசச் செல்வர்கள்'' என்ற நூலால் அறியலாம். இவரது ஊர்ப்பற்று இப்போது ''காயல்பட்டினம்'' என்ற ஆய்வு நூலாக வெளிவருகிறது. மறைந்த அல்லது மறைக்கப்பட்ட பல உண்மைகளை வெளிக்கொணர்கிறது இந்நூல். அத்துடன் தெளிவாக்கப்படாத பல வரலாற்றுச் செய்திகட்கும் இலக்கிய பகுதிகட்கும் சரியான விளக்கம் தருகின்றது.

காயல், தென்காயல் என இலக்கியங்களும், கல்வெட்டுகளும் குறிப்பது இன்றையகாயல்பட்டினமே. தாமிரவருணி ஆறு கடலில் கலக்கும் இடத்தின் வடபகுதியில் கொற்கையும் தென்பகுதியில் காயல்பட்டினமும் உள்ளன, பாண்டிய வேந்தர்களின் இரண்டாவது தலைநகராகவும் முதல் துறைமுகமாகவும் இருந்த கொற்கையின் ஒரு பகுதியே காயலும் ஆகும். கடல் உள்வாங்கியதால் கொற்கை சிறப்பிழந்தபோது காயல்பட்டினமே துறைமுகமாக விளங்கியது. காயல் துறையும் மணல் மேடிட்ட பின்புதான் தூத்துக்குடி (திருமந்திர நகர்) துறைமுகமாக வளர்ச்சி பெற்றது.

அன்று தென்காயல் என சிறப்பிக்கப் பெற்றது காயல்பட்டினமே. செஞ்ஞாயிறு என்றால் கருஞாயிறு இருக்கும் என்பது தவறு. தென்தமிழ் என்றால் வட தமிழ் ஒன்றுண்டு எனக்கூறுவது நகைப்புக்கிடனாகும். அதுபோலவே தென்காயல் என்றால் வடகாயல் ஒன்றில்லை என அறிதல் வேண்டும்.

தென்காயல் என்பதற்குஇனிய காயல்,தென்திசைக் காயல் எனப் பொருள்களுண்டு. இவற்றையறியாதவர்கள்தாம் கொற்கையும் காயலும் வேறெங்கோ இருப்பதாகக் கூறு

வர். தாமிரவருணிக் கரைகளில்தான் இவை இரண்டும் இன்றும் உள்ளன. அக்காலக் கொற்கைத் தலைநகரின் பகுதிகளான கொற்கை, அன்றிருந்த கொற்கையம்மன் கோவில், மணலூர், அக்கசாலை முதலியனவும் காயலின் பகுதிகளான பழையகாயல், மஞ்சள்நீர்க்காயல், புன்னைக் காயல், காயல்பட்டினம் முதலியனவும் இன்றும் உள்ளன.

கொற்கையின் மணலூர் பற்றிச் சங்க இலக்கியம் (அகம். 130) குறிப்பிடுகிறது. நீர் விளையாட்டுக்கு ஏற்ற மணல் திட்டுக்களையுடையது மணலூர். இத்தகைய மணலூர் மதுரையருகே வைகைக்கரையில் இன்றும் உள்ளது. கடற்கரை மணற்பரப்பைக் காயல், கானல் என்பர். தொல்காப்பியர் இதனை 'பெருமணல் உலகம்' என்கிறார். அங்குள்ள நகரங்களைப் பட்டினம் (சென்னைப் பட்டினம், நாகைப் பட்டினம், அதிராம பட்டினம், தேவி பட்டினம், காயல்பட்டினம்) என்றும், சிற்றூர்களைப் பாக்கம் (சேப் பாக்கம், கோடம்பாக்கம், நுங்கம்பாக்கம்) என்றும் வழங்குவர். அவற்றுள் காயல்பட்டினம் அறபு நாடுகளிலிருந்து வந்த முஸ்லிம்களின் குடியேற்றமாகியது.

தமிழகத்தில் கிரேக்கர், உரோமானியர் வாழ்ந்த பகுதி 'யவனர் இருக்கை' (சிலம்பு 5:10) எனப்பட்டது. ஜாவா, சுமித்ரா, மலேயா, பர்மா முதலிய நாடுகளிலிருந்து வந்தவர்களைச் சாவகர் என்றனர். அறபு நாடுகளிலிருந்து வந்த இஸ்லாமியர்களைச் சோனகர் என்றனர். அவர்கள் குடியேறிய காயல்பட்டினத்தின் (சோனகப்பட்டினம்). அருகே அவர்களுடைய வயல்கள் (விளை நிலங்கள்) இருந்த ஊர் இன்றும் உள்ளது. அதுவே சோனகன்விளை. அறபு மக்கள் தமிழருடன் இணைந்தனர். இதனால் மொழிக்கலப்பும் ஏற்பட்டது. அரிசி, அறபு மொழியில் அருஸ் என வழங்கியது. அறபுமொழியின் பந்தர் தமிழகம் வந்தது. பறங்கிப்பேட்டை 'மஹ்மூது பந்தர்' என வழங்கப்படுவது காண்க. சென்னை நேதாஜி (சைனா பஜார்) சாலையில் உள்ள பந்தர் தெருவைக்காணலாம்.

காயல்பட்டினத்தின் மிகப் பழைய பெயர் பவித்திர மாணிக்கம் என்பதை இந்நூல் (பக். 108 - 118) நிறுவுகின்றது மற்றக் கட்டுரைகளும் இதை வலியுறுத்துகின்றன. இத்தகைய ஊர்ப் பெயர்கள் வேறிடத்திலும் காண முடிகிறது. வீரமாணிக்கம் (5 கி.மீ.), கண்டுகொண்டான்மாணிக்கம் (25 கி.மீ.) என்ற ஊர்கள் காயல் (பவித்திரமாணிக்கப்) பட்டினத்தின் அருகில் இன்றும் உள்ளன.

கன்னித் தமிழ் வளர்த்த காயலை இந்நூல் பல கட்டுரைகளிலும் குறிப்பிட்டுப் பாராட்டுகிறது. ஞானியார் சாகிபு எனப் போற்றப்பட்ட மூவருள் ஒருவரான புலவர் நாயகம் ஆலிம் அவர்களின் இலக்கியங்கள் ஏராளம். அவருடைய காப்பியங்கள், சிற்றிலக்கியங்களையெல்லாம் இக்கால மாணவர்கள் அனைவரும் கற்க வகை செய்தால் நலம் விளையும் அவற்றுள் சீட்டுக் கவிகள் சிலவற்றை எடுத்துத் தக்க விளக்கவுரை தருகிறது இந்நூல். அத்துடன் செத்தும் கொடை கொடுத்த சீதக்காதியின் வமிசா வழியைப் பற்றியும் ஆராய்ந்து தெளிவாக்குகிறது. வகுதை, காஹிரி எனப் போற்றப்படும் காயல்பட்டினத்தில் பிறந்த வள்ளல் சீதக்காதியைப் போல் வேற்றூர் சென்று குடியேறிய பெரியோர் பல இருந்தனர். வேற்று நாட்டுக்கும், குறிப்பாக இலங்கைக்கும் சென்று குடியமர்ந்துள்ளனர் என்பதை இந்நூல் எடுத்துக்காட்டுகிறது.

காயல்பட்டினத்தில் காணப்படும் கல்லறைக் (மீசான்) கற்களை ஆராய்வதற்குப் பன்மொழிப் புலமை வேண்டும். தமிழ், அறபு, மலையாளம், உருது, மணிப் பிரவாளமாகிய தமிழும் அறபும் கலந்த மொழிநடையிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. ஆயிரக் கணக்கில் புதைந்து கிடக்கும் அவற்றுள் சிலவற்றை வெளிச்சத்திற்குக் கொணர்ந்து அவற்றுக்குரிய நாதாக்களை மீண்டும் நடமாட வைத்துள்ள பெருமை ஒரு வலியின் சந்ததியாக வாழ்கின்ற இந்நூலாசிரியர் வரலாற்றறிஞர் அல்ஹாஜ் R. S. அப்துல் லத்தீபு அவர்களையே சாரும்.

அகழ்வு ஆராய்ச்சி செய்வதென்பது அவ்வளவு எளிதன்று. அன்றைய நெல்லை மாவட்டத் துணைப் பேராயர் டாக்டர் இராபர்ட் கால்டுவெல் அவர்கள் ஆங்கிலேய

ஆதிக்கம் நிலைபெற்றிருந்த அந்தக் காலத்திலேயே சிற்றூர்களுக்குச் சென்று அகழ்வாய்வு செய்ய இயலவில்லை! தமக்குரிய நிலத்தைத் தோண்டி வேளாண்மையைக் கெடுப்பதாக நிலக்கிழார்களின் எதிர்ப்பு, புதையல் எடுக்க வந்துள்ளார்கள் என்ற பொய்ப் பிரச்சாரம், இந்துக் கோவில்களைத் தகர்த்துவிடுவார்களோ என்ற அறியாமை விளைவிக்கும் குழப்பம் முதலியவைதாம் காரணங்கள் ஆகும். அறிஞர் கால்டுவெல் அவர்களுக்குப் பழைய காயலிலும் கொற்கையிலும் எழுந்த எதிர்ப்பை அவர் தமது ஏட்டில் குறித்துள்ளார். இதனைச் சென்னைப் பல்கலைப் பேராசிரியர் டாக்டர் இரா. பி. சேதுப்பிள்ளை அவர்களும் குறிப்பிட்டுள்ளார்.

இத்தகையஎதிர்ப்புகள் இல்லாதிருந்தால் பழையகாயல், காயல்பட்டினம் முதலியன ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டிருக்கும். காயல்பட்டினத்திலுள்ள வரலாற்றுச் சான்றுகளை அன்றே உலகம் அறிந்திருக்கக்கூடும். 100 ஆண்டுகளுக்குப் பின் இந்நூலாசிரியர் அத்தகைய ஆய்வில் ஈடுபடும் போது பல இன்னல்கள், இடைஞ்சல்கள் ஏற்பட்டுள்ளன. பழைய கட்டடங்கள் அழிதல், கல்வெட்டுக்கள் தேய்ந்து போதல், புதிய கட்டடங்கள் தோன்றிப் பழைய தடயங்களை மறைத்தல், சுவடிகள் தொலைதல் முதலியன நேர்ந்துள்ளன. இருப்பினும் இந்நூல் காயல்பட்டின ஊர் முஸ்லிம் சமுதாயம், இஸ்லாமியத் தமிழிலக்கியம் முதலியவற்றின் வரலாற்று உண்மைகளுக்குக் கலங்கரை விளக்கமாகிறது என்பதில் ஐயமில்லை.

நூலாசிரியரின் ஆய்வுப்பணி மேலும் வளர்ந்து சிறக்க,
புதுப்புது நூல்கள் எழுதி அன்னைத்தமிழுக்கு அணிசூட்ட,
எல்லாம் வல்ல இறைவன் அருள்பாலிப்பாலிப்பாராக.

நாசரேத்,
02 - 02 - 93



வாழ்த்துடன்,
**செ. ப. சுருளிவேல்**

# அணிந்துரை


## பேராசிரியர், டாக்டர், அப்துல்ரசாக்
M.A., Ph.D.,

தமிழ்த்துறைத் தலைவர்,
ஆதித்தனார் கல்லூரி
திருச்செந்தூர்.


---

காயல்பட்டினம் என்றால் தாமிரபரணியாறு கடலுடன் கலக்கின்ற இடத்தில்அமைந்த ஊர் என்றுதான் என்று பலரும் பல ஆண்டுகளாக எண்ணிக் கொண்டிருந்தோம். அந்த இடம் இப்போதைய சிதம்பரனார் மாவட்டத்தில் திருச்செந்தூரில் இருந்து ஏழு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்த ஊர்தான். ஆனால் அண்மைக் காலத்தில், காயல்பட்டினம் என்பது வேறு ஊர் என்று வெவ்வேறு நூல்கள் வரத் தொடங்கி விட்டன. அதன்பிறகு விழித்துக் கொண்ட காயல்பட்டினத்து அறிஞர்கள் அந்த ஊரின் உண்மையான வரலாற்றைத் தாம் திரட்டிவைத்துள்ள ஆதாரங்களை மையமாகக் கொண்டு எழுதி நூல் வடிவில்வெளிவர வேண்டும் என்ற துடிப்பினைப் பெற்றனர். அவர்கள் எண்ணத்தின் உந்துதலால் வந்துள்ள வரலாற்று நூல்தான், ''காயல் பட்டினம்'' என்பது.

அல்ஹாஜ் அப்துல் லத்தீப் அவர்கள், வரலாற்றுப் பேரறிவும், விருப்பு வெறுப்பின்றி எழுதக் கூடிய ஆய்வுச் சிந்தனையும் கொண்டவர். ஏற்கனவே காயல்பட்டின வரலாறு குறித்துச் சில கட்டுரைகளைத் தந்துள்ளார். இப்போது விரிவான வடிவத்தில், ''காயல்பட்டினம்'' என்ற நூலைப் படைத்துத் தமிழ் உலகிற்கு வழங்கியுள்ளார்.

நான்கு வினாக்களுக்கு விடை சொல்லும் முயற்சியில் ஆசிரியர் ஈடுபட்டுத் தம்முடைய ஆங்கில மொழி அறிவையும் பயன்படுத்தி வெற்றி பெற்றுள்ளார்,

1) காயல்பட்டினம் என்பது எது?
2) அதன் தோற்றம் எந்த நூற்றாண்டில்?
3) கொற்கைத் துறைமுகம் எங்கே இருக்கிறது?
4) காயல்பட்டினத்திற்குரிய வேறு பெயர்களுக்கும் அதற்கும் உரிய தொடர்பு என்ன?

மேற்கண்டவற்றிற்கு விடை காணக் கல்வெட்டுக்கள், ஆராய்ச்சியாளர்கள் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதிய நூல்கள் ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டுள்ளார். தாம்பிரபரணியாறு கடலோடு கலக்குமிடத்தில் இப்போது அமைந்துள்ளதே காயல்பட்டினம் என்பதும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அது உருவாகியுள்ளது என்பதும் அவர் கண்டுள்ள தெளிந்த முடிவாகும். அதனை எளிமையும் இனிமையும் நிறைந்த தமிழில் எழுதியுள்ளார். தம் கருத்துக்கு முதன்மைஆதாரமாகவுள்ள கல்வெட்டுக்களைப் பற்றி ஒரு கட்டுரையும் எழுதி, அந்தக் கல்வெட்டுகளின் படங்களைத் தொகுத்துக் காட்டியிருப்பதும் நூலின் தகுதியை உயர்த்திக் காட்டுகின்றன.

காயல்பட்டினம் எது என்பதை நிறுவுவதோடு வள்ளல் சீதக்காதியும் அவ்வூரினரே என்பதை ஆதாரங்களோடு கூறுவதும் ஆசிரியர் பொறுப்பாகிறது. அந்தப் பணியையும் கல்வெட்டு, வரலாற்று நூல்கள், இலக்கியச் சான்றுகள் கொண்டு இனிதே நிறைவேற்றியுள்ளார். கன்னித் தமிழக்குக் காயல்பட்டினத்துப் புலவோர் ஆற்றியுள்ள தனிக் கட்டுரை சிறந்த படைப்பாகும்.

மொத்தத்தில் காலம் கடந்து வந்துள்ள வரலாற்று நூலாக இருந்தாலும் சிந்தனைக்கு விருந்து தரும் கருத்துக் களஞ்சியமாக அது அமைந்துள்ளது. காய்தல்,உவத்தலின்றி ஆய்ந்து பார்த்து உண்மை நிலை உணர்தல்தமிழுலகத்தின் கடமையாகும். இத்தகைய நூல்கள் பலவற்றை இன்னும் உருவாக்கி இன்பத்தமிழ்ப்பணி புரிய ஆசிரியரை வேண்டுகிறேன்.

அன்பன்,
**அப்துல்ரசாக்**

# மதிப்புரை


**திருமதி. எஸ். ஜெயா M.A., M. Phil.,**
வரலாற்றுப் பேராசிரியை
எ. பி. சி. மகாலட்சுமி மகளிர் கல்லூரி, தூத்துக்குடி.


---

அல்ஹாஜ், R. S. அப்துல் லத்தீபு, M.A. அவர்கள் எழுதியுள்ள ''காயல்பட்டினம்'' என்னும் இந் நூல், அண்மைக் காலத்தில் வெளிவந்துள்ள வரலாற்று நூல்களில் இடம் பெறும் ஒரு சில நல்ல படைப்புகளில் ஒன்றாகும். இந்நூலில் ஆசிரியர் காயல்பட்டினத்தின் வரலாற்றை மிகப் பழங்காலத்தில் இருந்து இன்றுவரை மிகவும் அழகாகவும் தெளிவாகவும் நிரலாகத் தொகுத்து எழுதியுள்ளார். களஆய்வுகள் மூலமும் பிறவகையாலும் தொகுக்கப்பட்ட பல்வேறு வகையான தொல்வியல், கல்வெட்டியல், இலக்கியவியல், பயணக் குறிப்பியல்களைப் பயன்படுத்தியும், முன்னரே வெளியான வரலாற்றியல் அறிஞர்களின் கட்டுரைகளின் துணை கொண்டும் உருவாககப்பட்டுள்ளது இவ்வரிய நூல்.

'காயல்பட்டின வரலாறு' இதுவரை முறையாக ஆராயப்படாமல் இருந்துள்ளது. முன்னைய வரலாறு அறிஞர்கள். ஆய்வாளர்களின் செய்திகள் அன்றி, பிற செய்திகள் அவ்வளவாக இதுவரை ஆராயப்படவில்லை. இக்குறையை இந்நூல் போக்கி விட்டது எனலாம். 1200 ஆண்டுகளுக்கும் மேலான மிகப் பழமை வாய்ந்த இவ்வூரின வரலாற்றை இந்நூல் நன்குவிளக்குகிறது. இவ்வூர் பல்வேறு ஆட்சிகளின் கீழ் அடைந்த அரசியல், பண்பாட்டு மாற்றங்களையும்

பல வகையான அழிவுகளையும் பற்றி விளக்குவதில் இந் நூலாசிரியர் மிகவும் முயன்று வெற்றி பெற்றுள்ளார்.

இந்த நூலில் வரலாற்று உண்மைகள் காயப்படாமல் அழகுடன் அணிநடை பயில்கின்றது. ஆசிரியரின் ஆய்வுத் திறமையும் நன்கு வெளிப்படுகிறது. M. PHIL., P.H.D. மாணவர்களுக்கு இந்நூல் மிகவும் பயன்தரும் என்பது குறிப்பிடத்தக்கது.

---

காயல்பட்டினத்துக் கல்வெட்டுக்கள் மட்டுமல்லாமல், அதனைச் சுற்றியுள்ள பிறபகுதிகளையும் அங்குள்ள கல் வெட்டுக்களையும், பிறதடயங்களையும் ஆராய்ந்தால், காயல்பட்டினத்தைப் பற்றிய மேலும் பற்பல புதியதகவல் கள்- வரலாற்று உண்மைகளும் வெளிவர வாய்ப்புண்டு. இதனை ஆய்வாளர்கள் மனங்கொண்டு ஆராயவேண்டும் இதற்கு தொல்பொருள் ஆய்வுக் கழகம் துணை நிற்க வேண்டும் என்று கூறலாம்.

இந்நூலில் கூறப்பட்டுள்ள கருத்துகள் யாவும் முடிந்த முடிவுகள் அல்ல என்று கருத வேண்டியது இல்லை. புதிய புதிய தகவல்கள், தடயங்கள் கிடைக்கும் போது கருத்துக்கள் மாறலாம்; எனினும் காயல்பட்டின வரலாற் றையும் பாண்டியநாட்டுவரலாற்றையும் அறிந்துகொள்ள இந் நூல் நிச்சயம் வழி வகுக்கும் என நம்பலாம்.

தமிழ் வரலாற்று உலகம் இந்நூலை வரவேற்கும் எனவும் நம்புகிறேன். ஆசிரியரின் இப்பணியைப் பாராட்டு கிறேன்.

தூத்துக்குடி, வாழ்த்துடன்,

05—02—93. S. ஜெயா.

# சீருரை

கவிஞர் எஸ். எம். அபுல் பரக்காத் எம்.ஏ., பி.எட்.,
தமிழ்த்துறை
தூய சவேரியார் மேனிலைப்பள்ளி
தூத்துக்குடி - 628 001

---

அன்று 'காயல்' எனவும் 'வகுதை' எனவும் 'காஹிறூன்' எனவும் 'தென்காயல்' எனவும் 'பவித்திர மாணிக்கப் பட்டினம்' எனவுமெல்லாம் வழங்கப்பட்டதும், இன்று ''காயல்பட்டினம்'' என்று அழைக்கப்படுவதுமான இந் நகர் சற்றேறத்தாழ 1500 ஆண்டுகளின் தொன்மையும் பெருமையும் சிறப்பும் கொண்டது. தமிழகம் போந்த அரபிய மக்கள், முதன் முதலில் தங்கள் 'குடியேற்றம்' அமைத்த கடற்கரைப்பட்டினம் இதுவேயாகும். இஸ்லா மியப் பெரும்பிரிவினரான ''ஷாபியாக்கள்'' தங்களின் ''ஷாபியா'' நெறிமுறைகளை, வணக்க வழிபாட்டு முறை களை அன்றே இம்மண்ணில் வித்தூன்றி, அந்த மரபு வழி யினையே இன்றளவும் முறையோடு பேணிவரும் ஒரே மண் இவ்வூரின் தொன்மையான மண்ணே, பாண்டிய நாட்டின் தண்பொருநைஆற்றின் பழமையோடும் பெருமை யோடும் தன் பழமையையும் பெருமையும் இணைத்துக் கொண்டு, அரபிய தமிழகக் கலைப் பண்பாட்டுக் கலப்பினைப் பெற்றது இம்மண்.

இவ்வூரின்கண் காணக்கிடக்கும் 'வரலாற்றுத் தடயங் கள்' பழமையானவை; வளமானவை. தொன்மையான பழங்காலம் தொட்டும் இன்றளவும் இடையறாத வர லாற்றுப் பின்னணியைப் பெற்றுள்ளது இவ்வூர். சங்கத் தமிழ் நூல்களும், பின்வந்த நூல்கள் பலவும், அறிஞர் பெருமக்கள் தம்குறிப்புகளும்அயலகப்பயணிகளின் பயணக் குறிப்புகளும் இவ்வூரின் அருமைபெருமைகளைப் போற்றிப் புகழ்கின்றன.

இவ்வளவு சிறப்புகளுக்கும் உரிய இவ்வூரின் வரலாறு இன்றுவரை முழுமையாகத் தொகுக்கப்படாமல் இருந்தது பெருங்குறையே. இந்தக் குறையை இந்நூலாசிரியர் தீர்த்துள்ளார் என்பது வெறும் புகழ் மொழியோ பொய்ம் மொழியோ அன்று. இந்திய, தமிழக, அயலக ஆய்வாளர்கள், வரலாற்று ஆசிரியர்கள் பலரும் பல கட்டுரைகள் வாயிலாகவும், சிறு சிறு நூல்கள் வழியாகவும், பயணக் குறிப்புகள் மூலமாகவும் இவ்வூரின் சிறப்பியல்புகள் பல வற்றையும் எடுத்து இயம்பி உள்ளனர்.

'ஷரீஅத்' நெறிமுறைகள் அகலா ஞானக் கோமான்களும் செல்வச் சீமான்களும் பெரும்புலமை வித்தகர்களும் வாழ்ந்ததும் வாழ்ந்து வருவதுமான புண்ணியப் பதி இது. அன்றும் சரி, இன்றும் சரி அருட்பயனும் பொருட்பயனும் மிகுந்த நன்னகர் இது. 'புலவர் கோட்டை' எனப் புவியோரால் போற்றப்பட்ட தொன்னகர் இது.

தமிழகத் தொல் பொருள்ஆய்வுத் துறையினர் இவ்வூரில் உள்ள மிகவும் பழமையானகல்வெட்டுக்களை ஆய்ந்து வெளியிட்டு உள்ளனர்.பிற தனிநிலைகல்வெட்டுஆய்வாளர்களும் ஆர்வலர்களும் இவ்வூரில்கல்வெட்டு, தொல்பொருள் ஆய்வுகள் செய்துள்ளனர். அவற்றின் மூலமாக இந்நகரின் பழமை, பெருமை, சிறப்புகள் வெளியிடப்பட்டுள்ளன.

இத்தகைய பல்வேறு ஆய்வுகளை அடித்தளமாகக் கொண்டும்,பல்வேறுஆய்வாளர்கள்,அறிஞர்கள்,வரலாற்று வல்லுநர்களின் ஆய்வுக் குறிப்புகள், கட்டுரைகள், பயணக் குறிப்புகள் போன்றவற்றைத் துணைகொண்டும், தமது அயரா முயற்சி உழைப்பு ஆய்வுத்திறன் இவற்றினாலும் "காயல்பட்டினம்" என்ற இந்த ஆய்வு நூலை மிகவும் சீர்மையோடும் செம்மையாகவும் யாத்துத் தந்துள்ளார் இந்நூலாசிரியர் சகோதரர் அல்ஹாஜ், R. S. அப்துல் லத்தீபு, M.A., அவர்கள்.

இந்நூலாசிரியர் அவர்கள், "அருளற நோக்கோடும், காய்தல் உவத்தல் அற்ற பண்போடும், கற்பனை கலவாத நெறியோடும், அருளே அல்லால் பொருள் விழையா நெஞ்சோடும்" இவ்வாய்வு நூலினை "காயல்பட்டினம்" என்னும் பெயரில் வெளியிட்டுள்ளார்.

குத்புஜ்ஜமான், அல்குத்புல் இஸ்லாம், காமிலொலி, அல்ஹாபிழ், அஷ்ஷெய்கு பெரிய ஷம்ஷுத்தீன் ஒலியுல்லாஹில் காஹிரி (ரழி:) அவர்கள்தம் 'மாண்பார் மரபில்' தோன்றிய இந்நூலாசிரியர் அவர்கள், தம் குலவழிப் பண்பில் நின்றும் பிறழாது, "உற்றது உரைக்கும் உயர் பண்பில் நின்று, உண்மைகளை உள்ளவாறு நுணுகி ஆய்ந்து, 'ஆய்வு இலக்கணம்' சிதையாமல், இந்த அரிய அருமையான நூலைத் தமிழ்கூறும் இஸ்லாமிய உலகினுக்கும், வரலாற்று உலகினுக்கும் வழங்கியுள்ளார்."

இந்நூலில் இடம் பெற்றுள்ள, 'காயலும் கொற்கையும்', 'காயலின் கல்வெட்டுகள்', 'பவுத்திர மாணிக்கப் பட்டினம்', 'காயலும் கன்னித் தமிழும்' போன்ற கட்டுரைகள் ஆய்வுப் புலமை மிக்கன; சிந்தைக்கு விருந்தாவன; தெளிவு தருவன; இந்நூலின் ஒவ்வொரு கட்டுரையிலும் ஓர் ஆய்வாளரின் பண்புகள் மிளிர்கின்றன. மேற்கூறப்பட்டுள்ள கட்டுரைகள் M. PHIL., PH.D. போன்றபட்டங்கள் பெற ஆய்வு செய்யும் ஆய்வாளர்கட்கு 'வழிகாட்டி' யாகத் திகழ்வன என்பதில் ஐயமில்லை.

அது போலவே, புலவர் நாயகம், வரகவி காசிம் புலவர், கவிஞர் ஷாம் ஷிஹாபுத்தீன் வலியுல்லாஹ், கவிஞர் நூஹ் ஒலியுல்லாஹ், உமறு வலியுல்லாஹ் ஆலிம் புலவர் போன்றோரின் கவிக்களஞ்சியங்களை உயர் நிலை, மேனிலைப் பள்ளி மாணவர்களின் பாட நூல்களில் இடம் பெறச் செய்ய வேண்டுவன என்பது சிந்திக்கற்பாலது.

தம் அரும்பெரும் முயற்சியால், அயரா உழைப்பால், தாம்சேகரித்த வரலாற்றுத் தடயங்கள், தகவல்கள், ஆய்வுக் குறிப்புகள், ஆகியவற்றை மிகவும் கூர்ந்து நோக்கி ஆராய்ந்து, தெளிவு பெற்று இந்தநல்ல நூலை செவ்வையாக எழுதியுள்ளார் இவ்வாசிரியர். இவரது இம்முயற்சி போற்றுதற்குரியது! பாராட்டுதற்குரியது.

வரலாற்று உலகமே இன்றளவும் சரியாக அறிந்து தெளிந்து வரையறுத்துக்கூறாத "பாண்டிய மன்னர் சிலரின் ஆட்சிக்காலம்" பற்றியும் இந்த அரிய நூல் ஆய்ந்து வெளியிட்டு இருப்பது பெருமைக்குரியது.! இவ்வரலாற்று ஆய்வு சில வரலாற்று ஐயங்களைப் போக்கியுள்ளது; வரலாற்றுப் புரட்டல்களை இனம் கண்டு காட்டியுள்ளது.

இந்நூலில் இடம் பெற்றுள்ள ''பவித்திர மாணிக்கப் பட்டினம்'' என்ற கட்டுரை வரலாற்று உலகுக்கு கிடைத்துள்ள ''வரப்பிரசாதம்'' என்பது மிகையன்று. இப்பகுதி பலப்பல புதிய உண்மைகளை தருவதுடன், தனித்தன்மையும் பெற்றது.

''மக்கள் தங்களைச் சுற்றியுள்ள பகுதியின் வரலாற்று உண்மைகளை முதலில் நன்கு அறிந்து கொள்ள வேண்டும்'' என்ற உன்னத, உயரிய இலட்சியத்துடன் இந்நூல் எழுதப்பட்டு உள்ளது என்ற உண்மை ''உள்ளங்கை நெல்லிக்கனி'' என விளங்குகிறது. காயல்பட்டணத்தின் பழம்பெருமை மிக்க வரலாற்றை இந்நூல் சிறப்பாகவும் தெளிவாகவும் விளக்குகிறது.

''காலப் போக்கில் ஓர் ஊரில், ஒரு நாட்டில் அல்லது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் ஏற்பட்ட மாற்றங்கள், அழிவுகள், அவற்றுக்கு அடிப்படையான காரணங்களை உணர்ந்து கொள்வதே 'வரலாற்றின் முதன்மையான குறிக்கோள்' ஆகும்''. இந்தக் குறிக்கோளை அடைவதில் இந்நூலாசிரியர் வெற்றி கண்டுள்ளார் என்பது துணிபு! இவ்வூரின் வரலாற்றையும் இவ்வட்டாரத்தின் வரலாற்றையும் மேலும் தெளிவாக அறிந்து கொள்ள இந்நூல் ஒரு வழிகாட்டியாகும் - துணையாகும் - தூண்டுகோல் ஆகும் என்பது திண்ணம்! அச்சுப் பிழைகள் விரவிக் காணப்படுவது அல்லால் வேறு எக்குறையும் இந்நூலில் இல்லை. அச்சுப் பிழைகள் அகற்றற் பாலன.

இந்நூலாசிரியரின் அரிய முயற்சிகளும் ஆய்வுத்திறனும் வளர, இதுபோன்ற பற்பல நன்னூல்களை வெளிக்கொணரும் ஆற்றல் பெற, இந்நூலாசிரியர் அனைத்து நல வளமும் சிறந்து வாழ வல்லானை வேண்டுகின்றேன். இந்நூலாசிரியரை வாழ்த்துகின்றேன்! இந்நூல் பதிப்புகள் பல காண வேண்டும் என்பது என் ஆவல்.

தமிழ் உலகம் இந்த அரிய நன்னூலை வரவேற்றுப் போற்றும் எனவும் நம்புகிறேன்.

அன்புடன்,

தூத்துக்குடி, சகோதரன்,

05—02—93 **S.M. அபுல் பரக்காத்.**

அவர்கள் தம்குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன. காயல் பட்டினத்தில் தோன்றி கீழக்கரையில் காயலார் என்று அன்று அறிமுகப்படுத்தப்பட்ட வள்ளல் சீதக்காதியின் வரலாறும் இந்நூலில் இடம்பெறுகிறது. தென்காயல் எதுஎன்பதையும், வள்ளல் சீதக்காதியின் வரலாற்றிலுள்ள முரண்பாடுகளும், ஆதாரமற்ற செய்திகளும் அவர் காலமாகிய ஊரும் விளக்கப்பட்டிருக்கின்றன.

புலவர் நாயகம் என்று பல்சமயப் புலவர்களாலும் உச்சி மேல்வைத்து மெச்சப்படுகின்ற காயல்பட்டினம் செய்கு அப்துல் காதிர் நெய்னா லெப்பை ஆலிம் புலவர் ஒலி அவர்கள் கீழக்கரை முகம்மது சதக்கத்துல்லா மரைக்காயர் அவர்களுக்கு எழுதிய மூன்று நிருபச் செய்யுட்களுக்குப் பொருளுடன் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. காகிர் நாட்டு வளம் பாடல்களில் இடம் பெற்று நிற்கும் பெயர்கள் அனைத்தும் காயல்பட்டினத்தையே உணர்த்துகின்றன என்பதை இந்நூல் கூறுகின்றது.

அறிஞர்களும், வெளிநாட்டுபயணிகளும் வரலாற்று வல்லுனர்களும் இலக்கிய மேதைகளும் மார்க்க ஞானவான்களும் ஆய்வாளர்களும், திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள தாமிரபரணி ஆறுகடலில் கலக்கும் இடத்தில்தான் மேன்மையும் பெருமையும் பொருந்திய காயலும் அதற்கு சற்று அண்மையில் தான் கீர்த்தியும் சிறப்பும் பெற்ற கொற்கையும் அமைந்திருக்கின்றன என்று சான்றுகளுடன் ஆணித்தரமாக அறிவித்திருப்பதையும் காயல்தான் கீழக்கரை, கொற்கைதான் கீழக்கரை என்று எழுதிய ஆசிரியர்களுக்கு காயலும், கொற்கையும் எங்கு அமைந்திருக்கின்றன என்பதையும் இந்நூல் நினைவுபடுத்துகிறது.

பல புலவர்களும், அறிஞர்களும் காயல்பட்டினத்தை வகுதை என்ற பெயரால் கவிதைகள் புனைந்துள்ளார்கள். தமிழகத்தில் முஸ்லிம்கள் அதிகமாகவாழும் சிலகுறிப்பிட்ட ஊர்களையும், வகுதை என்று கவிஞர்கள் பாடியுள்ளார்கள். அவ்வாறு பாடியுள்ள ஊர்களில் பல, காயல்பட்டின

மக்கள் குடியேறிய ஊர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. காயல்பட்டினம் தான் வகுதை என்பதை கல்வெட்டு வாயிலாகவும், மகான் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் போன்ற நாதாக்களின் பாடல்களாலும் இந்நூல் நிருபிக்கிறது.

காயல்பட்டினத்திற்கும் இலங்கைக்கும் உள்ள பழமையான தொடர்பையும், காயல்பட்டினம் சோனகர்களின் தந்தை நாடென்று இன்றும் மதிக்கப்படுவதை இலங்கை அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளதையும், இலங்கை முஸ்லிம்களின் முன்னோர்கள் தமிழகத்தின் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள காயல்பட்டினத்திலிருந்து சென்றார்கள் என்பதை ஆதாரங்களுடன் எடுத்து இயம்புகிறது. பவித்திர மாணிக்கப்பட்.டினம் என்பது அன்று எவ்வூரைக் குறித்தது? அவ்வூர் இன்று எங்குள்ளது? இன்று அவ்வூரின் பெயர் என்ன? பவித்திரணிக்கப்பட்டினம் ஒரு தனி ஊரை மட்டும் கொண்டு விளங்கியதா? போன்ற கேள்விகளுக்குச் சிறப்பான பதில்களை இந்நூலில் காணலாம்.

தென்காயல், காயல்துறை, காகிறூர், காயல்பட்டினம், வகுதை, வகுதைதுறை, பவித்ரமாணிக்கப்பட்டினம், சோனகர்பட்டினம் என்னும் பெயர்கள் காயல்பட்டினத்தையே குறிக்கின்றன என்பதற்கு சான்றாக காயல்பட்டினத்தில் கிடைத்தஅருமையான பழமையான கல்வெட்டுக்கள், நடுகற்கள் (மீஸான்கற்கள்) ஆகியவற்றின் விளக்கமும், தொல்லியல் ஆய்வின் போது இவ்வூரில் கிடைத்த தொன்மையான (ரோமானிய ரவுலட்டுகளும், வளையறுத்த சங்குகளும், சுடுமண் கிணற்று உரைகளும்) பொருள்களின் விளக்கமும் இந்நூலில் இடம் பெறுகின்றன.

கன்னித்தமிழ் காயல், மெஞ்ஞான களஞ்சியமாகவும் தமிழ்ப் புலவர் கோட்டையாகவும் விளங்குகின்றது. இங்குப் பைந்தமிழில் வல்ல புலவர் பலர் தோன்றி இறவாத பெருநூல்களை இயற்றியுள்ளார்கள் என்பதை ஆதாரங்களுடன் காணலாம்.

# மேற்கோள் நூல்கள் பட்டியல்
# (REFERENCE BOOKS)


A History of Tinnevelly — Bishop R. Caldwell
History of South India — K. A. Nilakanta Sastri
Pandyan Kingdom — K. A. Nilakanta Sastri
Foreign Notices of South India — K. A. Nilakanta Sastri
Indian Muslims — Prof. Mujeeb
Whither Islam — H. A. R. Gibb
Modern Trends in Islam H. A. R. Gibb
Travels of Marcopolo — Henry Yule
Tinnevelly District Gazetteer
Oxford History of India — Smith
A Dictionary of Indian History — S. Bhatta Charya
Historical Atlas of South Asia — Edited by Schwartzberg (University of chicago)
Concise History of Ceylon — Nicholos Paranvitana
A History of Tamil Literature — T. V. Sadasiva Pandarathar
Rise and fall of Korkai (Article) — T. V. Suderaraj (Journal of Tamil Studies)
History of Arabs — Philip K. Hatti
இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் — M.R.M. அப்துற்றஹீம்
முஸ்லிம் தமிழ் புலவர்கள் — M.R.M. அப்துற்றஹீம்
இஸ்லாமியத் தமிழ் இலக்கியக் கட்டுரைக் கோவை — இஸ்லாமியத் தமிழ் இலக்கியக்கழகம்
திருநெல்வேலி மாவட்டம் — S M.L. லட்சுமணசெட்டியார்
இராமநாதபுரம்மாவட்டம்—S M.L. லட்சுமணசெட்டியார்
இஸ்லாமிய இலக்கியக் கருவூலம் — ஆர். பி. எம். கனி
இஸ்லாம் வளர்த்த தமிழ் — டாக்டர் ம. மு. உவைஸ்
பாண்டியர் வரலாறு — டி. வி. சதாசிவப் பண்டாரத்தார்
சீதக்காதி வள்ளல் — டாக்டர் S. ஹுசைன் நயினார்
இலக்கிய வரலாறு — கா. சுப்பிரமணிய பிள்ளை

தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்
—டாக்டர் மா. இராசமாணிக்கனார்

பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள் — வெ. வேதாசலம்

அலையும் கலையும் — டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை

தமிழகத்தின் துறைமுகங்கள்—மா. ரா. இளங்கோவன்

தமிழக வரலாறு (1565-1982)—பேராசிரியர். வித்வான்
டாக்டர் ந. சுப்ரமணியன்

தமிழக வரலாறு —டாக்டர் மா. இராசமாணிக்கனார்.

தொல்லியல் ஆய்வுத் தொகுதி—தொல்பொருள் தொழில்
நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம், மதுரை.

சோநகர் கொற்கை —திரு. அ. இராகவன்

ஆற்றங்கரையினிலே —டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை,

பண்டைத் தமிழகமும் பலநாட்டறிஞரும்
—வித்துவான் அ. சி. மிக்கேல்சாமி

சின்ன சீறா —பனீ. அஹ்மது மரைக்காயர்

சீதக்காதியும் செந்தமிழ்ப்புலவரும்— கே.எம்.கே.அப்துல்காதிர்

இஸ்லாமியத் தமிழ் —முகமது ஆரிப் மியான்

தமிழ்நாட்டு இஸ்லாமியப் புலவர்கள் —பனைக்குளம்
மு. அப்துல் மஜீது

முஸ்லீம்களும் தமிழகமும் —டாக்டர் எஸ். எம். கமால்

தீன் விளக்கம் —வண்ணக் களஞ்சியப் புலவர்.




# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 12 | பொருந்தாக | —பொருந்தாத |
| 2 | 24 | மூலக்கசரணமாக | —மூலக்காரணமாக |
| 4 | 36 | பரைக்காயர் | —மரைக்காயர் |
| 6 | 6 | பகாரமாக | —பகரமாக |
| 8 | 5 | பரங்சிப்பேட்டை | —பறங்கிப்பேட்டை |
| 8 | 9 | அப்பட்டினங்கழி | —அப்பட்டினங்களி |
| 9 | 4 | தோன்றிய | —தோன்றியது |
| 13 | 20 | அரபியல் | —அரபியில் |
| 13 | 31 | காதிருய்யா | —காதிரிய்யா |
| 14 | 43 | சேரமன்னன், பாண்டியமன்னன் | —சேரமன்னன் |
| 19 | 19 | மணமக்களுவப்ப | —மண்மக்களுவப்ப |
| 22 | 21,21 | அக்காசாலை | —அக்கசாலை |
| 28 | 2 | மகள் | —மகன் |
| 29 | 33 | தஸ்பீக் | —தஸ்பீஹ் |
| 32 | 22 | மானா சாகிபு | —மனாகிபு |
| 39 | 20 | ஜாமினு | —ஜாமிலு |
| 41 | 7 | நீட்டும் | —தீட்டும் |
| 41 | 9 | பணிவுடமை | —பணிவுடைமை |
| 42 | 23 | பண்பல்லா | —பண்பல்ல |
| 45 | 4 | ஊறுதிபடுத்தி | —உறுதிபடுத்தி |
| 48 | 32 | முப்பாட்டனாரோ | —முப்பாட்டனாரே |
| 57 | 28 | ஐவாரண்ட | —ஐவராண்ட |
| 59 | 23 | தூத்துக்குடி | —தூத்துக்குடிக்கு |

| | | | |
|---|---|---|---|
| 67 | 12 | நாலில் | —நூலில் |
| 69 | 13 | கொற்கை | —பொருநை |
| 69 | 14 | பொருநை | —கொற்கை |
| 71 | 5 | காயல்பரை | —காயல்துறை |
| 78 | 10 | திருல்நெவேலி | —திருநெல்வேலி |
| 79 | 27 | கவக்கும் | —கலக்கும் |
| 85 | 27 | காணப்பட்ட | —காட்டப்பட்ட |
| 85 | 32 | தீராத்து | —தீரத்து |
| 89 | 32 | கீழக்கரைத்தான் | —கீழக்கரையைத்தான் |
| 94 | 26 | குடும்பகத்தை | —குடும்பத்தை |
| 95 | 9 | ஈன்று | —ஈண்டு |
| 98 | 17 | குலாம் காதிறு நாவலர் | —செய்குனா மரைக்காயர் |
| 105 | 2 | கலத்து | —கலந்து |
| 112 | 5 | தானைணயத்தில் | —தானையத்தில் |
| 118 | 24 | செவ்வனே | —செவ்வன |
| 120 | 26 | ஆய்யும் | —ஆயும் |
| 167 | 6 | முததாவது | —முதலாவது |
| 169 | 3 | காமாகி | —காலமாகி |
| 169 | 8 | மடலம் | —படலம் |
| 173 | 29 | தாயல் | —காயல் |
| 187 | 11 | லெம்பை | —லெப்பை |
| 187 | 22 | தஃப்ஸீர்லாமி | —தஃப்ஸீர் கலாமி |
| 184 | 15 | பதி | —பதிகம் |
| 184 | 16 | யவர்கள் பேரிற் பதிகம் | —பாஸி அவர்கள் பேரில் தகவல் |



# காயலின் வரலாறு

## [ஹிஜ்ரி 228 முதல் ஹிஜ்ரி 1000 வரை]

வரலாற்று வனப்பு வாய்ந்ததும் தூய இஸ்லாம் தமிழுலகில் தழைக்க தன்னிகரில்லா வாய்ப்பினை நல்கிய காயல்பட்டணம் சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதா? அல்லது நானூறு ஆண்டுகளுக்கு இடைப்பட்டதா என்றபிரச்சினையை கீழ்க்காணும் நூலாசிரியர்கள் எழுப்பியுள்ளார்கள். அவர்களில் ஒருவர் எம். ஐ. மரைக்காயர் (தமிழகத்தில் மார்க்கோபோலோ, இப்னுபதூத்தா-முதற்பதிப்பு மே 1981) மற்றொருவர் கவிஞர் கா. மு. ஷெரீப் (வள்ளல் சீதக்காதி வரலாறு-முதற்பதிப்பு செப்டம்பர் 1981) பிறிதொருவர் கேப்டன் அமீர் அலி. (வள்ளல் சீதக்காதியின் வாழ்வும் காலமும் முதற்பதிப்பு ஜனவரி 1983)

இவர்களின் நூற்களை படிக்கும் காலையில் இவர்கள் காயல்பட்டணம் வந்து பல இடங்களையும் ஆராய்ந்து, அறிஞர்களையும்,பெரியோர்களையும் அணுகிஎழுதவில்லை என்பதை இதன் வாயிலால் எளிதில் உணரலாம். காயல், காயல்பட்டணம், கொற்கை ஆகிய மூன்று ஊர்களையும் பற்றி விரிவாக எழுதப்பட்டுள்ள சிறந்த ஆங்கில, தமிழ், அரபி மூல நூல்களை படித்து, தெளிவுடன் எழுதியிருப்பதாகவும் புலனாகவில்லை. இம் மூன்று நூற்களுக்கும் மூலகர்த்தா M. I. மரைக்காயர் அவர்களே என்பதை படிப்பவர்கள் எளிதில் உணர முடியும். இவர்கள் சரித்திர ஆசிரியர்கள் சிலரின் சான்றில்லா முரண்பாடான கருத்துகளையும், ஐயத்திற்கு வகை அளிக்கும் கூற்றுகளையும் தன்னில் சாதகமாக்கி கொண்டிருக்கின்றனர்.

மார்க்கோபோலோவின் பயண நூலை மொழிபெயர்ப்பு செய்த சர். ஹென்றி யூல் (Sir. Henry Yuel) என்பவர் இப்போதைய காயல்பட்டினமே மார்க்கோபோலோ குறிப்பிடும் சிறப்புயர் காயல் என்று சான்றுரை பகர்கிறார். ஆனால் டாக்டர். கால்டுவெல் (Dr. Caldwell) காயலின் மறைவுக்குப் பின் அதன் அருகாமையில் எழுச்சியுடன் தோற்றம் கண்ட புதிய பட்டணம் காயல்பட்டணம் என அங்குள்ள மக்கள் கூறுவதாகதன்னுடைய நூலில் குறிப்பிட்டுள்ளார்.

காலத்தின் கோலத்தால் நிகழும் கடல் கோள் மற்றும் இயற்கையின் சீற்றத்திற்கு ஆட்படுத்தப்பட்ட இப்பகுதி மக்கள் சற்று தூரம்தள்ளி தங்களின் குடியேற்றத்தை அமைத்துக் கொண்டது இயல்பு. இதனையே இவ்வூர் மக்கள் மேற்கண்டவாறு சொல்லியிருக்கூடும். அத்துடன் நகரின் முக்கியப் பகுதிகளான துறைமுகப் பகுதி மற்றும் மக்கள் நெருக்கம் காணும் வியாபார பகுதியினின்றும் குடியிருப் பகுதியை சற்று தொலையில் அமைப்பதை இன்னும் நாம் காண்கிறோம். இதனாலேயே இவ்வூர் மக்கள் குடியிருப்பு பகுதியை சற்று தொலைவில் அமைத்திருக்கக் கூடும் என்பது தெரிய வருகிறது. இதற்காக வேண்டி காயல்பட்டணம் என்கிற ஊர் புதிய ஊர் என்ற கருத்து சிந்தனைக்கு பொருந்தாக ஒன்றாகும். டாக்டர்' ஹுஸைன் நயினார் (Dr. Nainar) அவர்கள் கால்டுவெல் அவர்களின் கருத்தையும் எழுதியிருப்பதுடன் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய ஊர் என்றும் எழுதியிருக்கிறார்கள் ஆனால்எம் ஐ.மரைக்காயர் கவிஞர்.கா.மு.ஷெரீப்,கேப்டன், அமீர் அலி ஆகியோர்களுக்கு காயல்பட்டினத்தின் மீது என்ன ஆதங்கமோ தெரியவில்லை. இவர்கள் மூவரும் காயல்பட்டினம் நானூறு வருடங்களுக்குள் தோன்றிய ஊர் என பொருள்பட எழுதியிருக்கிறார்கள். ஆனால் வள்ளல் சீதக்காதியைப் பற்றி டாக்டர். நயினார், கவிஞர் கா. மு. ஷெரீப், கேப்டன் அமீர் அலி போன்றவர்கள் மிகுந்த ஆர்வம் எடுத்து வள்ளல் சீதக்காதி கீழக்கரையில் பிறந்தார் என நிரூபிக்க முயலுகிறார்கள் அதற்கு மூலக்கசரணமாக செயல்படுவர் யார் என்பது தமிழக முஸ்லீம் மக்கள் அறியாத புதிரல்ல, வள்ளல் சீதக்காதி கீழக்கரையில் தான் பிறந்தார் என்பதை நிரூபிக்க வேண்டி காயல் பட்டினத்திற்குரிய பவித்திர மாணிக்கப்பட்டினம், வகுதை, தென்காயல் போன்ற பெயர்கள் கீழக்கரைக்கே சேரும் என்று எவ்வித ஆதாரமின்றி எழுதியுள்ளார்கள்.பவுத்திர மாணிக்கப் பட்டணம் என்றபழைய பெயர் காயல்பட்டினத்திற்கு உண்டு என்பதை காயல்பட்டினம் கற்புடையார்பள்ளியிலுள்ள கருங்கல் கதவில் பொறிக்கப்பட்டிருப்பதன் மூலமாயும், பழைய ஓலை பத்திரங்களில் பவுத்திர மாணிக்கப்பட்டினம் என்ற காயல்பட்டினம் என்று எழுதியிருப்பதன் மூலமும் அறியலாம் ஹதியா மாலை மூலம் வகுதை என்ற பெயர் காயல்பட்டினத்திற்கும் உண்டு என்பதை அறிகிறோம். கவிஞர்கள் காயல்பட்டினத்தை வகுதை, தென்காயல் என்றும் பாடியுள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கதொன்று வகுதை, தென்காயல்,



பவித்திர மாணிக்கப்பட்டணம் என்ற பெயர்களால் காயல் பட்டணம் அழைக்கப்பட்டது என்பதை காயல்பட்டினத்திலுள்ள கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது.

(விளக்கம் பெற — இந்நூலில் காயலில் கிடைத்த கல்வெட்டு குறிப்புகள் என்ற தலைப்பைப் பார்கக)

எனவே அறிஞர்கள்தீர ஆராய்ந்து உண்மையை புரிந்து எவ்வித பாகுபாடுமின்றி, உள்ள உணர்வுடன், சுத்த சித்தியுடன், இறையச்சத்தோடு நூற்களை எழுதுவது சிறப்புடையதும், நன்மை பயக்கக் கூடியதும் ஆகும். அறிஞர்கள் தவறுதலாக எழுதிய கருத்தை ஆதாரமாக எடுப்போமானால் எண்ணற்ற வினோதங்களும், பிரச்சனைக்குரிய விளைவுகளும் உருவெடுக்கும் என்பதை கீழ்க்காணும் எடுத்துக் காட்டுகள் விளக்குகின்றன. திரு. லசன் (Mr Lassan) என்ற எழுத்தாளர் கொற்கையை கீழக்கரை என குறிபிப்ட்டுள்ளார். மற்றும் ஓர் அறிஞர் கொற்கையை நேபாலில் உள்ள கூர்க் என்றும் குறிப்பிட்டு உள்ளார். கொற்கை திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபரணி ஆறுகடலில் கலக்கும் சிறப்பு மிக்க காயலுக்கு பக்கத்தில் உள்ள ஓர் ஊர் கீழக்கரை ராமநாதபுரம் ஜில்லாவிலுள்ள ஓர் ஊர். டாக்டர் நயினார் அவர்கள் ''சீதக்காதி வரலாறு'' என்ற அவரது நூலில் சுமார் 100 ஆண்டுகளுக்கு முன் எல்லா ஆசிரியர்களும் இப்போதைய காயல்பட்டினமே காயல் என்று கருதினர், ஆனல் டாக்டர் கால்டுவெல் கி பி. 1861-ல் இப்போதைய பழையகாயல்தான் அன்றைய காயல் எனக் கருதி எழுதி யுள்ளார். இவருடைய கருத்தையே பின்னால் வந்த சில ஆசிரியர்கள் தங்கள் நூல்களில் கூறியுள்ளார்கள். டாக்டர் கால்டுவெல்தான் இந்தகருத்தை திடமாகசொல்வதைவிட அங்குள்ள மக்கள்சொல்வதாக எழுதியுள்ளார்கள்.

டாக்டர் கால்டுவெல் தன்னுடைய நூலின் மற்றொரு பகுதியில் அரபிய முஸ்லீம்கள் ஒன்பதாம் நூற்றாண்டிலேயே மலபார்கடற்கரை பகுதியில் குடியேறி, அங்குஇருந்து கிழக்கு கடற்கரை பகுதியிலும், சிலோனிலும் குடியேறினார்கள். கிழக்கு கடற்கரையோரப் பகுதியில் அவர்களின் முக்கிய குடியேற்றம் திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள காயல்பட்டினம் தான். ''Muhammadan Arabs seem to have setled first on the Malabar coast in 9th century, and thence to have spread to the eastern coast and ceylon. Their principal settlement on the east coest is Kayalpatnam in Tinnevelly,, ( History of Tinnelvelly by BIshop R. caldwell)

மற்றொரு பகுதியில் டாக்டர் கால்டுவெல் திருவைக் குண்டம் அணைக்கட்டு கட்டும் போது கிடைத்த அரபி நாணயங்களும், தாமிரபரணி ஆற்றை ஒட்டி ஆழ்வார் திருநகர் பகுதியில் கண்டு எடுக்கப்பட்ட நாணயங்களிலும் அரபிக் குறிப்புகள் இருந்தன. அதில் ஒரு நாணயத்தில் ஹிஜ்ரி 71ஆம் ஆண்டு என்று பொறிக்கப்பட்டிருந்தது என்று குறிப் பிட்டுள்ளார் அக்காலத்தில் காயல்பட்டினத்திலும் குலசேகர பட்டினத்திலும் வாழ்ந்த அரபி முஸ்லீம்கள் கொண்டு வந்த நாணயங்கள் என்று எழுதுகிறார் டாக்டர் கால்டுவெல் அவர்கள் தன்னுடைய நூலில் மாறுபட்ட கருத்துக்களை ஏன் கூறுகிறார் என்பதனை ஆராயும் பொழுது அவர் காயலின் எல்லா பகுதிகளிலும் ஆராய்ச்சி செய்யவில்லை என்பது தெரியவருகிறது அவரும் ஒரே நாள்தான் இன்றைய பழையக் காயலில் அகழ் ஆராய்ச்சி பண்ணியதாக தன் நூலில் கூறிகிறார்: அங்கு குறிப்பிடதக்கவைகள் கிடைக்க வில்லை.ஆனால்உடைந்த சீன அரபி பீங்கான் துண்டுநிறைய கிடைத்தன என எழுதுகிறார், ''I visited old kayal twice and set many excavators at work for a day in a place about two miles from the present vIllage and found nothing of importance,, But I picked up every where on the open plain broKen pieces of china procelain of all qualities, and broken pieces of Arabian pottery,

டாக்டர் கால்டுவெல் அவர்கள் காயலின் மற்றொரு பகுதியாகிய காயல்பட்டணத்தில் அன்று அகழ் ஆராய்ச்சி செய்து இருந்தால் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து மறைந்தவர்களின் கல்லறை குறிப்புகளும் மற்றும்கல்வெட்டு குறிப்புகளும் ஆயிரம் ஆண்டுகளும் முந்திய பள்ளி வாயில் களின் அமைப்புகளையும் பார்த்திருப்பார் சரித்திரத்தில் அவருக்கு குழப்பமான கருத்துக்கள் ஏற்பட்டிருக்காது இருந்தாலும் இன்றைய காயல்பட்டினம், புன்னக்காயல் பழையகாயல், ஆகிய மூன்றும் ஒன்றை ஒன்று ஒட்டிய ஊர்கள் என்பதும், அன்றைய காயலின் மூன்று அங்கங்கள் என்பதையும் எல்லா வரலாற்று ஆசியர்களும், ஆராய்ச்சி யாளர்களும் ஏக மனதாக ஏற்று கொள்கிறார்கள், எனவே காயல் இராமனாதபுரத்தில் உள்ள கீழக்கரையை குறிக்கும் என்றும் ஜனாப்இத்ரீஸ் மரைக்காயர் அவர்கள் எழுதுவது நகைப்பிற்குரியதாக இருக்கிறது.



இப்போதைய பழைய காயல் கடலை விட்டும் உள் வாங்கி 2 மைல் தூரத்தில் உள்ளது. காயல்பட்டினம் கடலோரமாக ஏறத்தாழ காயல் இருந்த இடத்திலேயே இருக்கிறது. இப்னுபதூதா, மார்க்கபோலோ போன்ற பயணிகள் குறிப்பிடும் காயலின் சிறப்பு காயல்பட்டினத் திற்குத்தான் இருக்கிறது. சுமார்1000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்துமறைந்த பெரியோர்களின் கல்லறைகள் இன்றும் இங்கு இருக்கின்றன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பள்ளி வாசல்பல மாற்றங்களுடன் கூடி,இன்று புதியநிலையில் கலை நோக்குடன் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன. இப்பள்ளியை ஒட்டிய மையவாடிகளில் பல நாதாக்களின் மீசான் கற்கள் இருக்கின்றன. ஆயிரத்தி ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன் அரபு நாட்டிலிருந்து வந்த பரம்பரையினர் இன்றும் இருக் கின்றார்கள். அவர்களின் குடும்பவழிமுறை (சில்சிலா) குறிப் பேடுபலரின் கையில் இன்றும் இருக்கின்றன.

According to Marcopolo Kail, now forgotton, was a long famous port on the coast of What is now the Tinnevelly District of the Madras presidency. It is mentioned as a port of Ma'bar by Rashiduddin ........ It is mentioned as cahila, the site of the pearlfishery, by Nicolo (History of Tinnevelly by Dr Caldwell)

''Cahira காஹிரா'' என்பது காயல்பட்டினத்திற்குரிய அரபி பெயர் என்பதை யாவரும் அறிவர், சரித்திர ஆசிரியர் களாகிய வாசாப் அப்துல்ரசாக்,ராஷியுத்தீன், நிக்கலோ ஆகி யோர் குறிப்பிடும் காயல்தான் இப்போதைய காயல், காயல் பட்டினம். சுருங்கக்கூறின் பழையகாயல், புன்னக்காயல், காயல்பட்டினம் மூன்றும் ஒரு ஊராகத்தான் அன்று திகழ்ந்திருக்கிறது.

கி.பி 1500ல் போர்த்துக்கீசியர்கள் கொச்சியில் நுழைந் தபின் காயல் முஸ்லீம்களின் சிறப்பையும், செல்வாக்கையும், வியாபார வலிமையும் கண்டு சகிக்க முடியாத பொறாமை கொண்டு அப்பகுதியை கைப்பற்ற விரும்பினார்கள், 1532-ல் போர்த்துக்கீசியர்கள் காயலில் படையெடுத்தார்கள். காயலின் ஒரு பகுதியில் வாழ்ந்த பரதவ மீனவர்கள் கத்தோலிக்க கிறிஸ்தவ மதத்தில் (Cathloic Christian) சேர்ந்தார்கள். மற்றொரு பகுதியாகிய காயல்பட்டினத்தில் வாழ்ந்தமுஸ்லிம்களின் தீவிர மார்க்கப்பற்றை கண்ட போர்த் துக்கீசியர்கள் இவர்களுக்குபலவிதஇடையூறுகளைச்செய்தார்

கள். இக்காலத்தில் இங்குஇருந்த முஸ்லிம்கள் இலங்கைக்கும் மற்றும் தமிழகத்தின் பலபகுதிகளுக்கும்சென்றுர்கள்என்பதை அறிகிறோம். பிசப் கால்டுவெல் அவர்கள் காயலில்உள்ள பரதவ மீனவர்கள் தங்கள் பகுதியில் உள்ள முஸ்லிம் தலைவர்களை ஒடுக்க கொச்சி சென்று போர்த்துகீசியர்களின் உதவியை நாடினார்கள்என்றும் அவர்களின் உதவிக்குபகாரமாக கிறிஸ்தவ மதத்தில் இணைய ஒத்துக்கொண்டார்கள் என்றும் எழுதுகிறார்கள்.

"The first recorded appearance however ofany portuguese expedition on the Tinnelvelly coast was in 1532 when a depu tation of Paravas, people of the fisher cast came to Cochin for the purpose of obtaining the aid of protugeuse against the Moors or Muhammadans The chief place along the coast then as now inhabited by Muhammadans was Kayalpatnam priests accompanied the fleet which sailed for purpose of chastising the Muhammadans and as soon as that object was accomp lished set about baptizing the paravas all along the coast in accordance with their agreement into which their representati ves, had entered The entire Parava caste adopted the religion of their portuguese delivers,,. (Bishop R. Caldwell)

சுமார் இருபது ஆண்டுகள் காயல்பட்டணம் முஸ்லிம்கள் போர்த்துகீசியரின்தொல்லைகளுக்கு ஆளானார்கள். ஆனல் மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்கள் கி. பி 1550-க்குள் போர்த்துக்கீசியர்களின்அட்டூழியங்களைஅடக்கிவிட்டார்கள் என்பதை அறிகிறோம். இந்நிகழ்ச்சி கிருஷ்ணபாயர்காலத்திலென்றும் சிலர் விஸ்வநாத நாயக்கர் காலத்தில் நடந்தது என்றும் கூறுகிறார்கள். கி. பி. 1623 மதுரையை ஆண்ட திருமலை நாயக்கர் காயல்பட்டினம் மக்களுக்கு சில சலுகைகளைச் செய்துகொடுத்து ஒருபட்டயமும் எழுதி கொடுத்தார் என்பதை காயல்பட்டினம் கண்ணகுமது மகுதூம் முஹம்மது புலவரால் எழுதி வெளியிட்ட சில பாடல்கள் திரட்டில் காணப்படுகிறது. பட்டயத்திலுள்ள வாசகம் ''எலினவாகு திருமலை நாயக்கர் காரு காயல்பட்டணம் ஆகிய சோனகர் பட்டணம் கர்த்தா திருமலைநாயக்கர் செம்பிநாடு பவுத்திர மாணிக்கம்சோனகர் பட்டணம்பரிவாரனனுமுதலியாபிள்ளை மரைக்காயனுக்கு எழுதிக் கொடுத்தபட்டயம்.'' என்று யார் யாருக்கு எழுதிக்கொடுத்தது என்ற விவரம் காணப்படுகிறது.



இப்பட்டயத்தில் காணப்படும் வாசகங்களிலிருந்து கீழ்க் குறிப்பிடப்பட்டுள்ள நஞ்சைபுஞ்சை நிலங்களிலுள்ள வருவாயில் பாதி சோனகர்பட்டணம் மகுதூம்பள்ளிவாசலுக்கு மறுபாதி கச்சிஅம்மாள் பள்ளிக்கும்என்று கண்டிருக்கிறது. நிலங்களின் விபரம் பின் வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.''ஆவரன் காடு, வெள்ளைக்கோவில், தண்ணீர்பந்தல் வயல்களில் முதல் பாதி கச்சிஅம்மாள் பள்ளிக்கும் இரண்டாவது பாதி சோனகர் பட்டணம் மகுதூம் பள்ளிவாசலுக்கும்'' இவ்விதமாக எழுதி சங்கு சக்கரம் போட்டு கொடுக்கப்பட்டது என்று அப்பட்டயத்தில் காணப்படுகிறது. இப்பட்டயம் மூலம் காயல்பட்டணத்திற்கு பவுத்திர மாணிக்கபட்டணம் சோனகர்பட்டணம் என்னும் பெயர்கள் இருந்தன என்பது விளங்குகிறது.

பொதுவாக பதினாறாம் நூற்றாண்டில் ஏற்பட்ட போர்த்துகீசியரின் ஆதிக்கத்தாலும் பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் வந்த டச்சுக்காரர்களின் ஆதிக்கத்தாலும் முஸ்லீம்களின் கல்வியும், தொழில் வளமும், செல்வமும் ஓர் அளவிற்கு பாதித்தன இக்காலங்களில் இந்தியாவின்மற்ற பகுதியை ஆண்ட முஸ்லீம் மன்னர்கள் பாண்டிய நாட்டிற்குள் தங்கள் ஆட்சியை அமைத்துக்கொள்ளவில்லை. இதனால் முஸ்லீம்கள் தங்கள் சொந்த முயற்சியாலே கல்வி கற்கவும் தொழில் செய்யக்கூடியநிலையும் ஏற்பட்டது.பதினெட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட ஆங்கிலேயர்ஆட்சி காலத்தில்காயல் முஸ்லீம்களுக்கு சலுகைகள் கிடைக்கவில்லை. ஆங்கிலேயர் ஆட்சியில் திருநெல்வேலி ஜில்லாவில் பல பகுதிகளிலும் புரோடெஸ்டன்ட் கிறிஸ்தவ மதம் (Protestant Christian) பரவத் தொடங்கியது. இக்காலத்தில் உயர் கல்விக்கூடங்கள் எல்லாம் கிறிஸ்தவர்கள் கையில் இருந்தன. இக்காலத்தில் முஸ்லீம்களின் பலர்சரியாக உலகக்கல்வி பயில்வதில் அக்கறை செலுத்தாததால் முஸ்லீம் சம்மந்தப்பட்ட வரலாற்றில் பல மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன என்பது சில அறிஞர்களின் கருத்தாகும்.

டாக்டர் ஹுசைன் நயினூர் (''வள்ளல் சீதக்காதி'') என்ற நூலில் ''கி. பி. 7 முதல் 12-ஆம் நூற்றுண்டு வரை முஸ்லிம்கள் காயல்துறைமுகப்பட்டினத்தில்வாழ்ந்து வந்தார்

கள். காயல் துறைமுகம் தன் செல்வாக்கை இழந்த பின்பு, அங்கு வாழ்ந்து வந்த பெரியோர்கள். வணிகர்கள் ஆகிய இருவகை முஸ்லிம்களும் தென்கரையில் உள்ள மற்றைய ஊர்களுக்கு சென்று குடியேறினர். அவற்றுள் தென்காயல் என்ற கீழக்கரை, பரங்கிப்பேட்டை, முத்துப்பேட்டை முதலியன பிரசித்தி பெற்ற ஊர்களாகும். அவர்கள் புதிய நகரங்களை ஏற்படுத்தினார். அவற்றுள் சிறந்த நகரங்கள் புன்னைக்காயல் காயல்பட்டணம் முதலியனவாகும். அப்பட்டிணங்கழிலெல்லாம் வணிகரல்லாத முஸ்லிம்கள் பெருங்கல்விமாள்களாகவும் நல்லொழுக்கம் உள்ளவர்களாவும் ஞானிகளாவும், நன்னெறியை கற்பிப்பவர்களாகவும் வாழ்ந்திருந்தனர் என்பதை தமிழ்நாட்டு முஸ்லிம்கள் எல்லோரும் நன்கு அறிவார்கள். ''காயலுக்கு தெற்கே புன்னைக்காயல், காயல்பட்டணம், வீரபாண்டியன்பட்டணம் திருச்செந்தூர் தவிர கீழக்கரையோ, முத்துப்பேட்டையோ, பரங்கிரபேட்டைகளை போன்ற ஏனைய ஊர்களோ இல்லை. மேலும் புன்னைக் காயலில் முஸ்லிம்கள் வாழ்ந்ததாக எந்த சரித்திரமோ, ஆதாரமோ இல்லை. ஆசிரியர் அவரது வேண்டியவர்களின் விருப்பத்திற்கிணங்க எப்படி திசை திருப்புகிறார் என்பதற்கு இது ஒரு சிறந்த மேற்கோள். டாக்டர் நயினார் காயல்பட்டணம் என்ற பெயர் எப்பொழுதுதோன்றியது எனபது தெரியவில்லை எனறு தன் நூலில் ஒரு பகுதியில் மற்றொரு பகுதியில் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார். ''ஆங்கிலத்தில் எழுதப்பட்ட திருநெல்வேலி ஜில்லாகெஜட்டியார் என்றபுத்தகத்தில் காயல் பட்டினத்தின் விவரம் கீழ்க்கண்டவாறு குறிப்பீடு செய்யப்பட்டிருக்கின்றது எனவும் எழுதுகிறார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் அரபு நாடடிலிருந்து முஸ்லிம்கள் தென்னிந்தியாவிற்கு வந்து பாண்டிய வேந்தனின் அன்பினால் அவரிடமிருந்து 4 மைல் நீலமும் 1½ மைல் அகலமும், உள்ள இடத்தைப் பெற்று குடியேறினார்கள். என்று கெஜட்டில் உள்ளதை எழுதியுள்ளார். ஆனால் அவர் அக்கருத்தை ஒப்புக்கொண்டதாகவும் தெரியவில்லை, அதே நேரத்தில் டாக்டர் கால்டுவெல் காயல் அழிந்த பின் அப்பக்கத்தியில் தோன்றிய புதிய ஊர் காயல் பட்டணம் என அங்குள்ள மக்கள் சொல்வதாக எழுதியுள்ளதை ஒப்புக் கொண்டுள்ளார். டாக்டர் நயினாரின் எழுத்து முன்னுக்குப் பின் முரணாகவும், விநோதமாகவும் உள்ளது.



இக்கட்டுரையின் முக்கிய குறிக்கோள் காயல்பட்டினம் தோன்றி ஆயிரம் வருடங்களுக்கு மேல் ஆகின்றது என்பதை ஆதாரப் பூர்வமாக விளக்குவதேயாகும். பல வரலாற்று வல்லுநர்களின் கூற்றுப்படி காயல்பட்டினம் தோன்றிய கி. பி. 9-ம் நூற்றாண்டில், எகிப்தில் உள்ள 'கெய்ரோவில்' முகத்தம் மலை அடிவாரத்திலும் அதன் பக்கத்திலுள்ள 'கிரு பதுல்குபறா' என்ற ஊரிலிருந்தும் கி. பி. 842-ல் கலீபா 'அல்வாதிக்' அவருடைய காலத்தில் எகிப்தில் முஃதஸிலாக் கொள்கையை ஏற்றுக் கொள்ளாதவர்களில் சிலர் முஹம்மது கல்ஜி அவர்களின் தலைமையின் கீழ் கப்பல் மார்க்கமாக காயல்பட்டணம்வந்து சேர்ந்தார்கள். ஒருகவியின் கூற்றுப்படி ஹாக்ரு என்னும் வருடத்தில் நடைபெற்றதாக தெரிகிறது, ஹாக்ரு' என்ற அரபி வார்த்தையில் மூன்று எழுத்துக்களான ஹே-காப்-ரே ஆகியவை அரபியில் அப்ஜத்கணக்குப்படி ஹிஜ்ரி 228 (கி. பி. 843) முஹம்மது கல்ஜி இப்பகுதியை சீரிய முறையில் ஆட்சி செய்திருக்கிறார். காயல் மக்கள் மார்க்கத்திலும், வாணிபத்திலும் சிறந்து விளங்கியிருக்கிறார்கள். நுட்பமான ஆலிம்களாகவும் உழைப்புள்ள ஊழியர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள். இவ்வூரை பாண்டிய மன்னன் ஒத்துழைப்புடன் துறைமுகப்பட்டினமாக மாற்றி சீரிய முறையில் செங்கோல் ஆட்சி செலுத்தியுள்ளார்கள்.

நமது ஊரில் இதுவரையிலும் கிடைக்கப்பெற்ற பழைய மீஸான் கற்களில் ஒன்று, கோசு மறைப்பள்ளிக்கு அருகில் இருக்கிறது. அந்தமீஸான் கல்லில் கீழ்கண்டவிதத்தில் குறிக்கப்பட்டருக்கிறது. அதில் செய்யிது அஹமது பின் ஷாகிது இப்னு முஹம்மது கறீம் மதனி, கடற்கரைப்பள்ளி இமாம் எனகுறிப்பிடப்பட்டுள்ளது. அவர்களின் இறப்பு பிறை 8 துல் ஹஜ்ஜாமாதம் ஹிஜ்ரி 430-ஆம் வருடம் என குறிக்கப்பட்டிருக்கிறது இவர்கள் கோசுமறைப்பள்ளிக்குபக்கத்தில் அடங்கியிருப்பதால் அக்காலத்தில் இங்கு கடலோரமாக ஒரு கடற்கரைப்பள்ளி இருந்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் கோசுமறைப்பள்ளிக்கு கடற்கரை பள்ளி என்ற பெயரும் இருந்திருக்ககூடும் இக்கல்லறை குறிப்பிலிருந்து காயல்பட்டினம் 1000 ஆண்டுகளுக்கு முன் தோன்றியதென்று திட்டவட்ட

மாகதெரியவருகிறது. கோசுமறைபள்ளியில் அடங்கியிருக்கும் நாதாக்கள் காட்டு மொகுதூம் ஒலியுல்லாஹ் காலத்தைச் சார்ந்தவர்கள் என கருதப்படுகிறார்கள். மகுதூம் ஒலியுல் லாஹ் அவர்கள் ஹிஜ்ரி 446-ல் அரபு நாட்டில் ஹுசைன் (ரலி) அவர்கள் வம்சத்தில் பிறந்து நம் அருமை நாயகம் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸலம் அவர்களின் உத்தரவின் பேரில் மார்க்கத்தை போதிக்க காயல்பட்டினம் வந்தார்கள். அக்கால பாண்டிய மன்னன் அவர்களை கண்ணியப்படுத்தியதாகவும் தெரிகிறது, பல்லாண்டு காலம் காயல்பட்டணத்தில் வாழ்ந்து, மறைபோதித்து ஹிஜ்ரி 539ல் மார்க்க யுத்தத்தில் உயிர்த்தியாகம் செய்து காயல்பட்டினம் காட்டு மொகுதூம் பள்ளியில் அடக்கமாயிருக்கிறார்கள். காசிம் புலவர் ஒலி நாயகம் ''மக்கப்பதிக்கும்'' என்னும் பாடலை இங்குள்ள குளத்தில் நீராடும் பொழுது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அடியெடுத்து கொடுக்க புலவர் நாயகம் பாடியதாக அறிகிறோம். மொகுதூம் ஒலியுல்லாஹ் ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) (ஹிஜ்ரி 450-505) கௌதுல் அஃலம் முஹிய்த்தின் அப்துல் காதர் ஜீலானி (ரலி) (ஹிஜ்ரி 470-561) ஆகியோர் காலத்தைச்சார்ந் தவர்கள். காயல்பட்டணம் காட்டு மொகுதூம் பள்ளிக்கு உதயமார்த்தாண்டநகர்என்னும் பெயருண்டு. (ஹிஜ்ரி539-ல்) நடந்த யுத்தத்தில்மொகுதூம் ஒலியுல்லாஹ் ஷஹீதானார்கள் இங்கிருந்துகோமான்தெருவரைபலநாதாக்கள்போர்களத்தில் ஷஹிதாகி அடங்கியுள்ளார்கள். இவர்களுடைய கபுர்களும் இவர்களின் பெயர்களுடன் கூடிய நினைவுச் சின்னங்கள் இரட்டைகுளத்துப் பள்ளிபகுதியிலும் காதிர்ஒலி, யூசுப்ஒலி தர்ஹாக்களின் பகுதியிலும் கோசுமறைப் பள்ளிபகுதியிலும் மற்றும் சில இடங்களிலும் பரவிக்கிடக்கின்றன. தீவிரமாக ஆராய்ச்சி செய்தால் பலநாதாக்களின் சரித்திரங்கள் பழைய மீஸான். மற்றும் கல்வெட்டின் மூலமாய் கிடைக்க வாய்ப் புகள் உண்டு.

அமெரிக்காவிலுள் 'மினெஸ்ட்பிடா' பல்கலைக்கழ கத்தினரால் வரையப்பட்ட இந்தியப்படத்தில் தமிழகத்தில்



8 முதல் 12-ம் நூற்றுண்டு வரை இஸ்லாம் மதம் தழைத்த, தழைப்பதற்கு பேருதவி புரிந்த முக்கிய இடங்களாக காயல் பட்டினத்தையும், நாகூரையும்தான் குறிப்பிடப்பட்டிருக்கின் றன. மற்றஎந்த ஊரின்பெயரும் கிடையாது. எனவே எட்டாம் நூற்றாண்டிலேயே முஸ்லீம்கள் காயல்பட்டினத்தில் வாழ்ந் தார்கள் என்றும் அங்கு இருந்துதான் பிற இடங்களுக்குஇஸ் லாம் பரவத்தொடங்கியது என்பதை நன்கு உணர முடிகிறது. டாக்டர் நயினுர் அவர்களும் தங்களது ''சீதக்காதி வரலாறு என்றநூலில்கி. பி. எட்டாம் நூற்றாண்டிலேயே முஸ்லீம்கள் காயல்பட்டணத்தில் சிறப்பாக வாழ்ந்தார்கள் எனக்குறிப் பிட்டிருக்கிறுர்கள். மாப்பிள்ளைலெப்பைஆலிம் அவர்களும்தங்க ளது நூல் குறிப்பு ஒன்றில் முஹம்மது கல்ஜி அவர்கள் ஹிஜ்ரி 4 ஆம் நூற்றாண்டில் காயல்பட்டணம் வந்ததை குறிப்பிட் டுள்ளார்கள் தாங்களும் அவர்களின் (பரம்பரை) வழித்தோன் றல் எனவும் எழுதியுள்ளார்கள்.

காயல்பட்டினம் தாமிரபரணிநதியின் முகத்துவாரத்தில் கடலுக்கு அருகே அமையப்பெற்றிருக்கிறது. என்பதை டாக்டர்கால்டுவெல் யூல்மார்கோபோலோ போன்ற அறிஞர் கள்தங்கள் நூற்களில் எழுதியுள்ளார்கள். சுமித்என்றஆங்கில அறிஞர் மார்கோபோலோ தாமிரபரணிஆற்றோரமுள்ள காயலை 1288லும் *1293*லும் சுற்றிப்பார்த்தார் என்று தன்னு டைய நூலில் குறிப்பிட்டுள்ளார். Marcopolo visited Kayal on the Tamiraparani river twice in 1288 and *1293* Oxford History of India Smith) S. பட்டாச்சாரி என்னும் அறிஞர் தன்னுடைய இந்திய சரித்திர அகராதியில் காயல் என்பது தாமிர பரணி நதியோரத்திலுள்ள ஒரு வசதியானதுறைமுகப் பட்டினம் என்றும் கொற்கை திருநெல்வேலியிலுள்ள ஒரு முக்கிய துறைமுகம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

T. சுந்தர்ராஜ் என்பவர் தனது ஆங்கில நூலான ''Rise and fall of Korkai'' என்னும் நூலில் கொற்கை, காயல்பட்டி னத்தின் சரித்திரத்தை விரிவாக எழுதியுள்ளார் இவர் காயல், கொற்கை, புன்னக்காயல், பழையகாயல், எல்லாம் திருநெல்வேலி ஜில்லாவில் ஒரே இடத்

தில் அடைப்பெற்றிருக்கின்றன என்பதை குறித்துக்காட்டுகிறார். („Historical Atlas of South Asia-Edited by J. E. Schwarzberg, Chicago University Press) இந்த அட்லசில் இந்தியாவைப் பற்றிய எல்லையை குறிப்பிடும் பல வரைபடங்கள் காணக்கிடைக்கின்றன. அது தனிலே காயல்பட்டினத்தை தாமிரபரணி ஆறு கடலோடுகலக்கும் இடத்தில்குறித்து இருக்கிறது. காயல்பட்டினம் கி. பி. 843 ல் தோன்றியதும் தாமிரபரணி ஆறு கடலுடன் சங்கமமாகும் இடத்தில் அமைந்து இருக்கிறது என்பதற்கு மேலே கூறிய சாட்சிகள் சான்று பகர்கின்றன.

வரலாற்று வல்லுநர் ராஷித்தின் சுந்தரபாண்டிய மன்னன் கி.பி.1293ஆம்ஆண்டில் இறந்தபின் சுல்தான் ஜமாலுத்தீன் சுல்தானும் மதுரையில் ஆட்சி புரிந்தார் என கூறுகிறார் அரபிப்பாடல்கள் மற்றும் அரபி ஏடுகள் மூலம் சுல்தான் ஜமாலுத்தீன் அவர்களின் காயல்பட்டினம் வருகை (கி.பி' 1292) என அறியமுடிகிறது இவருடைய காலத்தில் கி.பி 1300ல் ஏற்கனவே முஹம்மது.கல்ஜி அவர்களால் கி.பி. 843ல் கட்டப்பட்ட 'மூடல் ஹவ்ளு' பள்ளியை இவர் புதுப்பித்து பிரமாண்டமான பள்ளியாக நிர்மானம் செய்தார்கள். இப்பள்ளி இவரது அருமைப் புதல்வர் சுல்தான் நூர்தீன் அவர்களால் ஹிஜ்ரி 737ல் (1336 A.D.) பூர்த்திசெய்யப்பட்டதாக தொல்பொருள் ஆராய்ச்சிக்கழக அறிக்கையின் மூலம்காணக் கிடைக்கின்றது. 1100 ஆண்டுகளுக்கு முன் துவங்கப்பட்ட இப்பெரிய ஜும் ஆ பள்ளி காயல்பட்டணத்தில்முதலாவதாக அமைக்கப்பட்டநெய்னூர் தெருவில்வண்ணப்பொலிவுடன் இன்றும் மிளிர்கின்றது. இப்பள்ளிக்கு ஆயிரங்கால் பள்ளி என்கிற புனைபெயரும் கூட உண்டு. சுல்த்தான்ஜமாலுத்தீன் அவர்கள் இப்பகுதியில் இருந்த ஆயிரங்கால் மண்டபத்தை விலைக்கு வாங்கி அதிலுள்ள தூண்கற்களை இப்பள்ளியை நிர்மாணிக்கும் பணியில் பயன்படுத்தினார். இதுவே அதற்கு ஒரு காரணப் பெயராகவும் அமைய நேரிட்டது. இங்குள்ள மையவாடியில் (கல்லறையில்) ஹிஜ்ரி 502ல் அடங்கியுள்ளரசீதுத்தீன் மன்னன் அவர்களின் மீஸான்கள் இருக்கின்றன. இன்னும்



பலருடைய பூர்வீக மீஸான் கற்கள் காணக்கிடக்கின்றன. எனினும் வருடங்கள்புலனாகாவண்ணம் காட்சி தருகின்றன. இதுவரை ஆய்வின் பலனாய் கிடைத்த ஆதாரப்பூர்வமான தகவல்படி சுமார் 900 ஆண்டுகளுக்கு முன்பே பெரிய குத்பா பள்ளி மையவாடியில்இறந்தோர்களை நல்லடக்கம்செய்திருக்கிறார்கள் என்கிற செய்தி அறியக்கிடக்கின்றது.

'இப்னு பதூதா, பத்தன்ஓர் அழகான நகரம் அதன்துறை முகம் மிகவும் வனப்பு வாய்ந்தது. அப்பட்டினத்தில் கல்லால் உருவாக்கப்பட்ட அழகிய மினாரக்களுடன் கூடியபள்ளி வாயில் ஒன்று கலையுடன் கூடியவண்ணம் காட்சி அளிக்கின்றது என குறிப்பிடுகிறார். 'இப்னு பதூதா' கி. பி. 1348-ல் பத்தன் வந்துள்ளார்கள். அவர் கூறுவதாவது ''நான் பட்டினத்தில் இருந்தபோது சுல்தான் கியாஷுத்தீன் அங்கு வருகைபுரிந்தார். அவரைசந்திக்கும் வாய்ப்பினை பெற்றேன் அவர் ஒரு வார காலம்பட்டினத்தில் தங்கிய பின் தலைநகராகிய மதுரைக்குபயணமானார் நானும் அவருடன் மதுரைக்கு சென்று விட்டு, பத்தன் (பட்டினம்) மீண்டும் வந்து, கப்பல் மூலம் திரும்பினேன் என குறிப்பிடுகிறார், மொரக்கோ நாட்டை தாயகமாககொண்டஅரபுபிரயாணி இப்னு பதூதா 'காஹீர் பத்தன்' என்று இன்றும் அரபியல் அழைக்கபடும் காயல்பட்டினத்தைத்தான் 'பத்தன்' என சுருக்கமாக குறித்துகாட்டுகிறார்.பழைமையான, கீர்த்தி பெற்ற ஏடுகளில் காஹிர் பத்தன்என்பதை இப்பட்டினத்திற்கேநடைமுறையில் குறிப்பிட்டு வந்திருப்பது உணரப்பட வேண்டிய ஒன்று.வேறு எந்த ஊரையும் இப்பெயரைக் கொண்டு அழைப்பதாக தெரியவில்லை இப்னு பதூத்தாகுறிப்பிடும் அழகியகல்லான மகுதி சுல்தான் ஜமாலூத்தீன் அவர்களால் புனரமைக்கப்பட்டது என்பது தெள்ளத் தெளிவாக நம் கண் முன் தெரியவருகிறது. இப்னு பதூதா எழுதிய பயணக்குறிப்பு அரபியல் எழுதப்பட்டதை இன்றும் நகரின் முக்கிய அரபிக் கலாசாலையனா மஹ்லறத்துல் காதிருய்யா அரபிக்கல்லூரியின் நூல்நிலையத்தில் அரிய பொக்கிஷமாக காக்கப்பட்டு வருகிறது.கி. பி.1292 இரண்டாம்முறையாககாயலுக்குமார்க்கோபோலோ விஜயம்

செய்தார். அவர் காயலில்நடந்தமுத்துவாணிபத்தை பற்றியும் சிறப்பாக எழுதியுள்ளார். அரபிகள் சிறந்த குதிரைகளை காயலில் விற்பனை செய்துவிட்டுமுத்தையும் பிறவனவற்றையும் ஏற்றுமதி செய்து வந்தார்கள் என்றும் தனது குறிப்பில் குறிப்பிட்டுள்ளார்.

காயல்பட்டணம் கீழ நெய்னார் தெருவில் அடக்கமாயிருக்கும் 'கலிபா' அப்பா அவர்களும் முத்துவாப்பா தைக்கா தெருவில் அடக்கமாயிருக்கும் (பஸலுல்லாஹ்) என்கிற ஈக்கி அப்பா அவர்களும் ஹிஜ்ரி 571ல் அரபுநாட்டிலிருந்து வந்துதீன்பணியாற்றி ஏர்வாடியில் அடக்கமாயிருக்கும் செய்யிது இப்ராகீம் ஷாகிப் ஒலி அவர்களுடன் பாரதம் வந்தனர். பின்பு கேரளாவில் உள்ள கண்ணனூரிலிருந்து பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்த அதிவீரராம பாண்டியன் புதல்வன் குலசேகர பாண்டியனின் வேண்டுதலின் பேரில் பாண்டி நாட்டுக்கு விஜயம் தந்து காயல்பட்டினம் வந்தார்கள். ஏர்வாடி செய்யிது இப்ராகீம் சாகிப் ஒலி இங்கு அடக்கமாயிருக்கும் தங்களது சிறிய தந்தை காட்டு மொகுதூம் ஒலி அவர்களை ஜியாரத் செய்து விட்டு கலீபா அப்பா மற்றும் ஈக்கி அப்பா அவர்களை காயல்பட்டணத்தில் இருக்கச் சொல்லி விட்டு, தாங்கள் மதுரைக்கு பாண்டிய மன்னனுடன் சென்று பின் ஏர்வாடியில் தங்கினார்கள் இவர்களும் பாண்டிய மன்னனின் வேண்டுகோளுக்கிணங்கி செய்யிது இப்ராகீம் சாகிப் அவர்களின் பொன்னான கட்டளையை பூவாக ஏற்று முறையே கலீபாவாகவும், தளபதியாகவும் கடமையுணர்வுடன் செயலாற்றினார்கள். இவர்களிருவரும் காயல்பட்டினம் வந்த காலையில் இவ்வூர் முஸ்லிம் மக்கள் தெருக்களை அழகாக முறையுடன் அமைத்து வசதியுடன் செல்வம் குலுங்க வாழ்ந்து வந்தனர். இவர்கள் இருவருமே தவசீலர்கள், ஞானமகான்கள், இறைநேசச் செல்வர்கள், சிறந்த நேர்மையான மார்க்க மேதைகள், பாண்டிய மன்னருக்கு சிரமக்காலங்களில் பேருதவியாக திகழ்ந்தனர். கலீபா அப்பா அவர்கள் இரக்க சிந்தனையாளர். அவர்களை மக்கள் 'கல்பு அப்பா' என்னும் அன்பு தழுவும் அழகிய நாமத்தால் அரவணைத்தார்கள். சேர மன்னன் பாண்டியமன்னன்



பாண்டிய நாட்டின் புகழ் பாடி நின்ற காயல் பட்டினத்துறைமுகத்தின்மீது படையெடுத்துசேனைகளுடன் தாக்குதல் நடத்த வந்தகாலையிலே சேரமன்னனின் செம்படையும், கடற்படையும் கரையைச்சேரா வண்ணம் காத்து நின்ற ஈக்கி அப்பா தொடுத்த கனையின் அம்புகள் தவசீலர்களின் தவவலிமையால் ஆழமான கடல் பகுதியும் கூட தளமாக காட்சி தந்து சேர மன்னனின் கப்பற்படை முன்னேறா வண்ணம் பின்னேர செய்தது. இன்றும் காயல்பட்டினம் முதற்கொண்டு மணப்பாடு வரையிலும் கடல் பகுதியினுள் பல மணற்திட்டுகள் காணக்கிடக்கின்றன. காயல்பட்டின முஸ்லீம் மக்களும் கூட கலீபா அப்பா ஈக்கி அப்பா அவர்களின் தலைமையில் அக்காலபாண்டியமன்னனின்வேண்டுகோளுக்கிணங்க அவனது சேனையில் இணைந்து நாட்டை காக்கும் பணியில் ஈடுபட்டு, மிகுந்த தேச பக்தியுடன் திகழ்ந்திருக்கிறார். அப்போரில் சிலர் வீரமரணமும் கூட அடைந்து உயிர்த்தியாகம் செய்த பெருமையை காயல்பட்டினத்திற்கு அளித்திருக்கிறார்கள். இறுதியாக ஹிஜ்ரி 596 முதல் 606 வரை நடந்த யுத்தத்தில் கலீபா அப்பா அவர்களும், ஈக்கி அப்பா அவர்களும் ஷஹீதானார்கள் எனத் தெரிய வருகிறது.

இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிகழகம் சமர்ப்பணம் செய்த சான்றுரையில் (Department of Archaeology, Annual Report of Indian Epigraphy for 1949 - 50) காயல்பட்டினம் சிறுபள்ளியில் அடங்கியிருக்கும் ஷுஹதா செய்யிது அஹமது அவர்களின் மரணம் ஹிஜ்ரி 670 (1272 A. D. ) என்பதை மீஸான்கற்களிலிருந்துகுறிப்புஎடுத்துதந்துள்ளார்கள்எனவே சிறுபள்ளி 730 வருடங்களுக்கு முந்தியபள்ளி என்பதை அறிய முடிகிறது இப்பள்ளி ஆரம்பத் தருவாயில் சிறியதாக இருந்தது. பின்பு சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் பட்டினத்தை ஆண்ட பிரபுக்கள், மற்றும் நெய்னார்களிடையே ஆட்சி பிரச்சனை வந்த தருவாயில் அதை ஒரு நெய்னார் பெரிய அளவில் திருத்தி அமைத்தார் என்பதை அறிய முடிகிறது.

காயல்பட்டணத்தில் இரண்டாவது பழமையான மொகுதூம் தெருவில்உள்ள மொகுதூம்பள்ளி மையவாடியில்

ஹிஜ்ரி 687-ல் அடங்கிய ஒரு பெரியாரின் மீஸான் இருக்கிறது இன்னும் பல மீஸான் கற்கள் இருக்கின்றன. அவைகளில் வருடம் மற்றும் அடங்கியிருப்பவரின் பெயர்கள் தெளிவாக இல்லை. இப்பள்ளி எழுநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டது. என்பதை இங்குள்ள சில மீஸான் கற்கள் புலப்படுத்துகின்றன. இப்பள்ளி மையவாடியில் பல ஆயிரக்கணக்கான இறைநேசச் செல்வர்கள் அடங்கியிருப்பதாக தைக்கா சாகிப் ஒலியுல்லாஹ் கூறியுள்ளார்கள். பெரிய குத்பா பள்ளிக்கு அடுத்த பழமையான பள்ளியாக சிறு பள்ளியும் மொகுதூம் பள்ளியும் திகழ்கின்றன.

காயல்பட்டினம் காரண சரித்திரத்தைத் தமிழுலகுக்கு படைத்துத்தந்த பாளையத்து லெப்பை ஆலிம் அவர்கள், முஹம்மது கல்ஜீ காயலில் இறங்கி வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட கடல் கொந்தளிப்பு, கடல் அரிப்பு போன்ற காரணங்களால் காயல்பட்டணத்தில் குடியிருப்புப் பகுதி சற்று உள்வாங்கி நிர்மாணம் செய்யப்பட்டிருக்கும் என்பதை நிரூபணம் செய்கிறார். அன்றைய பொழுதினில் வடக்கே கோமான் தெரு முதல் தென் கோடியில் காட்டு மொகுதூம் பள்ளி வரையிலும் ஒரே வீதியாக நகர்வளம் வந்ததை குறித்து காட்டுகிறார். செம்பி, பவுத்திர மாணிக்கம் என்பவர்கள் பாண்டிய மன்னனின் செல்வ புதல்வியர்கள், இதனாலேயே காயல்பட்டினத்தை செம்பிநாடு, பவுத்திர மாணிக்கப்பட்டினம் என்று பெயர் சூட்டி அழைக்கலாயினர், என்பதும் தெரியவரும் ஓர் உண்மை. சுமார் 1100 வருடங்களுக்கு முற்பட்ட ''மூடல் ஹவுளு'' பள்ளியை ஒட்டினாற்போல் சுல்தான் ஜமாலுத்தீன் பெரிய குத்பா பள்ளியை (ஹிஜ்ரி 700 - 730 ல்) கட்டினார் என்றும் தெரிவிக்கிறார்கள். சுல்தான் ஜமாலுத்தீன் அவர்களுக்குப் பின் அவர்களின் மக்களை நெய்னார் என்றும் பிரபுக்கள் என்றும் அழைத்தார்கள் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

கற்புடையார் பள்ளி' கோமான் பள்ளி, காட்டுப்பள்ளி ஆகியவைகளும் கூட பழங்கால பள்ளியாக கருதப்பட்டு வருகிறது. கற்புடையார் பள்ளியில் அபூபக்கர் ஒலியுல்லாஹ் அடங்கியிருக்கிறார்கள். அவர்கள் இவ்வுலகை விட்டும்



மறைந்த காலம் ஹிஜ்ரி 847 ஆகும். அன்றைய காலத்தில் இப்பகுதியில் குடியிருப்பு அதிகமாக இருந்ததாக ஏடுகளின் வாயிலாகக் காணக்கிடைக்கின்றது. மேலப்பள்ளியில் அடங்கியிருக்கும் செய்கு ஸலாஹுத்தீன் ஒலி (ரலி), ஹுசைன் பள்ளியில் அடங்கியிருக்கும் செய்கு ஹுசைன் ஒலி, பெரிய நெசவுத் தெருவில் அடங்கியிருக்கும் செய்கு ஜாபர் சாதிக் ஒலி ஆகிய மூவரும் உடன் பிறந்த சகோதரர்கள். இவர்கள் சிறந்த கல்விமான்களாகவும் இறைநேசச் செல்வர்களாகவும் வாழ்ந்து இருக்கிறார்கள். செய்கு ஸலாஹுத்தீன் ஒலி அவர்களின் மீஸான் கற்களின் மூலம் அவர்களின் இறப்பு ஹிஜ்ரி 819 என்பதை அறிகிறோம். இம்மூவரும் சுமார் 600 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து வந்த நாதாக்கள் என உணர முடிகிறது கொடிமரச் சிறு நெய்னார் பள்ளியைக் கட்டியவர் எனக் கூறப்படும் செய்கு அப்துல்லாஹ் மரைக்காயர் அப்பள்ளியின் மையவாடியில் அடங்கப்பட்டு இருக்கிறார்கள். இவர்களின் இறப்பு ஹிஜ்ரி 987. இவர்கள் சிறந்த அறிஞராகவும் அல்லாஹ்வின் நல்லடியாராகவும் திகழ்ந்திருக்கிறார் என்பது மீஸான் கற்கள் காட்டும் உண்மை.

காயல்பட்டினத்தில் சிறந்த நீதிமானாக வாழ்ந்த, காழியாக போற்றப்பட்ட பெரியார் காழி அலாவுத்தீன் அப்பா அவர்கள் அஹ்மது நெய்னார் பள்ளியை ஒட்டிய தைக்காவில் அடங்கியிருக்கிறார்கள். இவர்களின் மறைவு ஹிஜ்ரி 973. மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் மறைபோதித்த மகான் பெரிய சம்ஷுத்தீன் ஒலியுல்லாஹ் கொடிமரச் சிறு நெய்னார் பள்ளியில் ஹிஜ்ரி 1032 இல் வபாத்தாகி அடங்கியிருக்கிறார்கள். இவர்களின் மாணாக்கர்களில் மாண்புக்குரியவர்கள் சின்ன சம்சுத்தீன் ஒலி, அஹ்மது ஒலி, சதக்கத்துல்லாஹ் ஒலி, சலாஹுத்தீன் ஒலி, ஸாய் ஷிகாபுத்தீன் ஒலி ஆகிய ஐம்பெரும் மாணிக்கங்களின் தந்தையும், மரைக்காயர் பள்ளியில் அடங்கியிருக்கும் மகான் சுலைமான் ஒலியுல்லாஹ், பெரிய நெசவுத் தெரு பள்ளியில் அடங்கியிருக்கும் ஹாபிழ் அமீர் ஒலி, அதிராமபட்டினத்தைச் சார்ந்த மஹ்

தூம் சின்னீனு லெப்பை ஒலி ஆகியோர். மேலே குறிப்பிடப் பட்ட நாதாக்கள் பற்றி அவர்களின் புகழ்பாடி விண்ணில் வீதிவரும் மர்ளியா, மற்றும் தமிழ், அரபு நூற்கள் மூலம் அறியலாம். கொடிமரச் சிறு நெய்னுர் பள்ளி, அஹ்மது நெய்னுர் பள்ளி, மேலப்பள்ளி, ஆரும்பள்ளி, இரட்டைக் குளத்துப் பள்ளி போன்றவைகள் ஏறத்தாழ 400 ஆண்டு களுக்கு முற்பட்டது என்பது மீஸான் கற்கள் மூலமாக வும் தொல்பொருள் ஆராய்ச்சி ஏட்டின் வாயிலாகவும், அறிக்கையின் மூலமும் அவைகளின் பூர்விகம் குறித்தும் புகழைப் பற்றியும் அறிய வாய்ப்பாகிறது.

400 வருடங்களுக்கு முந்திய சரித்திரத்தை (ஹிஜ்ரி)228 முதல் ஹிஜ்ரி 1000 வரை மட்டும் எழுதியுள்ளேன். காயல் பட்டினம் 400 வருடங்களுக்கு உட்பட்டது என்று ஐயம் எழுப்பிய ஆசிரியர்களின் தூண்டுதலால் மற்றவர்களுக்சீர் மிகும் காயல்பட்டணத்தின் சிறப்புயர் வரலாற்றை அறியக் கூடியவாய்ப்பு ஏற்பட்டமைக்கு வல்ல இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்.

மார்க்கத்துறையில் மட்டுமல்ல, மற்றுமெல்லாத் துறை களிலும் மாண்பு கண்ட காயல்பட்டினம், கலங்கரை விளக்கம் காட்டி நின்ற இதன் சரித்திரம் படைத்தத் துறை முகம், இந்திய கட்டிடக் கலைக்கு மெருகுலூட்டும் கலைக் கட்டிடங்களின் சின்னங்கள் வனப்பூட்டும் மினுராக்கள், தூணின்றி நிமிர்ந்து நிற்கும் கட்டிடங்கள் கல்வி கண்ணை நிமிர்ந்து நிற்கும் அரபி கலாச்சாலைகள் உலக கல்வியை உரிய முறையில் போதிக்கும் உன்னத கல்விக் கூடங்கள் வண்ணமிகு பூங்காக்கள், நீண்ட கடற்கரையை தன்ன கத்தே கொண்ட இன்றைய காயல்பட்டினம் சுமார் 1000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பதை இப்பட்டினத் திலுள்ள கல்வெட்டுகளும், மீஸான்களும் (கல்லறைகற்களும்) அரபி நூற்களும் கவிதைகளும், மற்றும் வரலாற்று ஆசிரி யர்களின் ஆதாரப்பூர்வமான கருத்துக்களும் இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்தின் ஆய்வறிக்கைகளும் ஏனைய மேற்கோள்களும் எவ்வித ஐயமின்றி எடுத்து இயம்புகின்றன.



# காயலும் வள்ளல் சீதக்காதியும்

வள்ளல் சீதக்காதி திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள (இன்றைய சிதம்பரனார் மாவட்டம்)வரலாற்றுப் பெருநக ராம் காயல்பட்டினத்தில் பிறந்தார். இவர் பிறந்த ஆண்டு திட்டவட்டமாகத் தெரியவில்லை. இவர் வாழ்ந்த காலம் கி. பி. 1650 முதல் 1720 வரை என அறிகிறோம். இவரு டைய இயற்பெயர் செய்கு அப்துல் காதிர் இந்த பெயரே சீதக்காதி என மருவலாயிற்று. இவரது தந்தை மௌலா சாகிப் என்ற பெரிய தம்பி மரைக்காயர். மாதிஹீர் ரசூல் சதக்கத்துல்லாஅப்பாஉமறுப்புலவர், மாமன்னர்ஔரங்கசீப் படிக்காசுப்புலவர், கந்தசாமிப்புலவர், நமசிவாயப் புலவர் ஆகியோர் வள்ளல்சீதக்காதியின் சமகாலத்தவர். எல்லாப் புலவர்களும் சீதக்காதி பிறந்த ஊர் தென் காயல் என்றும் காயல் என்றும் எழுதியுள்ளார்கள். தென்காயல் என்பதும், காயல் என்பதும் காயல்பட்டினம் தான் என்பதற்கு சிறந்த சான்றுகளாக காயல்பட்டினத்தின் பழைமையான கல்வெட்டுகள் சாட்சி பகர்கின்றன. (ஆதாரங்கள் 1. பெரிய குத்பா மையவாடியிலுள்ள மீஸான்கல்'வகுதையான தென் காயல்பட்டணத்து,'' 2.கொடிமர சிறு நெய்னுர் பள்ளி கல் வெட்டு-''தென்காயல் நாட்டு மண மக்களுவப்ப தொழுகை அர்த்த மண்டபமும்'' 3. சிவன் கோயில் கல்வெட்டு-''தென் காயல் .............. சிவக்கொழுந்து சீருடை கழலான '') ஆனால் இக்காலத்தில் வாழ்கின்ற எம். இத்ரீஸ் மரைக் காயர் அவர்கள் அவர்களுடைய தமிழகத்தில் மார்க்கோ போலோ இப்னு பதூதா என்ற நூலிலும், கீர்த்திமிகும் கீழக்கரை என்ற நூலிலும் சீதக்காதி பிறந்தஊர் கீழக்கரை என்று எழுதியுள்ளார். இதை நிருபிக்க விரும்பி காயல் என்பது கீழக்கரையின் மறுபெயர் என்று கூறுகிறார். காயலும்' கீழக்கரையும் ஒரே ஊரா? என்பதை வரலாற்றுச் சான்றுகளுடன் ஆராய்வோமாக!

(தாமிரபரணி ஆறு பொதிகை மலையிலிருந்து உற்பத்தியாகி திருநெல்வேலி, திருவைகுண்டம், ஆத்தூர் வழியாக காயல்பட்டினம் கடலில் சங்கமமாகிறது. எல்லாச் சரித்திர ஆசிரியர்களும், ஆராய்ச்சியாளர்களும். வெளிநாட்டுபயணிகளும் ''தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்தில் தான் காயல் இருக்கிறது. என்று ஏகமனதாக முடிவு செய்து எழுதியிருக்கிறார்கள். ஆனால்எம். இத்ரீஸ் மரைக்காயர் அவர்களின் கூற்றுப்படி காயல்தான்கீழக்கரையென்றால்' காயலை கீழக்கரையாக்க பொதிகை மலையிலிருந்து உற்பத்தியாகும் தாமிரபரணி ஆற்றை, இராமநாதபுரம் வழியாக ஓடச்செய்து கீழக்கரை கடலில் கலக்கச்செய்ய வேண்டும். இத்தகைய நூதனமான எண்ணம் தேவைதானா? இதைவிட உண்மையை ஏற்றுக் கொள்வது நல்லதாகும். பல இறைநேசச் செல்வர்கள் காயல்பட்டினத்தில் பிறந்துகீழக்கரையில் அடங்கியுள்ளார்கள், அதுபோல சீதக்காதி அவர்களும் காயல்பட்டினத்தில் பிறந்து கீழக்கரையில் அடங்கியுள்ள உண்மையை ஏற்றுக் கொள்வதுதான் சான்றோர்க்குச் சிறப்புடமையாகும். கி.பி. 1292-ல்காயல்வந்த மார்க்கோபோலோ,காயல் எங்கே இருக்கிறது என்பதையும், அங்கு நடந்த வணிகத்தையும் பற்றித் தம் நூலில் சிறப்பாக எழுதியுள்ளார். மார்க்கோ போலோ கண்டகாயலை கர்னல்யூல், இவ்விதமாக வர்ணிக்கிறார். ''Kail now forgotton was a long famous port on the coast of what is now Tinnelvelly district of Madras presidency, It is mentioned as a port of Mabar by our authors contemporary Rashiduddin (Yules Marcopolo)

மார்க்கோபோலோ அவர்கள் சிறப்பு வாய்ந்த காயல் துறைமுகம் சென்னை மாகாணத்திலுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் அமைந்திருக்கிறதுஎனக் கூறுகிறார். மார்க்கோபோலோ காலத்தில் வாழ்ந்த ரசிதுத்தீன் என்ற எழுத்தாளர் காயல் மாஃபரின் துறைமுகமாக விளங்கியது எனக் கூறுகிறார். இவர்கள் காலத்தில் வாழ்ந்த வஸாப் என்ற பாரசீக வரலாற்று வல்லுநர் காயல் மாஃபரின் துறைமுகப்பட்டினமென எழுதுகிறார்.



Wassaf the persian historian a contemporary of Marcopolo thus describes Mabar (that is as I believe) Kayal the port of Mabar. கர்னல்யூல் மார்க்கோபோலோவின காயல் தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் (கழிமுகத்துவாரம்) இடத்திலிருந்து $1\frac{1}{2}$ மைல் உள்வாங்கி அமைந்திருக்கிறது என்று எழுதுகிறார். "The cail of Marcopolo is situated near the Tamraparni river, about a mile and half from its mouth'' 'டாக்டர் கால்டுவெல் கூறுகிறார் இரு இடங்களும் தாமிரபரணி ஆறு கடலோடு சேருமிடத்திலிருந்து தற்போது கடலிலிருந்து 5மைல்தள்ளி கொற்கையும், 2மைல்தள்ளி காயலும்இருக்கின்றன.ஆனால் பழையகாலத்தில் இரண்டும் கடலோரமாக இருந்தன. ''Both places are situated on the Delta of the Tamraparni. Korkai with in live, Kayal with in two miles on the sea but each was originally on the sea coast. (History of Tinnevelly by Bishop R. Caldwell)

சர் எலியட் என்ற அறிஞரும் திருநெல்வேலியிலுள்ள காயல்துறையைப் பற்றி சிறப்பாக எழுதியுள்ளார். வாஸ்கோடகாமா (Vascodagama) காயலுக்கு கி. பி. 1498-ல் வந்தார். இங்கு முத்துத் தொழில் சிறப்பாக இருந்தது என்று குறிப்பிட்டு இருக்கிறார்.

தமிழ் இலக்கியங்களில், காயல் என்ற புகழ் வாய்ந்த துறைமுகம் தாமிரபரணி ஆற்றின் கழி முகத்துவாரத்தில் உள்ள ஊர் எனக்காணக் கிடக்கின்றது. எனவே காயல், தென்காயல் என்பது திருநெல்வேலி (இன்றைய சிதம்பரனார் மாவட்டம்) மாவட்டத்தில் தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்திலுள்ள ஓர் ஊர் என்பது எல்லோர்களாலும் ஏற்று கொள்ளப்பட்ட கருத்தாகும். டாக்டர். டென்ஹாம் டாக்டர். புரோஹிர், ஸர் அலெக்ஸாண்டர், ஸர் சைமன், காஸி சிட்டி,ஏ. ஜி. ரணசிங் யோன்ற புகழ்மிக்க இலங்கை வர

லாற்று ஆசிரியர்கள் கி. பி. 1024ல் நெல்லை ஜில்லாவிலுள்ள காயலிலிருந்து முஸ்லிம்களின் ஒரு கூட்டம் இலங்கையிலுள்ள வேருவிளையில் குடிபுகுந்தார்கள். எனக் கூறுகிறார்கள். காயலுக்கு அருகில் இருப்பது கொற்கை. இதையும் M. இத்ரீஸ் மரைக்காயர் அவர்கள் கீழக்கரை என்று கூறுகிறார்கள். டாக்டர். ஆர். பி, சேதுப்பிள்ளை அவர்கள் கொற்கை என்ற கடற்கரை நகரம் பாண்டி நாட்டுச் சிறந்த துறைமுகமாகவும், முத்து விளையும் பதியாகவும் முன்னாளில் விளங்கிற்று, பொதியை மலையிலே பிறக்கும் பொருனை என்னும் தாமிரபரணி ஆறு கடலோடு கலக்கும் இடத்தில் கொற்கை மாநகரம் அமைந்திருந்தது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பாரறிந்த துறைமுகமாய்ப் பாண்டிக்கரையில் அமைந்திருந்தது கொற்கை நகரம். கொற்கையில் விளைந்த முத்து மரக்கலமேறி கடல் கடந்து சென்று, பிறநாட்டு மன்னர் முடிகளிலும் மாதர் அணிகளிலும் இலங்கிய செய்தியை பிறநாட்டார் குறிப்புக்களிலே காணலாம். தென்னாட்டு முத்து சென்ற இடங்களுக்கெல்லாம் பாண்டியன் பெருமையும் உடன் சென்றது. கொற்கையம்பதியில் நிகழ்ந்த வாணிகத்திற்கு இன்றியமையாதஅக்காசாலை ஒன்று துறைமுகத்தின் அருகே அமைந்திருந்தது. அக்காசாலை என்பது அரசன் ஆணையால் நடைபெறும் நாணயச்சாலை ஆங்கிலத்தில் Royal mint என்று சொல்லப்படும். நாணயச்சாலையே அக்காசாலையாகும், இத்தகைய சாலை ஒன்று கொற்கையின் அருகே அமைந்திருந்தடுதென்றால், அந்நகரின் வாணிகப் பெருக்கத்திற்கு வேறு சான்றும் வேண்டுமோ? இங்ஙனம் சிறப்புற்றிருந்த கொற்கை மாநகரம் நாளடைவில் நலமிழந்தது. பொருனையாறு மண்ணையும் மணலையும் கொண்டு துறைமுகத்தைத் தூர்த்து விட்டது மெல்ல மெல்ல, கடல் கொற்கையினின்றும் விலகிற்று. பாண்டியனும், பயனற்ற கொற்கையைக் கைவிட்டு, காயல், என்னுமிடத்தில் துறைமுகம் அமைத்தான்.



சரித்திர புகழ் பெற்ற கொற்கை பாண்டியநாட்டின் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள பழமையான துறைமுகப்பட்டினம் என்பது எல்லாருக்கும் தெரிந்தஉண்மை.

According to Tamil legend Cheran, Cholan, and Pandian were three brothers who at first lived and ruled in common at KorKai near the mouth of Tamiraparni The lands held by all three in common were Mukkani. (the three properties) near Korkai (History of Tinnevelly by Bishop R. Caldwell) தமிழ் புராணப்படி சேரர், சோழர். பாண்டியர் மூவரும் சகோதரர்கள். அவர்கள் முதலில் வாழ்ந்ததும் ஆட்சி செய்ததும் தாமிரபரணி நதி முகத்துவாரத்திலுள்ள கொற்கையில்தான். அவர்களின் சொத்து முக்காணி என்று அழைக்கப்படும் ஊர் என்றும் பிசப். கால்டுவெல் கூறுகிறார். முக்காணியும் கொற்கையும் காயல்பட்டிணத்திற்கு மிகவும் அண்மையிலுள்ள ஊர் என்பது குறிப்பிடத்தக்கது. நமது பாரதத்தின் முதல்பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் (Discovery of India) டிஸ்கவரி ஆப் இந்தியா என்ற நூலில் காயல்பட்டினத்திற்கு 1293 ல் மார்க்கோபோலோ வந்ததையும், அரபு நாடுகளிலிருந்தும், சீனாவிலிருந்தும் கூட்டம் கூட்டமாக கப்பல் காயல்பட்டினத்திற்கு வந்து போன செய்தியையும் வர்ணித்து எழுதியுள்ளார்கள். எனவேகாயலும், கொற்கையும் திருநெல்வேலிமாவட்டத்திலுள்ள (இன்றைய சிதம்பரனார் மாவட்டம்)இரு ஊர்கள். கீழக்கரை இராமநாதபுரத்திலுள்ள ஓர் ஊர் என்பது விளங்குகிறது.

தமிழ்மொழி ஆராய்ச்சி வல்லுநர் திரு. பூரணலிங்கம் பிள்ளை தமது தமிழ் இலக்கியம் என்னும் நூலிலும், ரஸிகமணி திரு. டி. கே சிதம்பர நாத முதலியார் தமது 'இதய ஒலி'' யிலும், கம்பர் தரும் காட்சியிலும் குருஞான பூபதிகள் தமது ''ஞானக்களஞ்சியம்'' என்ற நூலிலும் வள்ளல் சீதக்காதியின பிறந்த ஊர் காயல்பட்டினம் என எழுதியுள்ளார்கள். டாக்டர் உ. வே, சாமிநாத ஐயரின் முன்னுரையுடன் 1927ல் வெளிவந்த மதுரைத்தமிழ்ப் பேர

கராதியிலும் அறிஞர் குழுவால் ஆராய்ந்து சென்னை பல் கலைக் கழகம் 1926 ல் வெளியிட்ட கலைக்களஞ்சியத் திலும் 1902 ல் வெளிவந்த அபிதான கோஷம் என்ற நூலிலும், வேறு பல ஆராய்ச்சி நூல்களிலும் வள்ளலின் பிறந்த ஊர்காயல்பட்டினம் என்றேஎழுதப்பட்டிருக்கிறது.

''தினங் கொடுக்கும் கொடையானே
தென்காயல் பதியானே சீதக்காதி''

என்ற பூங்கோதையின் பாட்டாலும்

''தேட்டாளன் காயற்றுறைச் சீதக்கா திசிறந்த வச்சர
நாட்டான் புகழ் கம்பம் நாட்டி வைத்தான்............
சிறந்தாலும் காயற்றுரைச் சீதக்காதி திரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர் தமக்கு பிழைப்பில்லையே''

என்ற படிக்காசுப் புலவர் பாடல்களாலும் சீதக்காதி பிறந்த இடம் தென்காயல், காயல்துறை என்ற காயல்பட்டினம் என்பது புலனாகிறது. சோலை மலையைச்சார்ந்த வணங்காப்புலியின் மகன் ஒழுங்காப் புலி என்ற நொண்டிப்புலவர் சீதக்காதியைப்பற்றிய பாட் டில் காயலையும் கீழக்கரையையும் சேர்த்து பாடியுள்ளார்.

''காயலின் மகராயன் செய்தக்
காதியை திசை நோக்கிக் கையெடுத்தேன்
தாயென உபசரித்த - மாமு நெயினார்
தன்னை நினைத்ததே தாழ்ச்சி செய்தேன்
ஆழிசூழ் புவிவாழி - செருவில்
அரிய துறை சேதுபதி வாழி
கீழக்கரை வாழி - சிங்கக்
கேசச் சதக்கத்துல்லா வாழி''

இந்த நாடக செய்யுளில் புலவர், வள்ளல் சீதக்காதி பிறந்த காயலையும்,குறிப்பதோடுஅவர் இறுதியில்வாழ்ந்து மறைந்த கீழக்கரையையும் வாழ்த்துகிறார். அவருக்கு உதவிசெய்த மாமுநெயினாரையும்,மன்னர்சேதுபதியையும் அவருக்கு அறிவுரை வழங்கிய சதக்கத்துல்லா அப்பாவை யும் வாழ்த்துகிறார். பொதுவாக எல்லா கவிஞர்களும்



வள்ளல் சீதக்காதியைப் புகழும் போது, அந்த மகத்தான வள்ளலை,பெற்றுத் தந்த காயல்பட்டினத்தையும் சேர்த்தே புகழ்கின்றனர். முது பெரும் புலவர் பனைக் குளம் மு. அப்துல் மஜீதுப் புலவர் அவர்கள் தம்முடைய ''தமிழ் நாட்டு இஸ்லாமிய புலவர்கள்'' என்னும் நூலில் வள்ளல் சீதக்காதியைப் பற்றி எழுதியவற்றை ஈண்டு குறிப்பிடுகிறேன். சீதக்காதி 1650 ம் ஆண்டு இறுதியில் காயல்பட்டணத்தில் பிறந்தார். இவர் தந்தை மவுலா சாஹிப் என்னும் பெரிய தம்பி மறைக்காயராவார். தாய் சையத் அஹ்மத் நாச்சியார். சீதக்காதி உடன் பிறந்த ஆண் மக்கள் மூவர் இவர்களில் சீதக்காதி நடுவணுவார். சீதக்காதிக்குத் தாய் தந்தையரால் செய்கு அப்துல் காதர் என்று திருநாமம் சூட்டப்பட்டது. ''வள்ளல் சீதக்காதி இராமநாத புரத்தைச் சார்ந்த கீழக்கரையில் பிறந்தவர். இவர் தம் இறுதிக்காலம் வரை கீழக்கரையில் தான் வாழ் திருக்கிறார். இவர் உறவினர்கள் சுற்றத்தார்கள் அனை வரும் இன்றைக்கும் கீழக்கரையில் தான் வாழ்ந்திருக் கிறார்கள். இவருக்குக் காயல்பட்டினத்தில் எவ்விதமான தொடர்பும்கிடையாது. இன்னும் அந்தக்காலத்தில் இராம நாதபுரத்து வடக்குக் கரையிலுள்ள தேவிப்பட்டணத்தை வடகாயல் என்றும் தெற்குக் கடற்கரையிலுள்ள கீழக்கரையை தென் காயல் என்றும் பெயர் செப்பி அழை கப்பட்டிருக்கிறது. ஆகவே தென்காயல் என்பது கீழக்கரை யையேகுறிப்பிடுவதாகும் என்று வாதிப்பவர்களும் உண்டு'' இவை ஐயப்பாடாகும். காயல் என்பது கழிமுகம், கடலில் சங்கமமாகும் உவர் நீர் ஆறு. உப்புக்காய வைக்கும் உவர் நிலம் என்று பொருள். காயல் என்பது காய்தல் என்றுபொ ருளாகும். மேலே காட்டப்பட்ட தேவிப்பட்டணத்திற்கு வடகாயல் என்றும் கீழக்கரைக்குத் தென்காயல் என்றும் பெயர் வழங்கி வந்ததற்கு ஆதாரமான சான்றுகள் கிடைக் கவில்லை.

பால பருவத்தை தாண்டி தூயதான எவ்வனப் பருவத் தை அடைந்த சீதக்காதியின் இறைப்பற்றையும், நல்லொ

முக்கங்களையும் கனிவுதரும் இன்மொழிகளையும் நாளடைவில் கவனத்தில் கொண்ட மகான் சதுக்கத்துல்லா அப்பா அவர்கள் செம்மனத்திலே அவர்பாசம் இருப்பிடம் கொண்டு விட்டது. சீதக்காதியைக் காணும்போதெல்லாம் அவரிடம் அன்பு முகம் காட்டுவார்கள். இது கண்ட சீதக்காதியும் அப்பா அவர்களுக்கு முன்னிலும் பன்மடங்கு மரியாதையோடும்பணிவோடும்நடந்து கொள்வார். மார்க்க சம்மந்தமான நெறிமுறைகளை அப்பா அவர்களிடமே கேட்டுத் தெரிந்து கொள்வதோடு ஏனைய காரியங்களையும் அவர்களிடமே யோசித்து நடந்து கொள்வார். சீதக்காதி வர்த்தகத்தில் ஈடுபட சதக்கத்துல்லா அப்பா அவர்கள் துணைபுரிந்தார்கள். கீழக்கரையைச் சார்ந்த சேகு மரைக்கார் என்ற வியாபாரி சதக்கத்துல்லா அப்பா அவர்களைப் பார்க்க காயல்பட்டணம் வந்த போது சீதக்காதியை அவர்களுக்கு அறிமுகம் செய்தார்கள். சேகுமரைக்கார் சீதக்காதியை வாணிபத்தின் பொருட்டுகீழக்கரைக்கு கூட்டிச்சென்று தன் கம்பெனியில் சேர்த்தார். சில மாதங்களில் சீதக்காதி சங்கு வாங்கி விற்கும் தொழில்களை தெரிந்துகொண்டார். தனியாக வர்த்தகம் செய்ய விரும்பினார். சதக்கத்துல்லா அப்பா அவர்களின் அருளால் தூத்துக்குடியில் உள்ள அப்துல் மஜீது மரைக்காயர், அப்துல் காதர் மரைக்காயர், இராமேஸ்வரத்திலுள்ள அலிமரைக்காயர், ஆகியோர் சீதக்காதிக்கு அதிகமான சங்குகள் கொடுத்து வியாபாரத்தில் உதவி செய்தார்கள். இந்த சங்குகளை வங்காள சந்தையில் சீதக்காதி நல்ல விலையில் விற்றார். வாணிப சிறப்பாக நடந்தது. பெருங்கொண்டலாபம் கிடைக்க மரக்கலங்களை வாங்கி கப்பல் வர்த்தகத்தையும் வளம்படுத்திக் கொண்டார். வங்காளத்தில் ஒரு பெரிய கம்பெனியை ஏற்படுத்தினார். அதன் பின் தம்முடைய ஊராகிய காயல்பட்டணம் வந்து மக்கள் மனம் மகிழ கொடுத்தார்.

1670ம் ஆண்டில்ஆத்ம ஞான வள்ளல் மாதிஹீர் ரசூல் சதக்கதுல்லா அப்பா அவர்கள் காயல்பட்டணத்தை விட்டு கீழக்கரையில் குடியேறினார்கள். அப்போது தம் குருநாத



ரைப் பின்பற்றியது ஒருபுறமாகவும், தமது வர்த்தக கேந்திர பீடத்தை அமைத்துக்கொள்வதுமற்றொரு புறமாகவும் சீதக்காதியும் காயல்பட்டணத்தை விட்டும் கீழக்கரையில் குடியேறினார். சீதக்காதி கீழக்கரையில் குடியேறிய நாளிலிருந்து கீழக்கரை வாசிகள் அவரை காயிலார் என்று அழைப்பது வழக்கம். அவரை அயல் மனிதரிடம் அறிமுகப்படுத்த வாய்க்கும் போதும் காயிலார் என்றுதான் அறிமுகப்படுத்துவார்கள். இன்னும் அவர் குடியிருக்கிற வீட்டையும் காயிலார் வீடு என்றே சுட்டுவார்கள். இதனால் அந்தக் காலத்தில் சீதக்காதிக்கு காயிலார் என்ற புனைப் பெயரும் வழங்கி வந்தது. சீதக்காதி 1672ம் ஆண்டில் கீழக்கரையில் முஹம்மது ஆயிஷா நாச்சியார் என்னும் நங்கையைத் திருமணம் செய்து கொண்டார். அவ்வூரில் அக்கால வழக்கப்படி ஐந்நூற்றிபதினோர் களஞ்சிய மஹர் தொகைசெலுத்தி அம் மாதரசியை மணம் பண்ணியிருக்கிறார். சீதக்காதிக்கு இருமனைவிகள் இருந்தனர் என்றும் கூறப்படுகிறது. அப்படியாயின் இன்னோர் நாச்சியாரின் திட்டவட்டமான பெயர் நமக்கு கிடைக்காமைக்கு வருந்துகிறோம். இப்படி நாளிலேயே ஈகையெல்லாம் சீதக்காதியின் இதயத்திலே குடிகொண்டிருந்ததை அறிய முடிகிறது என்று பனைக்குளம் மு. அப்துல் மஜீது கூறுகிறார்.

வள்ளல் சீதக்காதியின் வரலாற்றைப் பற்றி ஒருமித்த கருத்துக்கள் இருப்பதாக தெரியவில்லை. பலரும் பலவிதமாக எழுதுகிறார்கள். கவிஞர் கா. மு. ஷெரீப், எம். இத்ரீஸ் மரைக்காயர், கேப்டன் அமீர் அலி போன்றோர் வள்ளல் சீதக்காதிக்கு ஆண்வாரிசு இல்லையென்றும், அவருடைய உடன் பிறந்த சகோதரர் மாமு நெய்னு மரைக்காயர் என்றும், அவருடைய முப்பாட்டனாரின் தந்தை மலிக் சுங்கம் கட்டளை செய்து மரைக்காயர் என்றும் எழுதியிருக்கிறார்கள். ஆனால் கவிஞர் அப்துல் ஹக்கிம் தம்முடைய ''சேது நாட்டு பெரிய தம்பி வள்ளல் சீதக்காதி'' என்னும் நூலில் கி. பி. 1851 ல் எழுதி வைக்கப்பட்ட சீதக்காதி மரைக்காயர் அவர்களின் சந்ததிகளின் மூல வாரிசு ஜாபி

தாவை வெளியிட்டிருக்கிறார். அதன் படி சீதக்காதியின் மகள் பெயர் சேகு கண்டு மரைக்காயர், சீதக்காதி அவர்களின் மூத்த சகோதரர் சேகு இப்ராஹீம் நெய்னு மரைக்காயர் இளைய சகோதரர் செய்யிது லெப்பைநெய்னுமரைக்காயர், சீதக்காதி அவர்களின் முப்பாட்டனாரின் தந்தை பெயர்சேகுகண்டுமரைக்காயர் இப்பெயரையே தம்முடைய ஒரேஆண்வாரிசான மகனுக்குச் சூட்டினார். இந்த வாரிசு ஜாபிதாஉண்மையாகஇருக்குமானால் எம். இத்ரீஸ் மரைக்காயர் அவர்கள் சீதக்காதி அவர்களின் நேர் வாரிசுக்குப் பதிலாக அவர்கள் சித்தப்பாமக்கள் வாரிசாக மாறுகிறார். இந்த வாரிசு முறையில் குழப்பங்களும், மாற்றங்களிருக்கும் போது எப்படி ஒழுங்கான தொடர்பு ஆதாரம் இல்லாமல், சுல்தான் தகீயுத்தீன் பரம்பரையில் கொண்டு அவர்களை சேர்க்கிறார் என்பது புரியவில்லை. அவர்கள்கண்மூடித்தனமாக எழுதி அவற்றை ஆதரித்து எழுதவும், அணிந்துரை அளிக்கவும் சிலர் இருக்கிறார்கள் என்பது வருந்தத்தக்கது.

அந்தக்காலத்தில் காயல்பட்டினத்தில் மரைக்காயர்கள் பெரும் வணிகர்களாகத் திகழ்ந்து குலசேகரன்பட்டினம், பெரிய பட்டினம், கீழக்கரை, அதிராம்பட்டினம் ,காரைக்கால், நாகூர், நாகப்பட்டினம்,பரங்கிப்பேட்டை, சென்னை பட்டினம் இடங்களிலெல்லாம் மரக்கலம் மூலம் வாணிபம் செய்து பெரும் பொருள் சேர்த்தார்கள். சென்ற ஊர்களில் எல்லாம் சிலர் ஞானிகளாகவும், மகான்களாகவும் வாழ்ந்து மார்க்கச் சேவை செய்து அந்தந்த ஊர்களிலே அடங்கப்பட்டிருக்கிறார்கள். சீதக்காதியும் சிறுவயதிலே மரக்கலத் தொழிலில் ஈடுபட்டார்.அதோடு முத்து,மரகதம் வியாபாரமும் செய்தார்.உண்மை உழைப்பால் உயர்ந்தால் இந்தியாவிலுள்ள கரையோரப் பட்டினங்களிலெல்லாம் வர்த்தகநிலையங்களை நிறுவினார்.இலங்கை,பர்மா, சீனா மலேசியா, சிங்கப்பூர், ஜாவா, கிரீஸ், பிரான்ஸ், ஹாலந்து முதலிய நாடுகளிலும் கிளைகளை நிறுவி பெரிய அளவில் வாணிபம் செய்தார். 17-வது நூற்றாண்டில் இந்தியாவின் சில பகுதிகளைத் தங்கள் ஆட்சிக்குள் கொண்டு வந்திருந்த கிழக்கிந்தியா கம்பெனியோடு 2-12-1686 ல் ஒரு வர்த்தக



உடன்பாடு செய்து கொண்டார். ஈழநாட்டு வேந்தர் விமல தர்ம சூரிய சீதக்காதியின் உற்ற நண்பர். அவர் ஐந்து ஆங்கிலேயர்களை வரம்பு மீறி நடந்து கொண்டதற்காக கைது செய்து வைத்தார். கிழக்கிந்தியக்கம்பெனியார் எவ்வளவோ முயன்றும் அவர்களை விடுதலைசெய்யமுடியவில்லை. எனவே ஈழநாட்டு மன்னரை வள்ளல் சீதக்காதி மூலம் அணுகினார்கள். சீதக்காதியின் வேண்டுகோளுக்கிணங்க ஐந்து ஆங்கிலேயர்களையும் விடுதலை செய்தார். இவ்வுதவிக்குப் பகரமாக கிழக்கிந்தியக் கம்பெனியார் வள்ளலின் பொருள்களுக்குஏற்றுமதி,இறக்குமதி வரிவிலக்களித்தொரு உடன்பாடு செய்துகொண்டார்கள் இது செயின்ட் ஜார்ஜ் கெசட்டிற்கு முன்னோடியான ‘ சிட்டிகூரியர் ‘ என்ற வெளியீட்டில் 30-1-1690ல் வெளியாகியுள்ளது.இதில் கவர்னர்யேல் என்பவர் கையெழுத்திட்டிருக்கிறார்.

வள்ளல் சீதக்காதி வங்காள கவர்னராக நியமிக்கப்பட்ட வரலாற்றை அறிவோமாக. காயல்பட்டினம் குத்புஸமான் சதக்கத்துல்லா அப்பா அவர்களைப் பற்றிக்கேள்விபட்ட மாமன்னர் ஔரங்கசீப் அவர்களை தென்னிந்தியாவுக்கு முப்தியாக நியமிக்க விரும்பினார். அதோடு வங்காள கவர்னராகவும் நியமிக்க விரும்பி அவர்களை டில்லிக்கு வருமாறு அழைத்தார். துறவிகள் அரசு உத்தியோகம் ஏற்க முடியாது எனக்கூறி மறுத்து விட்டார்கள். இவர்களின்பரிந்துரையின் பெயரில் வள்ளல் சீதக்காதியை வங்காள கவரனராக நியமித்தார். சதக்கத்துல்லா அப்பா அவர்களுக்குப் பதிலாக அவர்களின் மகன் முஹம்மது லெப்பை ஆலிமை தென்னிந்தியாவின் முப்தியாக நியமித்து ஜாகிர்களும் வழங்கி அதற்கான செம்பு பட்டயமும் எழுதி அனுப்பினார்கள். சிலகாலம் சீதக்காதி வங்காளகவர்னராகசெம்மையாக செயல்பட்டார். ஆனால் அங்குள்ள தட்ப வெப்ப நிலை ஒத்துவராததால் கவர்னர்பதவியைத்துறந்துவிட்டுதமிழகம் திரும்பி விட்டார். வங்காளத்திலிருந்து திரும்பிய சீதக்காதி மாமன்னர் ஔரங்கசீப்புக்கு பெரிய முத்துக்களாலான ஒருதஸ்பீக் மணிமாலை அன்பளிப்பாக அனுப்பிவைத்தார்.

மன்னரும் சீதக்காதிக்குப் பெருமதிப்புள்ள பலபரிசுகளை அனுப்பிக் கௌரவித்தார். முதறிஞர் ராஜாஜி வங்காளத்தின் ஆளுனராகப் பொறுப்பேற்றபோது தமிழ் நாட்டிலிருந்து இரண்டாவது ஆளுனராக வந்துள்ளேன் எனக்குறிப்பிட்டது இங்கு குறிப்பிடத்தக்கது. அக்காலத்தில் காயல் பட்டினம் முஸ்லிம்களுக்கும், திருச்செந்தூர் ஹிந்துக்களுக்கும் நல்ல ஒற்றுமை இருந்தது. திருச்செந்தூர் முருகன் கோயில்மேலக்கோபுரம் நாயக்கர் மன்னர் காலத்தில்கட்டப்பட்டது. கோபுரத்தின் ஆறாம் நிலை வந்தபோது பண நெருக்கடி ஏற்பட கோயில் நிர்வாகிகள் காயல்பட்டணம் வந்து வள்ளல்சீதக்காதியை வேண்ட, அவர்களும் பொருள் உதவி செய்தார் என்பதைச் சரித்திரம்மூலம் அறிகிறோம். இதே போல் வள்ளல் சீதக்காதி இராமேஸ்வர கோயிலுக்கும் மாண்யம் வழங்கியதை அறிகிறோம்.

வள்ளல் சீதக்காதி சேதுபதி மன்னரின் அமைச்சராக பணியாற்றியதை ஆராய்வோமாக, விஜயரகுநாதத் தேவர் என்ற கிழவன் சேதுபதி கேட்டுக்கொண்டதற்கிணங்க சில காலம் அவரின் அமைச்சராக இருந்து பணியாற்றினார். இக்காலத்தில் தான் வள்ளல் சீதக்காதி தங்கள் குடும்பத்தாருடன் கீழக்கரைசென்று குடியேறினார்கள் எனச் சொல்லப்படுகிறது. இவர்களின் குரு குத்பு ஸமான் சதக்கத்துல்லா அப்பாஅவர்கள், அவர்களின் இறுதிக் காலத்தில் கீழக்கரையிலிருந்து ஓதிக்கொடுத்துக் கொண்டிருந்ததால், இவர்கள் அங்குச சென்றதற்க்கு மற்றொரு காரணம் எனவும் கூறுவார்கள்.

வள்ளல் சீதக்காதிக்கும் எட்டையாபுரம் உமறுப் புலவருக்கும் ஏற்பட்ட தொடர்பை கவனிப்போமாக: எட்டையாபுர மன்னரின் அரசவைக் கவிஞராக உமறுப்புலவர் இருந்தபோது அங்குச் சென்ற வள்ளல் சீதக்காதி இவர்களின் திறமையைக் கண்டு இவர்களைக் காயல்பட்டணம் அழைத்து வந்து சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் அறிமுகம் செய்துஅண்ணல்நபி (ஸல்) அவர்கள் மீது காப்பியம் இயற்ற உரை கொடுச்குமாறு வேண்டினார். சிலர் இந்



நிகழ்ச்சி கீழக்கரையில்நிகழ்ந்ததாகஎழுதுகிறார்கள். ஆனுல் உமறுப்புலவரின் கோலம் கண்ட சதக்கத்துல்லா அப்பா அவர்கள்உரை கொடுக்கமறுத்து விட்டார்கள். அக்காலத்தில் காயல்பட்டினம், கீழக்கரை முஸ்லிம்களின் உடை, நடை, மார்க்க அடிப்படையில் தான் அமைந்திருந்தன. உமறுப் புலவர் இந்த இரண்டு ஊர்களில் ஒன்றைச் சேர்ந்தவராகயிருந்தால் உடை, நடையில் மாற்றம் இருந்திருக்காது. மனம் வருந்திய உமறுப் புலவர் அன்றுஇரவு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது கவிதைகள் பாடிவரும் போது துயில் கொண்டார். அன்று இரவு இவர் கனவிலும் சதக்கத்துல்லா அப்பா அவர்களின் கனவிலும் அண்ணல்நபி(ஸல்)தோன்றி உரைகொடுக்குமாறுசொல்லி மறைந்தார்கள். பின்சதக்கத்துல்லா அப்பா அவர்கள் உரை கொடுத்து தனது சீடர் பரங்கிப் பேட்டை மஹ்மூது தீபி அவர்களிடம் விளக்கம் பெற அனுப்பி வைத்தார்கள். உமறு புலவர், சீதக்காதி இறக்கவே பரங்கிப்பேட்டை அபுல்காசிம் மரைக்காயரிடம் உதவி பெற்றுப்பரங்கிபேட்டையிலே அரங்கேற்றம் செய்து எட்டையாபுரம் திரும்பினுர் என கூறுகிறார்கள்.

சில இலக்கிய வல்லுநர்கள் சீதக்காதிக்கும் சீறா புராணத்திற்கும் எவ்வித தொடர்பும் கிடையாது என்று நவில்கிறார்கள். சீதக்காதியின் பொருள் உதவியைபோ சதக்கத்துல்லா அப்பாவினறிவு உதவியையோ தாம் பெற்றமை பற்றிச் சீராபுராணத்தில் எந்த இடத்திலாவது உமறுப் புலவர் அவர்கள் குறிப்பிடவில்லை. சீறா புராணத்தை முதன் முதல் 1842 ல் (ஹிஜ்ரி 1258) பதிப்பித்த சேகுனுப் புலவர் அவர்கள்தான்சீறா புராணத்தின் காப்புச்செய்யுளை பாடினார் என குறிப்பிடப்படுவது போல சதக்கத்துல்லா அப்பா அவர்களைப் பற்றியப்பாடலைச் சீறாபுராணத்தில் காணாத புலவர் நாயகம் அவர்களைப்பற்றிய பாடலைப் பாடி இணைத்துள்ளார். என்ற கூற்றும் ஆராய்ச்சிக்குட்படுத்த வேண்டிய தொன்றாகும். என்று அல்ஹாஜ் டாக்டர் எம். எம். உவைஸ் அவர்கள் கூறுகிறார்கள். (புலவரும் புரவலரும் - 3வது அனைத்துலக இஸ்லாமியத் தமிழ் ஆராய்ச்சி

மகா நாடு) பனைக்குளம் மு. அப்துல் மஜீது அவர்களும் ஆர். பி. எம். கனி அவர்களும் இதே கருத்தையே பிரதிபலிக்கிறார்கள். உமறுப்புலவர் பாடியிருக்கிற சீறாப்பராணம் அவரது காலத்திலேயே நிறைவு பெற்றதாக இல்லை. அவர் தம் நூலில் விட்டுச் சென்ற பிற்பகுதிகளைக் காயல்பட்டணம் பனி அஹ்மது மரைக்காயர் புலவர் சின்னச் சீறா என்றுபாடி வரலாற்றை நிறைவு செய்ய வாய்த்திருக்கிறது உமறுப்புலவர் காப்பிய வரலாறு இவ்வாறிருக்கையில் அவர் காப்பியமே நிறைவு பெறாத நிலையில் அவர் எப்படிக் காப்பிய அரங்கேற்றம் நடத்தினார் ஒரு குறை நூலுக்கு அரங்கேற்றம் நடத்தப் பொருந்துமா? என்பதும் சிந்தனைக்குரியதாய் இருக்கிறது. நூல்முடிவு பெற்றிருந்தால் நூலுக்கு நூன் முகமோ சிறப்புப் பாயிரப் பகுதியோ ஏற்பட்டிருக்கும். நூலும் முடிவுபெறவில்லை அதற்கு பாயிரப்பகுதிகளும் ஏற்படவில்லை என்று பனைக்குளம் மு. அப்துல் மஜீது எழுதுகிறார். உமறுப்புலவர் தமது சீறாபுராணத்தை பாட தமக்கு பொருளுதவி புரிந்தவர் கொடைவள்ளல் அபுல்காசிம் மரைக்காயர் எனப்பலஇடங்களில் குறிப்பிடுகிறார். இவர் பரங்கிப்பேட்டையைச் சேர்ந்தவர். இவர்களின் முன்னோர்கள்காயல்பட்டினத்திலிருந்து பரங்கிப்பேட்டைக்கு சென்றவர்கள் (ஆதாரம் மானாசாகிபு மஹ்மூது தீபி, 'காயல் தலப்புராணம்'காகினூர்வழிநடைச் சிந்து, 'மஹ்மூது பந்தர், காதிறு ஹசனா மறைக்காயரின் 'காயலார் வமிசா வழிதிரட்டு'; போன்ற நூல்களை நோக்கித் தெரிந்து கொள்ள வேண்டியது )

வள்ளல் சீதக்காதி ''பசிப்பிணி மருத்துவர்'' என்ற புகழ் பெயரையும் பெற்றவர். கி. பி. 1709 ஆண்டு தமிழகத்தில் ஒரு கொடிய பஞ்சம் ஏற்பட்டது. ரூபாய்க்கு 30 படியாக விற்ற அரிசி பஞ்சத்தின் கொடுமையால் ரூபாய்க்கு ஒருபடி விற்கும் அளவிற்கு வந்து விட்டது. அதற்கும் அரிசி கிடைக்கவில்லை அரசாங்கத்தாலும் சமாளிக்க முடியவில்லை. இந்நிலையில் வள்ளல் சீதக்காதி தம் கப்பல்களைப் பல நாடுகளுக்கும் அனுப்பி தானியங்களைக் கொண்டுவர, பஞ்சத்



தால் வாடிய மக்களுக்கு அள்ளி அள்ளி வழங்கினார். இப்படி பசிப்பிணி போக்கிய வள்ளல்சீதக்காதிக்குப் பசிப்பிணி மருத்துவர் என்ற உயர் பெயரும் ஏற்பட்டது. ''ஓர்தட்டிலே பொன்னுமோர் தட்டிலே ஒக்கவிற்குங் நெல்லும் கார் தட்டிய பஞ்ச காலத்திலே தங்கள் காரியப்பேர் ஆர் தட்டினுந்தட்டு வாராமலே யன்ன தானத்துக்கு மார் தட்டியதுரை மால் சீதக்காதி வரோதயனே'' என்று படிக்காசுப் புலவர் இவருடைய பஞ்ச நிவாரணச் சிறப்பைப் பற்றி பாடியுள்ளார்.

வள்ளல்சீதக்காதி எப்போது மறைந்தார்என்று சரியாகத் தெரியவில்லை. இவர் இறந்தசெய்தியைக் காதில் கேட்டதும் மக்களெல்லாம் மதிமயங்கிக் கதிகலங்கினர். ஏழைகள் ஏங்கித்தவித்துஇதயக்கண்ணீர் சிந்தினர். புலவர்கள் புலம்சாம்பிப்போய்ப் பொறி கலங்கிப் போயினர். நாடெங்கணும் துக்கத்திலும் துயரத்திலும் மூழ்கியது. காவலன் சீதக்காதி இறந்தது கேட்டுத் தேலரும் கண் கசிந்தனர்,

''பூமா திருந்தென் புவிமா திருந்தென்ன பூதலத்தில்
நாமா திருந்தென்ன நாமிருந் தென்னநன் நாவலர்க்குக்
கோமான் அழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த
சீமான் இறந்திட்ட போதே புலமையும் செத்ததுவே.''

அப்பால் எவ்வளவோ தூரத் தொலைவிலிருந்து ஓடோடி வந்தார் ஓர்புலவர். அவர் யார் எனில் அவர்தாம் ''பண்பாயப்பகர் சந்தம் படிக்காசல்லா தொருவர் பகரொண்ணாதே'' என்ற பாராட்டுக்கிலக்கான புலவர்கோமான். இவர் வள்ளல் சீதக்காதி இறந்தது இவ்வுலகத்தில் கொடையே இறந்து விட்டதென்றெண்ணினார். அவர் ஏங்கிஇரங்கிக் கண்ணீர் சிந்தியவராய் சீதக்காதியின் அடக்கதலத்தை அடைந்து பெருமானே! புகழ்க் கம்பம் நாட்டிவைத்த புரவலனே! தமிழ்ப்பாவலரை ஓட்டாண்டியாக்கி அவாகள் வாயில் ஒருபிடிமண் போட்டாயே என்றவர் பின்னரும் புலன்மாழ்கி, விண்ணுலகாளச்சென்ற வேந்தே நீ விரைந்து வந்து மண்ணுலகை ஆழ்க, இன்றேல் புலவர்களுக்குப் பிழைப்பில்லையே என்று புலன்சாம்பிப்பாடினார். அந்தப் பாடல்கள்.

'தோட்டாளன் காயல் துரைசீதக் காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்பம் நாட்டிவைத் தான்தமிழ்
நாவலரை
ஒட்டாண்டி யாக்கி அவர்கள்தம் வாயில் ஒருபிடிமண்
போட்டான் அவனும்ஒளிந்தான்சமாதிக்குழிபுகுந்தே''
''மறந்தா கிலுமரைக் காசு கொடாமட மாந்தர்
மண்மேல்
இறந்தா வதென்ன இருந்தா வதென்ன இறந்து
விண்போய்ச்
சிறந்தா ளுங்காயற் றுரைசீ தக்காதி திரும்பி வந்து
பிறந்தா லொழியப் புலவோர் தமக்குப் பிழைப்
பில்லையே''

வள்ளல் சீதக்காதி அவர்களின் அடக்கவிடம் கீழக் கரையில் இருக்கிறது. தம் அடக்கவிடத்தின் மீது மழை பெய்து அதில் புற் பூண்டுகள் முளைத்து அவை ஆடு மாடு களுக்கு உணவாக இருக்கவேண்டுமென்று ஆசைப்பட்டார். எனவே அவர்களின் அடக்க தலத்தில் எவ்வித கட்டுமானமு மின்றி அடக்கமான தலமாக இருக்கிறது.

வள்ளல் சீதக்காதி வரலாற்றில் முரண்பாடுகளும் ஆதாரமற்ற செய்திகளும் மலிந்து கிடக்கின்றன. கவிஞர் அப்துல் ஹக்கீம்,அப்துல் றஸாக் ஆகியோர் எழுதிய ''சேது நாட்டு பெரிய தம்பி வள்ளல் சீதக்காதி'' (முதற் பதிப்பு ஜனவரி 1991) என்னும் நூலைப் பார்க்கும் போது வள்ள லின் வாரிசு விபரங்களில் புதிய தகவல்கள்கிடைக்கின்றன. இந்நூல் ஆசிரியர்கள் கி.பி. 1851-ல் எழுதி வைக்கப்பட்ட சீதக்காதி மரைக்காயர் அவர்களின் சந்ததிகளின் மூல வாரிசு ஜாபிதா என்ற ஆதாரத்துடன் அவர்களின் நூலில் 33-ம் பக்கத்தில் வெளியிட்டு இருக்கிறார்கள். இவர்கள் தரும் ஜாபிதாவில் உள்ள பெயர்களும், எம். இத்ரீஸ் மரைக்காயர், கவிஞர். கா. மு. ஷெரீப் ஆகியோர் தருகின்ற வள்ளலின் முன்னோரின் ஜாபிதாவில் உள்ள பெயர்களும் மாற்றமாக இருக்கின்றன, பல முக் கிய செய்திகளிலும், நிகழ்ச்சிகளிலும், வேற்றுமைகள் நிறைந்து மிளிர்கின்றன.



எம்.இத்ரீஸ் மரைக்காயர் எழுதிய ''கீர்த்தி மிகும் கீழக் கரை'' என்னும் நூலில் 119-ம் பக்கத்தில் கொடுக்கப்பட் டுள்ள வள்ளல் சீதக்காதியின் முன்னோர்கள் விவரம் கீழ்க் கண்ட மாதிரி அமைகின்றன, சீதக்காதி - மலிக் பெரிய தம்பி மரைக்காயர்-மலிக் மஹ்மூது நயினர் மரைக்காயர்-மலிக் முளம்மர் மரைக்காயர் - மலிக் சுங்கம் கட்டளை செய்யிது மரைக்காயர் - மூன்று தலைமுறை விவரம் கிடைக்கவில்லை - சுல்தான் நிஜாமுத் தீன் - சுல்தான் சிராஜுத்தீன் - சுல்தான் தகீயுத்தீன். கவிஞர் கா.மு. ஷெரீப் அவர்களும் இதே தலைமுறைதான் எழுதியிருக்கிறார்கள், ''சேது நாட்டுப் பெரியதம்பி வள்ளல் சீதக்காதி என்னும் நூலில் கொடுக்கப்பட்ட வாரிசு ஜாபிதாவில் கீழ்க்கண்ட விதமாக எழுதப்பட்டுள்ளது. செயிது காதி மரைக்காயர் (சீதக்காதி) — பெரியதம்பி மரைக்காயர் - மாமு நெய்னுப்பிள்ளை மரைக்காயர் பெயர் அழிமானம் - சேகு கண்டு மரைக்காயர்.

சீதக்காதி அவர்களின் தகப்பனுர் பெயரைத் தவிர மற்ற பெயர்கள் மாறுபட்டு இருக்கின்றன. சேது நாட்டுப் பெரிய தம்பி வள்ளல் சீதக்காதி என்னும் நூலின் ஆசிரியர் கள் வரலாற்று ஆய்வில் வாரிசுதார்களைப் பற்றி முன்னால் வள்ளல் சீதக்காதியைப் பற்றி எழுதிய ஆசிரியர்களுக்கு தக்க ஆவணங்களும், விவரங்களும் கிடைக்கப் பெறாமை யால் அவர்கள் வழி வழி வாரிசுகளை அறிதியிட்டுத் தர வில்லை போலும். இன்று உண்மை விளக்கங்களை ஓலை சுவடிகளின் மூலமும், மூல வாரிசு ஜாபிதா மூலமும் கிடைக் கப் பெற்றுள்ளோம் என எழுதியுள்ளார்கள். இவர்கள் எழுதுவது சரியாக இருக்குமானுல் எம். இத்ரீஸ் மரைக் காயர் அவர்களும், கவிஞர் கா.மு. ஷெரீப் அவர்களும், கேப்டன் அமீர் அலி அவர்களும், வள்ளல் சீதக்காதி பற்றி அவர்களுடைய நூல்களில் எழுதிய பல முக்கிய குறிப்புகள் முரண்பட்டு விடுகின்றன. சேதுநாட்டுப்பெரிய தம்பி வள் ளல் சீதக்காதி என்னும் நூலின் ஆசிரியர்கள வள்ளலின் மூல வாரிசு ஜாபிதாவைமுறைப்படி ஆதாரத்துடன்பெற்று

தந்ததாகத் தெரிகிறது ஆனால் எம். ஐ. மரைக்காயர் அவர்களும், கவிஞர் கா.மு. ஷெரீப் அவர்களும் எப்படி வள்ளலின் தலைமுறைகளை தேடி எடுத்தார்கள் என்பதையும் அவர்களின் நூல் மூலம் அறியலாம். அவர்களின் எழுத்துப்படி வள்ளலின் இரண்டாவது தம்பி ஷெய்கு இபுறாஹீம் வேதாளையில் அடங்கி இருக்கிறார்கள். இவர்கள் சமாதி கல்லில் (மீஸான்)உள்ள குறிப்பை எடுத்துத் தந்ததாக எழுதுகிறார்கள். இந்த சுல்லறை கல்லில் வாரிசு விபரங்கள மாற்றமாகஇருப்பதனால் ஷெய்கு இபுறாஹீம் அவர்கள் யார் என்பதை ஆராய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. எம்,ஐ. மரைக்காயர் அவர்களும் உண்மையான வம்சா வழி ஏடு இல்லாததினால் பல வழியிலும் ஆய்ந்து எடுக்க முயன்று இருக்கிறார். இத்தகைய ஏடுகளை குடும்பத்தில் வழி வழி வருபவர்கள் பத்திரமாக பாதுகாத்து வர வேண்டும். அவ்வாறுபாதுகாக்காததனுல் வாரிசு விபரங்களில் தவறுகள் நிகழ்ந்து விட்டதாகத் தெரிகிறது. நிலைமை இவ்வாறு இருக்க வள்ளல் பரம்பரையை சுல்தான் தகியுத்தீன் பரம்பரையுடன் எவ்வித தொடர்பும் இல்லாமல் இணைப்பது வினோதமாக இருக்கிறது. கவிஞர் கா.மு.ஷெரீப் தம்முடைய வள்ளல் சீதக்காதி வரலாறு என்னும் நூலில் கீழ்க்கண்ட விதமாக எழுதுகிறார். ''முதலாம் மாரவர்மன் குலசேகரப் பாணடியன், சுல்தான் தகீயுத்தீனைக் கடல் காவலராகவும், அதாவது சுங்கப் பொறுப்பாளராகவும் கொண்டிருந்தார் என்பது வரலாறு. செய்யது மரைக்காயர் பெயருக்கு முன்பாக 'சுங்கக் கட்டளை' என்று குறிக்கப்பட்டிருப்பதால், இந்த செய்யது மரைக்காயர், சுல்தான் தகீயுத்தீன் வழியினராவார் என உறுதிப்படுகின்றது. எனவே வள்ளல் சீதக்காதி மரைக்காயரின் பரம்பரையினர் கீஷ் தீவிலிருந்து இன்றைக்கு ஏழுநூறு ஆண்டுகட்கு முன்பு கீழக்கரையில் வந்துறைய வாரம்பித்த அரபியர், அரச குடும்பத்தினர் என அறிய முடிகிறது.''



சுல்தான் தகீயுத்தீனும், மலிக் சுங்கம் செய்து மரைக்காயரும், சுங்க பொறுப்பாளர்களாக இருந்ததனால், ஒரே விதமான உத்யோகத்தை செய்ததனால், ஒரே பரம்பரை என்ற முடிவுக்கு வந்தமை வியப்புக்கும், நகைப்புக்கும் உரியதாயிற்று.சேது நாட்டுப்பெரியதம்பி வள்ளல்சீதக்காதி என்னும் நூலின் ஆதாரப்படி செய்யிது மரைக்காயர் சீதக்காதியின் முப்பாட்டனரின் தந்தை இல்லை என்பது தெரிகிறது. ஆனால் எம்.ஐ மரைக்காயர் அவர்கள் இதே செய்யிது மரைக்காயரின் வழி வந்த மலிக் மஹ்மூது நெய்னு மரைக்காயர், வண்ணப் பரிமள புலவர் என்ற இஸ்ஹாக் புலவரின் 'ஆயிரம் மசாலா' காப்பியத்திற்கு கொடை நாயகள் என உரைக்கிறார் இதற்குகாரணம்புலவர்கொடைநாயகரை கறுப்பாறு காவலர் என்று பாடியமை என கூறுகிறார். கறுப்பாறு காவலர் என்பது சுல்தான் தகீயுத்தீனை குறிக்கும் என்றும்அவர்களின்வழிவந்தவர் மலிக்மஹ்மூதுநெய்னு என்றும் கருதியமையால் இந்தகற்பனையான இணைப்பையும் கொண்டு வந்துள்ளார்.

மற்றொரு பெரிய முரண்பாடு மாமு நெய்னு என்ற பட்டத்து முஹம்மது அப்துல்காதர் பற்றியதாகும். இவரை பற்றி எம். ஐ. மரைக்காயர் கீழ்க்கண்ட விதமாக எழுதுகிறார்கள். ''மாமு நெய்னர் வள்ளல் சீதக்காதியின் மூத்த தம்பி. வள்ளலாரின் வணிகத்தையும் கவனித்தவர். சேதுபதியின் அமைச்சரவையில் இருந்தவர், வள்ளல் சீதக்காதிக்கு ஆண் வாரிசு இல்லாததனால் மாமு நெய்னு மரைக்காயரும் அவர் தம்பியும் வள்ளலாரின் சொத்துக்களில்பெரும்பகுதியைஇஸ்லாமியசட்டப்படிபெற்றனர். மாமு நெய்னரின் ஒரே மகன் முஹம்மது அபுபக்கர் மரைக்காயர். இவர் சதக்கத்துல்லா அப்பா அவர்களின் கடைசி மகளாகிய சாரா உம்மாவை மணந்தார். ''சேது நாட்டு பெரியதம்பி வள்ளல்சீதக்காதிஎன்னும் நூலில் கீழ்க்கண்டவாறு எழுதப்பட்டு இருக்கின்றன. வள்ளல் சீதக்காதியின் மூத்த சகோதரர் சேகு இப்ராஹிம் நெய்னா மரைக்காயர் வள்ளலின் தம்பி லெப்பை நெய்னுமரைக்காயர். மாமு

நெய்னு மரைக்காயர், வள்ளலின் சிறிய தகப்பனார் மீராப் பிள்ளை மரைக்காயரின்மகன். மாமு.நெய்னு மரைக்காயர். சீதக்காதியின் மூத்தமகள் முத்துமீராநாச்சியைமணமுடித்த வர். மாமுநெய்னாமரைக்காயருக்கு ஆறுபிள்ளைகள் இருந் தனர். ஆனால் முஹம்மது அபுபக்கர் என்ற பெயருடைய மகன் இருந்ததாக வம்சாவழிப்பட்டியலில்எவ்விததகவலும் இல்லை. தற்போதுள்ள கீழக்கரை ஜும்மா பள்ளிவாசல் வள்ளல் சீ த க் கா தி மரைக்காயர் கா ல த் தி லே யே க ட் டி முடி க் க ப் ப ட் ட து எ ன் று 1 8 2 9 ஆ ம் ஆ ண் டி ன். ஓலைச்சுவடியிலும் 1862, 1885ஆம் ஆண் டின் ஆவணங்களிலும் அறியமுடிகிறது. இதே ஜும்மா பள்ளியை எம். ஐ. மரைக்காயர் அவர்கள்சீ தக்காதிக்குப் பின்னால் வந்த அவ்வாகாரு மரைக்காயர் கட்டியதாக எழுதியிருக்கிறார். ஆசிரியர்கள் முறையான ஆதாரம் இல் லாமல் எழுதுவதனால் வாசகர்கள் குழப்பம் அடைகிறார் கள் வரலாற்றில் வினோதங்கள் ஏற்படுகின்றன.

கவிஞர் அப்துல்ஹக்கீம், அப்துல்றசாக், ஆகியோர் எழுதிய 'சேது நாட்டுப் பெரிய தம்பி வள்ளல் சீதக்காதி' என்னும் நூலையும் எம். ஐ. மரைக்காயர் எழுதிய 'கீர்த்தி மிகும் கிழக்கரை' என்னும் நூலையும், கவிஞர்கா மு. ஷெரீப் எழுதிய 'வள்ளல் சீதக்காதி வரலாறு' என்னும் நூலை யும், ஒன்றாக வைத்துப்படித்துப் பார்த்தால் எண்ணற்ற முரண்பாடுகளை அறிந்து சீதக்காதி வள்ளலின்வரலாற்றில் எவை உண்மை என்பதையும் ஆய்வு செய்யலாம்.



# புலவர் நாயகம் அவர்களின் திருபச்செய்யுட்கள் ஒரு கண்ணோட்டம்

''புலவர்கள் நாயகம்'' என்று பல்சமயப் புலவர்களாலும் 'உச்சிமேல் வைத்துப் போற்றப்பட்டவர்' காயல்பட்டினம் செய்கு அப்துல் காதிர் நெய்னா லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் ஆவார்கள். இப்பெருமானார் 'வெறும் தமிழ்ப் புலமை' மட்டும் பெற்றவர் அல்லர்; அன்னார் அப்பழுக் கற்ற ஆற்றல் மிகும் ஆலிமும் ஹாபிழும் ஆவார்கள்; குத்புஜ்ஜமானும் இல்முல் பஹ்ருமான அஷ்ஷெய்கு, ஷெய்கு அப்துல் காதிர் ஆலிமுல் பாழில் 'தைக்கா சாஹிபு' ஒலியுல் லாஹ் (ரஹ்) அவர்கள்தம் சிரேஷ்ட மாணவரும், ஞான வள்ளல் 'குணங்குடி மஸ்தான்' என்னும் சுல்தான் அப்துல் காதிர் அல் குத்புஷ் ஷாஇறு ஒலியுல்லாஹ் (ரஹ்) அவர்கள் தம் பள்ளித் தோழரும் ஆத்மிக ஆன்மிக நண்பரும் ஆவார்கள், புலவர் நாயகம் அவர்கள். இஸ்லாமிய ஆன்மிகப் படித்தரங்கள் எத்தனை உள்ளனவோ, அத்தனை யும் கசடறக் கற்றுணர்ந்து, அவற்றின் வழிநின்று, நெறி திறம்பா வாழ்வில் சிறந்து விளங்கியவர்கள் புலவர் நாயகம் என்ற உண்மையைக் கீழ்காணும் பாடல் அழகாக தெளிவாக விளக்கி நிற்கிறது.

''ஜாமினு ஆரிபு ஹாதி ஷரீபு ஜலீலு அப்தால்
ஷாமிலு ஹாமிது ஆஷிக்கு ஸாலிஹு ஷாஇறுசீர்
ஆமிலு 'செய்கப்துல் காதிர் நைனார் லப்பை ஆலிம்'
எனும்
காமிலு ஹாபிழு காத்திபு ஹாஜி மஷாயிகுவே!''

இப்பாடல், புலவர் நாயகம் அவர்கட்கு வழங்கப்பட்டிருந்த பதினெட்டுவகை சிறப்புவிருதுகளானபட்டங்களைஎடுத்து இயம்பி, அவர்களது ஒப்புவமை இல்லாத் தனி மாண்பை விளக்கி நிற்கிறது!

அரபுப் புலமையும் ஆன்மிகப் புலமையும் அருந்தமிழ்ப் புலமையும் முக்கனியெனப் பெற்றுச் சிறந்த இப்பெரு மகனார், தமிழ் இலக்கிய உலகிலும், தன்னை எவரும்

மிஞ்சாத 'தனிமுத்திரை'யும் பதித்துச் சென்றவர்கள்; நான்கு பெரிய இஸ்லாமியக் காப்பியங்கள் இயற்றியுள்ள தனிப்பெருமை இவர்கள் ஒருவருக்கே 'தமிழ் இலக்கிய பேருலகில்' உரியது. நான்கு பெருங்காவியங்கள் பல சிற்றிலக்கியங்கள், எண்ணிலாத் தனிப்பாடல்கள், 'சீட்டுக்கவிகள்' (நிருபச் செய்யுட்கள்) என்று இவர்கள் பாடியுள்ள பாடல்களின் மொத்த எண்ணிக்கை 18,678 ஆகும். அவர்கள் 'செம்பாகச் செய்யுட்கள்' இயற்றுவதில் தன்னிகர் இல்லா நிபுணர்; 'கரும்பாகச் செய்யுட்கள்' இயற்றுவதில் பாடுவதில் ஈடில்லா அறிஞர்; வணக்க நெறிமுறைகளில் வித்தகர்; பன்மொழிப்புலவர்! இறையச்சம் அகலா நெஞ்சினர்.

''வழுவிலா வேதாவாக்கின் மெய்ப்புலமை நாவினர்'' ''பொய்யிலாப் புலமை நாவின் வித்திகர்'' ''மறுவற ஓதும் மாண்பின் குறையறு புலமைசேர் நெஞ்சின் நிமலர்'', ''எவரும் வென்றி பெறவியலா ஏதமில் புலமை வாக்கினர் எனவெல்லாம் 'புலவர் நாயகம் அவர்களின்' புலமை போற்றிப் புகழப்பட்டு உள்ளது.

இவ்வாறான புலமையும் இல்மையும் பெற்று இருந்த இப்பெரியாரின் மாண்புகள் இவையென அறுதியிட்டு அளந்து கூற இயலாதன. இவர்கள் இயற்றிய பலபாடல்களுக்கு அன்றும் சரி, இன்றும் சரி பொருள் கூற முடியாமல் தவித்தவர் — தவிப்பவர் உள்ளனர். இது இலக்கிய உலகமே நன்கு உணர்ந்த பேருண்மை!

புலவர் நாயகம் அவர்கள் எழுதியுள்ள 'நிருபச் செய்யுள்கள்' (சீட்டுக் கவிகள் — LETTERS IN POETIC ORDER) எண்ணற்றவை வணிகநிமித்தமாகவும், நட்பின் நிமித்தமாகவும், வேறு பல காரணங்களுக்காகவும் அவ்வப்போது இவர்கள் 'நிருபச்செய்யுட்கள்' எழுதியுள்ளனர்.

இவர்களது இத்தகைய நிருபச்செய்யுட்களை எல்லாம் திரட்டி, தொகுத்து ''புலவர்கள் நாயகத்தின் சீட்டுக்கவிகள் திரட்டு' என்னும் பெயரில், 1939 - ஆம் ஆண்டு மஹ்முது



பந்தர் பாவலர் எஸ். காதிர் அலி மரைக்காயர் அவர்கள் பதிப்பித்துவெளியிட்டு உள்ளனர். இந்த செய்யுள்திரட்டில் 1441 நிருபச் செய்யுட்கள் உள்ளன.

அந்நூலின் 'பதிப்புரை' யில் ......... ஷெய்குனாப் புலவர் அவர்கள், தாம் யாருக்குக் கடிதம் தீட்டினாலும் கவியாகவே தீட்டும் வழக்கம் உடையவர்கள்; தராதரம் அறிந்து அவர்கட்கு ஏற்பவே மடல் நீட்டும் பண்பு பெற்று இருந்தனர். புலவர் நாயகம் அவர்கள். தம்மை மக்காட்டிலும் பெரியவர்களுக்குக் கவிமடல் எழுதும் போது, தம் 'பணிவுடமை'ப் பண்பு தோன்றவும், தம்மினும் சிறியவர்கட்கு எழுதும்போது, தம் ஆற்றல், புலமை, வித்தகம், பெருமை சிறப்புக்கள் தோன்றவும் விதந்தும் கூறி எழுதுவது இயல்பு எனினும் அந்தக்கவிகளிலும் கூடப் 'பணிவுடமை'ப் பண்பும் தோன்றும்''—என்று பாவலர் மஹ்முது பந்தர், எஸ். காதிர் அலி மரைக்காயர் குறிப்பிட்டுள்ளார். இக் கூற்று புலவர் நாயகத்தின் 'சீட்டுக்கவி' களின் இயல்புகளை விளக்கிக் காட்டுகிறது.

காயல்பட்டினம், புலவர் நாயகம் செய்கு அப்துல் காதிறு நெய்னு ஆலிம் புலவர்கள், வாணிபநிமித்தமாகவும், நட்பின் நிமித்தமாகவும், கீழக்கரை வள்ளல் பெருந்தகை ஹபீபுமுஹம்மது மரைக்காயர் அவர்களின் மகனார் முஹம்மது சதக்கத்துல்லாஹ் மரைக்காயர் அவர்களுக்கும், அவர்களின் இளவல் முஹம்மது காசிம் மரைக்காயர் அவர்களுக்கும் பல்வேறு சூழ்நிலைகளில் 'நிருபச்செய்யுள்' கள் எழுதியுள்ளனர். அவற்றுள் மூன்று பாடல்கள் கீழே காண்பன.

1\. '' வையம் எல்லாம் தனிகீர்த்தி வழங்கவரும்
        கருணை முகில் **வதுதை** வேந்தன்
செய்யுவளும் களித்திருக்கும் மணி முன்றில் **ஷெய்கு**
        **சதக்கு** உவப்ப நின்றீர்;
மெய்யன் வினைத்திறன் வென்றிப் படைப்போன் இம்
        மேதினியை விளக்கும் ஏது
பொய்யோ மற்றுரை பெயர்த்தோ இவைஆய்ந்தும்
        புந்தியொடு புகலு வீரே! '' (3)

2 ''**தென்காயல்** ஒப்பும் திருநபி நாமக் குரிசில்
பொன்காவல் செய்யும் புகழ்முகமே - நன்காய்க்
கருணையொடு ஷெய்கப்துல் காதிர் எழுதும்செந்
திருமுகமே பூமுகமே சீர்.'' (4)

3 ''சீர்வளர் **கீழக்கரை**யின் செல்வரிரு மாமுகமே
நீர்வளர் செங்கஞ்சம் நேரொக்கும் - பேர்வளரும்
காத்தொழுகும் ஷெய்கப்துல் காதிர் விடுநிருபம்
பூத்தொளிரும் கண்கண்ட போது.'' (5)

மேலே காணும் 'நிருபச் செய்யுள்'கள்மூன்றும், புலவர் நாயகம் அவர்கள் எவ்வகையான நோக்கில், எவ்வகையான பொருளில், எத்தன்மையில் நவின்றுள்ளனர்? இச்செய்யுட்கள் நவிலும் 'உண்மைப் பொருள் (கருத்துக்கள்) என்ன? அவ்வுண்மைப் பொருளின் தன்மை என்ன? பொருள் காணவேண்டிய நெறி - முறை யாது? எவ்வாறு பொருள் கொண்டால், அச்செய்யுட்கள் கூறும் கருத்துக்களை ''உள்ளன உள்ளவாறு'' உணர இயலும்? என்னும் வினாக்களுக்கு [பாவியல் நெறிமுறை அடிப்படையில்] விடைகள் காண்பதுதான் நேரிய - சீரிய நன்முறை நோக்காகும். அவ்வாறு அல்லாமல், இத்தகைய மேலோர் செயுட்களுக் எல்லாம், அவரவர் மனம் கூறும் போக்கினில் பொருள் கூறுவதும், கூறத்துணிவதும், தம் உள்ளக்கருத்துக்கு ஏற்றவகையில் பொருள் வருவித்துக் கூறுவதும், தம்கற்பனையைக் கலந்து தற்குறிப்பாகப் பொருள்கூற முனைவதும் பண்பல்லா; அது புலமை நெறியுமல்ல; இலக்கண பண்புமல்ல; நன்நெறியும் அல்ல! இவ்வுண்மையைப் 'பிறவிப் புலமைப் பண்பினர், நன்கு உணர்வர்!

புலவர் நாயகம் அவர்களது புலமைக்கும் சிறப்புக்கும் இழுக்கும் களங்கமும்ஏற்படும் வண்ணம் சிலர் தத்தம் மனம் போனவாறு பொருள் கூறுவதும் விளக்கம் தருவதும் - உள்ளது உள்ளவாறு பொருள்விளக்கம் தராது, திரித்தும் புதியன புகுத்தியும் பொருள் கூறுவது காணும்போது, வேதனையும் மருட்சியும் ஏற்படுகின்றன. இப்புலமைச் சான்



றோரின் பாடல்கள் எவ்வாறெல்லாம் கையாளப்பட்டும் பொருள் கூறப்பட்டும் விளக்கம் தரப்பட்டும் வருகின்றன என்ற எண்ணமும் தோன்றுவது இயல்பு.

இனி, மேற்காண்நிருபச் செய்யுட்களில், முதல் செய்யுளில், புலவர் நாயகம் அவர்கள், ,,ஷெய்கு சதக்கு'' என்று குறிப்பிட்டுள்ளது, கீழக்கரை வள்ளல் பெருமகனின் மைந்தரான 'முஹம்மது (ஷெய்கு) சதக்கத்துல்லாஹ் மரைக்காயரைக் குறிப்பது அன்று! அன்னாரின் பெயரை ,ஷெய்கு சதக்கத்துல்லாஹ்' மரைக்காயர் எனப் பலர் கூறினும் அவரது இயற்பெயர் ,,முஹம்மது சதக்கத்துல்லாஹ்'' மரைக்காயர் என்பதுதான் உண்மை. இது எவ்வாறு இருப்பினும் இருக்கட்டும். கவலையோ, வீண் வாத எண்ணமோ இதில் இல்லை. அவ்வாறாயின், இப்பாடல் (1) பொருள் என்ன? அதனைக்காண்பது நம் கடன். இதோ அப்பாடல் பொருள்.

''உலகமெல்லாம்புகழுமாறு, தன்னிகரில்லா சிறப்பினைப் பெற்று, ,(அறபி—அஜமி) யாவரும் சிறக்குமாறு, கைமாறு கருதாமல் பொழியும் மழையைப்போல் 'இல்ம்' ஆகிய கருணை மழையைப் பொழியும் அருள் நிறை வகுதை நாயகரும் திருமகள் குடிகொண்டு வீற்றிருக்கும் அழகிய மணிமுற்றம் கொண்ட (பள்ளி கொண்ட) தலைவருமான 'அஷ்ஷெய்கு சதக்கத்துல்லாஹ்' அவர்கள் உவந்து (அருளாசிவழங்கி) போற்றும்படி நின்றவரே ''.............. என்பதுதான் அப்பாட்டின் முன்னிரு அடிகள் தெற்றெனத்தரும் பொருள் என்ற உண்மையை, உண்மைப் புலமை வித்தகர் உணர்வர். இப்பாடலில் குறிப்பிட்டுள்ள ''ஷெய்குசதக்கு''என்பதுதிட்டவட்டமாகமாதிஹுற்றசூல் அஷ்ஷெய்கு சதக்கத்துல்லாஹ் அப்பா (ரஹ்) அவர்களையே இதனை, ,,ஷெய்கு சதக்கு உவப்ப நின்றீர்'' என்பதால் தெளிவாக ஐயமற உணரலாம். அதாவது, வள்ளல் ஹபீபு முஹம்மது மரைக்காயர் அவர்களது மகன்கள் இருவரும் அஷ்ஷெய்கு சதக்கத்துல்லாஹ் அப்பா (ரஹ்)

அவர்கள் தம் நல்லருள் ஆசியைப் பெற்று வாழக்கூடியவர்கள் ஆவார்கள் என்பதையே புலவர் பெருமான் அவ்வாறு எடுத்துக்கூறி போற்றி (முகமன்) உள்ளார்கள் என்பது வெளிப்படை. இதுவேபாடல் நுவலும் உண்மைப்பொருள் அவ்வாறு அல்லாமல் 'வகுதை வேந்தன்' என்பதும் 'ஷெய்கு சதக்கு' என்பதும் வள்ளல் ஹபீபு முகம்மது மரைக்காயர் அவர்கள் மகனார் சதக்கத்துல்லாஹ் மரைக்காயர் அவர்களைக் குறிப்பது அன்று. அவ்வாறே குறிப்பது என்றாலும் 'சதக்கு உவப்ப நின்றீர்' என்பது எவ்வாறு பொருத்தம் உறும்?

ஆகவே, 'வகுதை வேந்தன்.........ஷெய்கு சதக்கு' உவப்ப நின்றீர்-என்பது, 'வகுதை எனவழங்கா நின்ற காயலம்பதி யான '(வகுதை என வழங்கா நின்ற காயலம்பதி' 'கவிச் சாகரம் செய்கு நைனா) காயல்பட்டணத்தில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து சிறப்புமிகு கீழக்கரையில் பள்ளி கொண்டு இலங்கும் 'மாதிஹுர்ரசூல்' அவர்களையே குறிக்கிறது என்பது துணிபு.

இனி இரண்டாவது செய்யுளில், புலவர் பெருமான் தம்மைப் பற்றியே குறிப்பிட்டுள்ளனர் என்பதனைப்புலமையிலாப் பாமரரும் எளிதில் புரிந்து கொள்ள முடியும் என்பதும் வெளிப்படை! தம்மைப் பற்றிக் கூற வந்த புலவர் நாயகம் அவர்கள், தம்மை

''தென்காயல் ஓம்பும்............ஷெய்கு அப்துல்காதிர் எழுதும் செந்திருமுகமே''

என்று 'அறிமுகம்' செய்துகொள்கின்றனர்!

இதில் 'தென் காயல் வாழும் செய்கு அப்துல் காதிர்எழுதும் நிருபம்' என்று கூறப்பட்டுள்ளது ஐயம் ஏதுமில்லாத் தெளிவாகும்.

ஏனெனில், ''காயல்பட்டினம் புலவர் நாயகம் செய்கு அப்துல் காதிர் லப்பை ஆலிம்'' என்றேஅன்றுமுதல் இன்று வரை அனைவரும் இவர்களைக் குறிப்பிடுவர். அவ்வாறு



கூறுவது—கூறியது உண்மை எனில், இப்பாட்டில் புலவர் நாயகம் தம் ஊரை 'தென் காயல்' என்றே கூறுகின்றார் என்பதனால்இந்த 'தென்காயல்' என்பது'காயல்பட்டணம்' ஊரையே மயக்கமறத்தெளிவுபடுத்தி, ஊறுதிபடுத்தி நிற்கின்றது. எனவே புலவர் நாயகம் எங்கெல்லாம் 'தென்காயல்' என்று கூறியுள்ளார்களோ அங்கெல்லாம் அந்தத் 'தென் காயல்' என்பது காயல்பட்டினத்தையே கூறுகின்றது. என்பதும் துணிபு. எனவேதென் காயல் என்பதுஇன்றைய கீழக்கரையை குறிப்பது அல்ல என்பதும் தெளிவாகும்.

அடுத்து, மூன்றாம் பாடல்; கடிதம் யாருக்கு எழுதப் பட்டதோ, அவர்களைப் பற்றிக் குறித்து வருவது; இந்நிருபச் செய்யுள் (கவிவடிவக் கடிதம்) சிறப்பு மிக்க கீழக்கரை வள்ளல் ஹபீபு முஹம்மது மரைக்காயர் அவர்களின் மைந்தர்கள் இருவருக்கு எழுதி அனுப்பபட்டது என்பதுதெளிவு. அவ்விரு செல்வரும் வாழ்ந்து வந்ததும் கீழக்கரையே என்பது தெளிவு. எனவே அவர்களைக் குறிப்பிடும் புலவர் அவர்கள் தெளிவாகவும் அழகாகவும் கூறியுள்ளனர். அதாவது, அவ்விருசெல்வர்களைக் குறிப்பிடும் போது,

'' சீர்வளர் கீழக்கரை 'யின் செல்வரிரு மாமுகமே''

என்று அழகுத் தமிழில் எவருமே எளிதில் விளங்கிக் கொள்ளும் வண்ணம், அழகிய சொல்லால் ('சீர்வளர் கீழக்கரை') குறிப்பிட்டுள்ளனர். அல்லவா?

இதுகாறும் கண்டவற்றால், புலவர் நாயகம்அவர்களது மேற்காணும் மூன்று 'நிருபச் செய்யுள்' களில், முதல் செய்யுளில் வரும் 'வகுதை' என்பதும், இரண்டாம் செய்யுளில் வரும் 'தென்காயல்' என்பதும் 'காயல்பட்டினம்' என்னும் ஊரையே குறித்து வந்துள்ளன என்ற உண்மையும்,மூன்றாவது செய்யுளில் வரும் 'சீர் வளர் கீழக்கரை' என்பது 'கீழக்கரை' என்னும் ஊரையேகுறித்துவந்துள்ளதுஎன்பதும் ஐயம் இல்லாத தெளிவாகும். இதில் எவ்வகை மயக்கமோ மாற்றமோ, குற்றமோ இல்லை என்பதும் தெளிவாகும். அல்லவா?

இவ்வாறுகாணும் போது, இலக்கியங்களுள்கூறப்பட்டுள்ள *'வகுதை' - 'தென்காயல்' - 'வருதாபுரி' - 'வகுதை நாடு' 'வகுதையம்பதி' - 'காயலம்பதி' - 'காயல் என்பனயாவும் காயல்பட்டினம் என்னும் ஊரையே வலியுறுத்தி நிற்பன என்பது'காய்தல் உவத்தல் அற்ற'உண்மையாகும் என்பது 'நுண்மாண் அறிவினர்' அறிவார்கள்!

மேலே கூறப்பட்டுள்ள இவ்வுண்மையை,புலவர் நாயகம் அவர்கள் இயற்றியருளிய 'குத்பு நாயகம்' என்னும் 'முஹையித்தீன் புராணம்' கடவுள் வாழ்த்துப் பாடல் (29) வலியுறுத்தி நிற்பதும் இங்குச் சான்றாகக் காட்டுவது ஏற்புடையது இப்பாடலிலும் 'காயல்' எனவே தன் ஊரான காயல்பட்டினத்தைச் சுட்டிக்காட்டுவது தெளிவுற விளங்குவது நோக்குக;

''சீரணி கொண்ட காயல்திரு நகர்மணிப் பரிட்சைப்
பேரணி கொண்ட மானாப் பிள்ளையிலப்பை யாலிம்
ஏரணி கொண்ட கபீபுமுஹம் மதுலெப்பை பாலன்
ஊரணி கொண்ட வல்லோன் உதவியில் பனுவல்
செய்தர்ன்''

—குத்பு நாயகம் புராணம், கடவுள் வர்ழ்த்து 29

இதில் வரும் 'காயல் திருநகர்'' என்பதும் காயல்பட்டினத்தயே தம் ஊராகப்புலவர் நாயகம் கூறுவது நன்கு புலனாகிறது. இதனை விட வேறு சான்றும் வேண்டுமோ?

---

*''வகுதை என்றால் வழித்தடம் என்பர்'' - என்பது நிகண்டு நூற்பா மாஃபர் > வழித்தடம்
வகுதை > வகுதி > பகுதி : ><பகுதி > வகுதி > வகுதை
மாஃபர் > வழித்தடம்
பகுதி > குறிப்பிட்ட (மக்கள் வாழ்) பாகம் > பகுதி > வகுதியானது >
''பகரம் வகரமாகும்'' என்பது இலக்கணம்: வகுதி > வகுதை ஆயிற்று என்பர்
Ex; பின் அன் > பின்னன் > வின்னன்.

---

# ''காகிரி நாட்டு வளம்''

''சின்ன சீறா'' பாடிய பெரும் புலவர் காயல்பட்டிணம் பனீ அஹ்மது மரைக்காயர் குமாரர் ''நூறு நாமா'' வின் ஆசிரியர் செய்யிது அஹ்மது புலவர் அவர்களால் இயற்றப்பட்டது ''காகிரி நாட்டு வளம்''

''காகிரி நாட்டு வளம்'' ஆசிரியர் எவ்வூரினர்:

'சின்ன சீறா' என்னும் சீராரும் காவியம் இயற்றி வழங்கியவர், காயல்பட்டினம் ஊரினர்; இவர் தம் மைந்தரே ''காகிரி நாட்டு வளம்'' பாடிய செய்யிது அஹ்மது புலவர் ஆவர்,

இவர் தம் தந்தையார் காயல்பட்டினம் நகரினைப் பிறப்பகமாகக்கொண்டவர்; இவர் தம் முன்னோரும் காயல் நகரின் காரணர்களே ஆவர் என்பதும் உண்மையே. பனீ அஹ்மது மரைக்காயர் அவர்கள் தமது 'சின்ன சீறா' வில், பாயிரப் பாடல் ஒன்றில் தம்மை அறிமுகம் செய்துள்ளார் அப்பாடலில், அவர் தம்மை 'அஹ்மது' என்று மட்டுமே கூறியுள்ளார், அப்பாயிரப் பாடல் இது தான்:

''சிலையுமான் நிலவும் ஏத்தும் திருநபி சரிதை காயல்
சுலையுமான் லெப்பை ஆலிம் துணை ஜமாலுத்தீன் சேய்
பொன்
.......... .......... ..........
மலையுமான் சுலையுமான் சொலகல்வி மான் அகமதின்
சொல்
மிலையுமான் முதியோர் தேரும் தமிழினால் விளம்பினானே.''

[ பாயிரம்- பாடல் 10 ]

இப்பாடலில், பனீ அஹ்மது மரைக்காயர் தாம் எவ்வூரினர் எனக் குறிப்பிட வில்லை; எனினும்தம்முன்னோரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். 'தமது முன்னோரான சுலைமான் லெப்பை ஆலிம் அவர்களும் அவர்கள்தம் மகனார்

ஜமாலுத்தீன் என்பவர்தம் மைந்தர் தனவணிகரும் கல்வி மானுமான சுலைமான் என்பாரின் மகனான அஹ்மது' எனச் சுட்டிக் காட்டி விளக்கி உள்ளனர். இப்பாடலில் வரும்'காயல்' என்பது சிறப்பாகஇன்றுகாயல்பட்டினத்தை யே சுட்டுகிறது இக் கருத்தை பேரறிஞர்,டாக்டர்.எம்.எம். உவைஸ் அவர்களும் வலியுறுத்தியுள்ளார்.

-இஸ்லாம் வளர்த்த தமிழ் - பக்கம்;142

ஒரு சிலர் மேற்படி ஜமாலுத்தீன் என்பவர் மகனே பனீ அஹ்மது எனக் கூறுவர்.இஃது தவறுஆகும் என்பது மேலே யுள்ள பாடலாலேயே நன்குபுலனாகும் சுலைமான்லெப்பை ஆலிம் அவர்களின் குமாரர் ஜமாலுத்தீன்; ஜமாலுத்தீன் அவர்கள் மகன் சுலைமான்; இந்தச் சுலைமான் என்பாரின் மகனே பனீ அஹ்மது ஆவர் என்பதே குலவழிப் பட்டியல் காட்டும் உண்மை.

மேலும் ''சின்ன சீறா'' வின் 'முதலாம் பதிப்பின் பாயிரம்' இந்த உண்மையை மிகவும் தெளிவாக -அழகாக- விளக்கமாக எடுத்து இயம்புகிறது. அப்பாடல் வருமாறு:

''தேங்கமழ்ச் சோலைத் திருநகர்க் காயலின்
ஓங்கிய அறிவால் உயர்ஜமா லுத்தீன்
கண மணி சுலைமான் களிப்புற அளித்த
அண்ணல் பேரறிவிற்கு அணியெனத் திகழும்
............ ............ ............ ............
வண்பனீ அகுமது மரைக்காயர் என்னும்
ஒண்பெயர் உடைய உயர்மொழிப் புலவர்''

இச்செய்யுளில் ஜமாலுத்தீன் என்பவர் மகன் சுலைமான் என்பவர் குமாரர் பனீ அஹ்மது மரைக்காயர் என்பது 'உள்ளங்கை நெல்லிக்கனி' எனக் காட்டுவது கண்டறிக. ஐயம் ஏதும் இதில் ஏற்பட வழியுமில்லை வகையும் இல்லை அன்றோ? காயல்பட்டினம் மர்ஹூம் பாளையம் அல்ஹாஜ் அல்ஹாஜ், அல்ஹாபிழ் அல்லாமா மஹ்மூது சுலைமான் லெப்பை ஆலிமுல் பாழில் அவர்கள் தம் தந்தை வழி முப் பாட்டனாரோ, மேற்படி பாயிரச் செய்யுள் சுட்டிக்காட்



டும் சுலைமான் லெப்பை ஆலிம் என்பது இவண் சிறப்பாக குறிப்பிடத்தக்கது. இன்றும் இவர்தம் குலவழியினர் இன் றைய காயல்பட்டினத்தில் தனவணிகர்களாக வாழ்வதும் கருதத்தக்கது.எனவே,பனீஅஹ்மது மரைக்காயரும்அவரது மகன் 'நூர் நாமா' ஆசிரியர் செய்யிது அஹ்மது மரைக் காயர் புலவரும் காயல்பட்டினம் ஊரினரே. இவர்கள் பின்னாளில், வணிகத்தின் பொருட்டு,கீழக்கரை சென்று அங்கேயே (உறவின் முறையினரை) மணமுடித்து, அவ்வூ ரிலேயே வாழ்ந்து மறைந்தனர் என்பதே உண்மை. எனவே பனீஅஹ்மது மரைக்காயர் புலவரும், அவர்களது மகனார் செய்யிது அஹ்மது மரைக்காயர் புலவரும் காயல்பட்டினத் தைச் சார்ந்தவர்களே எனத் துணிபு கொள்ளலாம்.

## ''காகிரி நாட்டு வளம்''—பற்றிய ஒரு கருத்தாய்வு:

பனீஅஹ்மது மரைக்காயர் புலவரின்மகனார் செய்யிது அஹ்மது மரைக்காயர் புலவர் அவர்கள் பாடிய''நூறு நாமா'' என்னும் சிற்றிலக்கிய நூலில் அமைந்த 'தனிப்பகு தியே' ''காகிரி நாட்டு வளம்'' எனும் பாடல் தொகுப்பு. பதினான்கு பாடல்களைக் கொண்டது இப்பகுதி. நாட்டு வளம், நகர வளம்அமைத்துப் பாடுவது 'காப்பிய மரபு' ஆகும். இனி 'காகிரி நாட்டு வளம்' என்னும் பகுதி குறிப் பிடும் 'காகிரி நாடு' எது எனக் காண்போம்.

''அறபு வளநாடு கோடி கோடி புடைகோள் காகிறூ ரில் வாழும்'' எனக் காசிம் புலவர் ஒலியுல்லாஹ் (ரஹ்) அவர்கள் தம் 'திருப்புகழ்' நூலில் (பாடல்—141) பாடியுள் ளார்கள். இம்மகான் இங்கு இவ்வாறு 'காகிறூர்' எனக் குறிப்பது இன்றைய — அன்றைக் காயல்பட்டினத்தையே என எவரும் ஒப்புவர். இதுமட்டுமின்றி இஸ்லாமியத்

தமிழிலக்கியங்களில் எங்கெல்லாம் இந்தக் 'காகிர்' என்ற (ஊர்) சொல் குறிக்கப்பட்டுள்ளதுவோ, அதுவெல்லாம் குறிப்பது 'காயல்பட்டினத்தை' மட்டுமே என்ற உண்மையை எவரும் நன்கு அறிவர்; எவரும் இதனை இன்றளவும் மறுத்தும் இலர் என்பதும் உண்மை. பல்வேறு பெயர்கள் 'கீழக்கனர' யைத்தான் குறிக்கின்றன எனச் சான்றுகள் காட்டிச் சுட்டிகாட்டி, அதனை வலியுறுத்த முற்பட்டவர்களும் கூட,(காகிர்— காகிறூர்— காஹிர் — காஹிறான்— காஹிர் ஊர்) 'காகிர்' என்ற ஊர் 'காயல்பட்டினம்' ஒன்றையே குறிப்பிடுவதாக ஒத்துக்கொள்வர் என்பது உணரத்தக்கது. இக்கருத்தில் இவர்களுக்கும் உடன்பாடே உண்டு. பிறரும் உடன்பட்டுள்ளனர் என்பதும் வெளிப்படை. இதுவே உள்ளமையான உண்மையும் கூட.

அவ்வாறு எனில், 'காகிரி நாட்டு வளம்' என்னும் இப்பாடல் தொகுப்புநூல் கூறும் 'காகிரி நாடு' எது? என்பதே வினா. அவ்வினாவுக்கு விடையாகக் கீழ்வரும் விளக்கம் அமையும். அவ்விடையும் எவரும் ஏற்கக் கூடிய, 'நன்னெறியான' ஆய்வு விடையே என்பதும் தெளிவாகும். இனி, இது குறித்துக் காண்போம்;

'வகுதை நன்நாடு' என்னும் நகரைப் பாடவந்த இப்புலவர், 'வகுதை நாட்டு வளம்' என்றே தலைப்பில் குறிப்பிடாமல், மாறாகக் 'காகிரி நாட்டு வளம்'என்றேகுறிப்பிட்டுள்ளது ஒன்றே 'வகுதை நாடு' என்பது 'காகிர் நாடே' என்பதைத் தெளிவாக்கி நிற்கின்றது. ஆகலான் 'காகிர் நாடு' என்பது
'வகுதை நாட்டையும்' ''வகுதை நன்னாடு' என்பது 'காகிர் நாட்டை' யும் சிறப்பாக ஐயமற. எடுத்துக் காட்டுவதை எவரும் உணர்வர். காகிர், காஹிரூர். காயிறூன் என வருவன எல்லாம் 'காயல்' என்னும் காயல்பட்டினத்தையே குறிப்பிடுவன. எவரும் ஒத்துக்கொண்டுள்ளனர் என்பதை



மேலே சுட்டினோம். அவ்வாறாயின், இங்கே வந்துள்ள 'காகிரிநாட்டுவளம்' என்பது 'வகுதை நாட்டுவளம்' குறித்தே வந்துள்ளதும், அவ் 'வகுதை' என்பது காயல்பட்டினம் நகர் வளத்தையும் தான் உண்மையில் சுட்டிக் காட்டுவது துணிபு. இதில் இடம்பெற்றுள்ள எல்லாபாடல்களும் [8, 11, 9, 12, 13 ஆம்பாடல்கள்தவிர ] ''வகுதை நன்னாடே என முடிவதும், பாடல்கள் 8, 9, 11, 12, 13, என்பன ''காயல் ஊர் எங்கள் ஊரே'' எனவும் முடிவது காண்க. 2-வது பாடலில் மட்டும் 'கீழக்கரையினில் வாழ்ந்து' என்று வந்துள்ளதும் காண்க.

அதுவும்இரண்டாம்பாடல் 'குளகச்செய்யுளாக' நின்று [பொருள் முடிவுறாமல்] மூன்றாம் பாடலைத் தழுவி நின்று (நிறைவுப்) பொருளைத் தருவதும் புலமைச் சான்ற அறிஞர் எவரும் மறுப்பின்றி ஏற்கக் கூடிய உண்மையாவதும் கண்கூடு.

அதாவது இரண்டாம் பாடலின் ஈற்றடியின் ஈற்றுச் சீர்களான, 'வகுதை நன்னாடே' என்பதை மூன்றாம் பாடலின் முதல் சீரோடு 'கொண்டு கூட்டிப் பொருள் கொள்ள' வேண்டும் என்பதும் சான்றோர் உணர்வர்.

அவ்வாறாயின்,''வகுதைநன்னாடே பிறந்து கீழக்கரையினில் வாழ்ந்து'' என வரும். இவ்வாறுவருவதே இலக்கண முறை.அவ்வாறன்றி, ''பிறந்து கீழக்கரையினில் வாழ்ந்து'' (பாடல் 3) என அமையாது; அமையின் பொருள் தராது; இலக்கணம் அற்றதும் பொருளற்றதும் அது ஆகிவிடும் என்பதும் தமிழறிஞர் உணர்வர்.

உண்மை இவ்வாறாக, 'காகிரி நாட்டு வளம்' என்னும் தலைப்பு 'வகுதை நன நாட்டு' வளத்தையே சுட்டி நிற்கிறது என்ற உண்மையும், 'வகுதை' என்பது'காகிர்' என்பதையே எடுத்து இயம்பியுள்ளது என்ற உண்மையும், அவ்வாறே இப்பாடல்களுள் வரும் 'காயல்' ஊர் என்பதும் காகிர்,

வகுதை என்று வழங்கா நின்ற காயல்பட்டணத்தையே குறித்து நிற்கிறதுஎன்பதும் தெற்றென விளங்குவன ஆகும். அல்லவா? மூன்றாம் பாட்டில் வந்துள்ள 'கீழக்கரையில்' என்பது ஒன்றே கீழக்கரை ஊரைக்குறிப்பது என்பதும் 'கார் இருள் அகற்றும் ஞாயிறு' போலத் தெளிவாவது உண்மை அல்லவா?

ஆகலான், இதுகாறும் கண்டனவற்றால், காகிரிநாடு, வகுதைநாடு, காயல் ஊர் எனவெல்லாம் "காகிர் நாட்டு வளம்" பாடல்களில் இடம் பெற்று நிற்கும் சொற்கள் (பெயர்கள்) அனைத்துமே காயல்பட்டினத்தையே உணர்த்தி வந்தவை என்பது தெளிவு.



# காயலும் கொற்கையும்

ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் காயல் என்று சிறப்பாக அழைக்கப்பட்ட மாநகரம்தான் காயல்பட்டினம். புன்னைக் காயல், பழையக்காயல் என்று மூன்று ஊர்களாக இன்று காட்சியளிக்கின்றன. இம்மூன்று ஊர்களும் இன்று ஒன்றை ஒன்று ஒட்டியே அமைந்திருக்கின்றன. தாமிரபரணிஆறு காயல்பட்டணத்திற்கும், புன்னைக்காயலுக்கும் இடையில் கடலில் சங்கமமாகிறது. தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்திற்கு தெற்கே காயல்பட்டினமும் வடக்கே புன்னைக் காயலும் இருக்கின்றன. பழையக்காயல் புன்னைக்காய லுக்கு அருகில் அமைந்திருக்கின்றது. எனவே இம்மூவூர்க ளின் இன்றைய அமைப்பும் வளமும் அன்றைய காயலுக்கு பொருந்தும். இன்று காயல் என்று தனியாக எவ்வூருமில்லை. இதனால் சில வரலாற்றாசிரியர்கள் இம்மூன்றூர்களில் எவ் வூரைகாயல் என்றழைப்பது என்பதில் தடுமாற்றம் அடைந்தி ருக்கின்றனர். பல பயணிகளும், வரலாற்று வல்லுனர்களும் காயல்பட்டினம் தான்அன்றைய காயல் எனஎழுதியுள்ளார் கள். சிலர் பழைய காயல்தான் அன்றைய காயல் என மொழிந்துள்ளார்கள். இம்மூன்று ஊர்களும்அன்றை காயலின் அங்கங்கள் என்பதை மனதில் நிலை நிறுத்தியி ருந்தால் தடுமாற்றம் ஏற்பட்டிருக்காது.

உலகஞ்சுற்றிய தமிழரும், தண்டமிழ் நாட்டின் தலைச் சிறந்த எழுத்தாளரும், அரும்பெரும் நூல்கள் பல படைத்த அறிஞர் சோமலெ (S. M. L. லட்சுமண செட்டியார்) அவர் கள் தமிழ்நாட்டின் சிறப்புகளையெல்லாம் மாவட்டம் வாரியாக சகலவித புள்ளி விபரங்களோடும், நேரில் கண்ட றிந்த வரலாற்று உண்மைகளோடும் எழுதியுள்ள மாவட்ட நூல்களிருந்து சில விபரங்களை இங்கு குறிப்பிடுகிறேன். தொன்மையான நாகரீகத்திற்கும், வீரப்போராண்மைக்கும் தியாகச்செம்மைக்கும், தமிழின் நயத்திற்கும்' புதுமை வளர்ச்

சிக்கும் விளை நிலமாகிய நெல்லைச்சீமையைப்பற்றி திருநெல்வேலி மாவட்டம் என்ற பெயரில் நூல் எழுதியுள்ளார்கள். அதில் காயல்பட்டினம் என்ற தலைப்பில் எழுதியிருப்பதை அப்படியே இங்கு எழுதுகிறேன்.

மார்க்கோ போலோ
கண்ட காயல்

„காயல் பாண்டிய நாட்டுத் துறைமுகமாகஇருந்தது.12, 13ம் நூற்றாண்டுகளில் இத்துறைமுகம் பெரும் புகழ் பெற்றிருந்தது. 1292 ல் மார்க்கோபோலோ என்ற இத்தாலிய வணிகர் இவ்வூருக்கு வந்தார். பல நாடு கண்டு பல பொருட்கள களஞ்சியமாகவிளங்கிய இவர் இவ்வூரின் செல்வ வளத்தையும், வணிக உயர்வையும் முத்துகுளிக்கும் தொழிலின் மேன்மையையும் சிறப்பித்துள்ளார். தளபதி யூல் இவ்வூரைப்பற்றி விரிவாக எழுதியுள்ளார்.1890 அளவில் கலெக்டராயிருந்த பக்கின் துரை பக்கின்வாய்க்கால் தோண்டும்போது கிடைத்த பழைய அரபி பொற்காசுகளை சென்னை பொருட்காட்சி சாலையில் வைத்துள்ளார். காயல் நகர் (காயல்பட்டினம்) திருச்செந்தூருக்கும், ஆறுமுகநேரிக்கும் இடையே இருக்கிறது. காயல்பட்டினம் துறைமுகம் 1937 இல் மூடப்பட்டது. காயல்பட்டினத்திற்கும் சோனகப் பட்டினம்என்ற பெயரும்உண்டு.'' காயல் என்பது கடலோரத்தில் ஆற்றுக்கால்வாய் அமைந்த நிலப்பகுதியாம். தமிழ்



நாட்டில் நெல்லையைத்தவிர வேறெங்கும் இவ்வகை ''நீர் நிலைகள்காயலென்றபெயருடன்காணப்படவில்லை திருநெல்வேலி மாவட்டத்தில் காயல்பட்டினம், மஞ்சள் நீர்க்காயல், பழையக்காயல், புன்னைக்காயல் என்னும் ஊர்கள் இருக்கின்றன என்று சேமலெ என்ற அறிஞர் கூறுகிறார். இவர் காயல்பட்டணத்தின்மற்றசிறப்புகளையும் அந்நூலில்குறித்துள்ளார். ஆயிரம ஆண்டுகளுக்கு முன் முஸ்லிம்கள் காயல் பட்டணத்திற்கு அரபு நாட்டிலிருந்து வந்தார்கள், என்று திருநெல்வேலி கெஜட்டியர் நவில்கிறது. கி. பி. 1292 இல் காயல்பட்டினம் வந்த மார்கோபோலோ காயலும் சொற்யும் தாமிரபரணி ஆற்றின் முகத்துவாரத்திலிருந்தன என கூறுகிறார்.

''Kayal and korkai were situated on the delta of the Tamira parani.'' (Marco polo) சிறந்த வரலாற்று ஆசிரியராகிய திரு கே.எ. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் மசூத்(916) இப்னு பதூதா (14 ஆம் நூற்றாண்டு) போன்ற வெளி நாட்டு பயணிகள் மேற்கு கடற்கரை பகுதியில் முஸ்லிம்களையும், பள்ளிவாயல்களையும் கண்டதாக குறிப்பிட்டுள்ளார்கள். கிழக்கு கடற்கரைப் பகுதியிலுள்ள முஸ்லிம் குடியேற்றங்களில் காயல்பட்டினமும், நாகூரும் முக்கியத்துவம் வாய்ந்தவை என உரைக்கிறார்.

''Travellers like Masudi (916) and Ibn Batuta(Fourteen Century) testify to the presence of Muslims and mosques all along the west coast, There were Muslim settlements on the east coast of which Kayalpatnam and Nagore were the most important. (History of south India — K. A. Nilakanta sastri)

கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் அரபியர்கள் திருநெல்வேலி மாவட்டததிலுள்ள காயல்பட்டணத்தில் குடிபுகுந்தார்கள் என டாக்டர் கால்டுவெல் அவர்கள் கூறியுள்ளார்கள்.




அமெரிக்காவிலுள்ள மினஸ்ட்டோ யுனிவர்ஸிட்டி அதிகாரிகளால் வெளியிடப்பட்ட இந்திய படம். 8ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டு வரை மதங்கள் தழைத்த இடங்கள்குறிப்பிடப்பட்டுள்ளன. இதில் காயல்பட்டினமும் நாகூரும் தமிழகத்தின் இஸ்லாமியர்களின் முக்கிய இடங்கள் என குறிப்பிடப்பட்டுள்ளன.



ஆற்றங்கரை நாகரிகம் என்ற நூலில் டாக்டர் மா இராச மாணிக்கம் காயல்பற்றி குறிப்பிட்டவை;

''வைகையாறு வடபாண்டி நாட்டுக்கு உயிர்நாடி.இவ் வாறே தென்பாண்டி நாட்டுக்குப் பொருநையாறு உயிர் நாடி.கி. பி. 900 முதல் 1200 வரையிலும் இருந்த பாண்டிய மன்னர்கள் சோழப்பேரரசுக்கு அடங்கிய சிற்றரசர்களாக இருந்து வந்தனர். பதின்மூன்றாம் நூற்றாண்டில் பாண் டியர் பேரரசாகிச்சோழரைச்சிற்றரசர்களாக்கி விட்டனர். இக்காலத்தில் வாழ்ந்த முதல் சடையவர்மன் குலசேகரப் பாண்டியன், முதல்மாறவர்மன் சுந்தர பாண்டியன், இரண் டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், முதல் சடையவர் மன் சுந்தரபாண்டியன், முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் என்பவர் புகழ் மிக்கவர். முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன (கி. பி. 1268-1311) காலத்தில் இத்தாலிநாட்டுவெனிசு நகரத்தனாகியமார்க்கோபோலோ என்பவன் பாண்டிய நாட்டில் பல நகரங்களைப் பார்வை யிட்டான். பாண்டிய நாடு பலநாடுகளாகப் பிரிக்கப்பட் டு இருந்தது. நாடு கூற்றம் என்று சிலவிடங்களில் வழக்குப் பெற்றிருந்தது. கொற்கையைச் சூழ்ந்த பெருநிலப்பகுதி மதுரோதய வளநாடு எனப் பெயர் பெற்றது. கொற்கை, தொண்டி, காயல்என்பன புகழ்பெற்ற கடற்றுரைப் பட்டி னங்களாக விளங்கின. காயல் 13ஆம் நூற்றாண்டில் சிறப் புற்று இருந்தது. கொற்கையும் காயலும்கடல் பின்னோக் கிச் சென்றமையால் தம் சிறப்பை இழந்து விட்டன.''

''தென்பாண்டி நாட்டுக் காயல்பட்டினம் கலங்கள் இயங்கும் துறையாய் விளங்கிய காலத்தில் தரை மார்க்கம் கண்ட மார்கோபோலோகாயலை அடைந்தார்.பாண்டியர் ஐவாரண்ட காலத்தில் சுந்தர பாண்டியனை மதுரையில் கண்டார்'' என்றுபேராசிரியர்சுந்தரராசு கூறுகிறார்.தென் பாண்டிய நாட்டுக் கடற்றுரையான காயல் துறையையும் அதற்கடுத்துள்ள தாமிரபரணியாற்றங்கரை கொற்கை துறையும் பாண்டியர்களின் செல்வச் செழிப்பு மிக்க துறை

முகப் பட்டினங்களாகும். இன்றைய கொற்கையே பண்டைய கொற்கை அல்லாது வேறல்ல. கொற்கையிலும் காயல் பட்டினத்திலும் அக்கால நாணயங்கள், கண்ணாடிப் பொருட்கள் ஓடுகள் இன்றும் கிடைக்கின்றன, என்று டி. வி. சதாசிவப் பண்டாரத்தார் தம்முடைய பிற்காலபாண்டியர் சரித்திரம் என்னும் நூலில் எழுதியுள்ளார். தமிழகத்தின் துறைமுகங்கள் என்னும் நூலில் மா. ரா. இளங்கோவன் காயல் பற்றி எழுதியவை:- கொற்கைத் துறைமுகம் அழிந்த பின்னர் 'காயல்' ஏறத்தாழ கி. பி. பன்னிரண்டு அல்லது 13ம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டு துறைமுக நகர் ஆயிற்று; பொருனையாறு கடலோடு கலக்கும் இடத்திலேயே காயலும் அமைந்து இருந்தது. காயல் வாழ் மக்கள் 'தாம்பூல்' என்று வழங்கப்பட்ட இலையை வாயில் அடைத்துக் கொண்டு, மென்று தின்பதில் மிகுந்த விருப்பம் கொண்டவராய் இருந்தனர் என பாரசீக வரலாற்று ஆசிரியர் 'வாசப்' என்பவர் காயலைப்பற்றி குறிப்பிட்டுள்ளார். மேலைநாட்டுப் பொருள்கள் காயல் துறைமுகத்தின் வழியாகவே வந்து குவிந்தன என்றும், துறைமுகத்தின் வழியாகவே தமிழகத்தின் சிறந்தபொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன என்றும் அவர் குறித்துள்ளார். மாலிக்காபூர் கி. பி. பதினான்காம் நூற்றாண்டில் இக்காயலைக் கொள்ளையிட்டு பத்துலட்சம் பவுன் மதிப்புள்ள பொருட்களைக் கொண்டு சென்றார் என்று கூறப்படுகிறது. 1498-இல் வாஸ்கோடகாமா இங்குவந்தபோது முஸ்லிம் அரசனின் பார்வையில் காயலில் முத்து எடுக்கும் உரிமை 'உயிலன்' என்னும் மன்னனிடம் இருந்தது. அப்போது போர்த்துக்கீசிய நாட்டைச்சேர்ந்த பார்மோசா என்பவர் இங்கு வந்தார். 1542இல் செயின்ட் சேவியர் இங்குவந்தபோது முத்து எடுக்கும் உரிமை போர்த்துக்கீசியரிடம் இருந்தது.

பண்டையத் தமிழகமும் பல நாட்டுறவும் என்னும் நூலில் பேராசிரியர் அ. சி. மிக்கேல் சாமி அவர்கள் காயல்பட்டினம் பற்றி எழுதியவை :-'' காயல்



பட்டினம் மேன்மையும் பெருமையும் பொருந்திய நகரம். இது பொருநை ஆற்றங்கரையில் கொற்கை நகருக்குக் கிழக்கில் $3\frac{1}{2}$ கல் தொலைவிலமைந்திருந்த நகரம். மார்க்கோ போலோ பல நாடுகளையும் நகரங்களையும் கண்டவர். எனினும் அவர் காயல்பட்டணத்திற்குவந்து அந்நகரத்தின் அமைப்பு சிறப்புகளை கண்டு வியந்தார். இளைஞனாய் அரசு வீற்றிருந்த மன்னனின் மாண்பு. நாட்டுச் செழிப்பு, நகரச்செல்வநிலை, வாணிபப்பெருக்கம், மக்களின் பழக்க வழக்கம், முதலியவை எல்லாம் அவர் மனதை பெரிதும் கவர்ந்து விட்டன. எனவே அவர்களைப்பற்றி விரிவாக எழுதியிருந்தார் காயல் துறைமுகம் பற்றி பேசும் காலத்து அவர், அயல் நாட்டு வணிகர்கள் இங்குவந்து தம் விருப்பம் போல் தங்குவதற்குரிய எல்லாவசதிகளும் இத்துறைமுகத்தில் இருக்கின்றன. பிறநாட்டு வணிகர் அன்புடன் வரவேற்கப்படுகின்றனர். அவர்களின் தேவைகள் உடனுக்குடன் கவனிக்கப்படுகின்றன. ஆதலின் ஆர்மஸ், அரேபியா ஏடன், முதலியவெளி நாடுகளிலிருந்து வரும் கப்பல்கள் இதனைத் தம் துறைமுகம் போன்றே கருதித்தங்குகின்றன, என அவர் பகர்ந்துள்ளார். அவர் பாராட்டுக்கும் தமிழரின் புகழுக்கும் இலக்காக இலங்கிய காயல்பட்டினம் பின்னர் தன்பெருமையை இழக்கத் தொடங்கியது. துறைமுகப்பகுதி போதிய ஆழத்துடனில்லை. எனவே இதனினும் நல்வாய்ப்புகளைக் கொண்டிருந்த தூத்துக்குடித்துறைமுகம் மாற்றபட வேண்டியதாயிற்று. ''கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எகிப்தில் வாழ்ந்த அராபிய குடும்பங்களுக்குப் பேரிடர் தோன்றியது. தம் நாட்டை. விட்டுக் குடும்பங்களோடு வெளியேறினார்கள். அவர்களுள் சிலர் வளம் மிகுந்த தமிழ்நாட்டில் தஞ்சம் அடைய துணிவு கொண்டு, கப்பல்களில் ஏறிச் சொல்லொன்னாத் துன்பம் அடைந்து, ஒருவாறு தென்குமரியை கடந்து பாண்டி நாட்டின் துறைமுகமாகிய காயலில் வந்து இறங்கினார்கள். காயல் என்பது பாண்டியன் துறையாகிய, கொற்கையின் அண்மையில் உள்ளது'' என்று பேராசிரியர் கே. எம். கே. அப்துல்

காதர் அவர்கள் தம்முடைய சீதக்காதியும் செந்தமிழ் புலவரும் என்னும் நூலில் கூறுகின்றார்.

சுவாமிசுத்தானந்தபாரதியார் தம்முடையதமிழுணர்ச்சி என்ற நூலில் காயல்பட்டினத்தில் நடைபெற்ற வர்த்தக சிறப்பை பின்வருமாறு எழுதியுள்ளார். காயல்பட்டினத்தில் சுறுசுறுப்பான கப்பல் வாணிபம் நடந்தது. பாண்டிய மன்னர்கள் கப்பல் வாணிபத்தை மிகவும் போற்றி வளர்த்தனர். மேற்கிலிருந்து வரும் கப்பல்கள் காயல்பட்டணத்தில் தங்காமல் போவதில்லை. இந்தியா, சீனா மேனாடுகளின் சரக்குகளையெல்லாம் இங்குவந்துகுவியும். சுதேசிசாமான் ஏராளமாக ஏற்றுமதியாகி பொன்குவியும் இந்த நாடே இந்திய வாணிபத்தின் திறவுகோல். நமது பாரதத்தில் முதல் பிரதமர் புகழ்பெற்ற பண்டிதர் ஜவஹர்லால் நேரு தம்முடைய 'டிஸ்கவரி ஆப் இந்தியா' என்னும் நூலில் ''காயல்பட்டினத்தைப்பற்றிபின் வருமாறு எழுதியுள்ளார். ''டில்லிஆதிக்கம் தெற்கே பரவியது. சோழ அரசு வீழ்ந்தது. அதனிடத்தில் கடல் வலிமை மிக்க ஓர் ஆதிக்கம் ஏற்பட்டது.அது தான் பாண்டி ஆதிக்கம். மதுரை அதன் தலைநகரம். கிழக்கு கடற்கரையிலுள்ள காயல்பட்டணம் அதன் துறைமுக நகரம். சிற்றரசு தான். எனினும் வர்த்தக முக்கியத்துவம் வாய்ந்தது. மார்க்கோபோலோ சீனாவுக்கு போகும் வழியில் கி. பி. 1288ல் ஒருமுறையும், சீனாவிலிருந்து வரும் வழியில் கி. பி. 1293 ல்மறுமுறையும் காயல்பட்டணத்திற்கு வருகைதந்திருக்கிறார். அரபு நாட்டிலிருந்தும் சீனாவிலிருந்தும் கூட்டகூட்டமாககப்பல்கள்வந்துபோகும். பெரும் புகழும்பேரழுகும் மாண்பும்பெற்ற மாநகரம் இது எனஇதனைமார்க்கோபோலோவர்ணித்துள்ளார் இந்தியாவிலே கிழக்கு கரையோர ஊர்களிலே உற்பத்தியாகி இங்கிருந்து ஏற்றுமதியாகும், சிலந்திவலைப் போன்ற மிக மெல்லிய மஸ்லின் துணி பற்றியும் அவர் குறிப்பிட்டுளளார் '' சலவைத்தொழிலும், சாயத்தொழிலும்காயல்பட்டினத்தில் சிறப்பாக நடைபெற்ற விபரத்தை இஸ்லாமிய வரலாற்று ஆசிரியர் அபூஸயத் எழுதியிருக்கிறார்.



வாஸ் கோடகாமா காயல்பட்டினத்தைவந்து பார்த்து இது ஒரு முஸ்லீம் ராஜ்யம் என்று தமதுரொடெய்ரோ (Roteiro) என்ற நூலில் எழுதியுள்ளார். இங்கு மது ஒழிக்கப்பட்ட விபரத்தையும், விண்கலையில் இங்குள்ள மக்களின் ஞானத்தையும் மார்க்கோபோலோ தம்முடைய நூலில் குறிப்பிட்டுள்ளார். காயல்பட்டினம்பெரிய ஜும்ஆபள்ளியைகட்டிய மலிக்குல் இஸ்லாம் சுல்தான் செய்து ஜமாலுதீத்ன் அவர்கள் மன்னர் சுந்தரபாண்டிய தேவர் மறைந்த பின் பாண்டிய நாட்டை மாட்சிமையுடன் ஆண்டதை ரஷீதுத்தீன் எழுதிய ''ஜாமிஉக்த வாரீகை' யும்வாஸப் எழுதிய தஸ்ஜியத்துல் அம்ஸார் வதற்ஜியதுத்ல் அஃஸாரும் விளக்குகின்றன. ஸர் எலியட் என்ற புகழ்பெற்ற வரலாற்று ஆசிரியர் இந்நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து ''ஹஸ்டரி ஆப் இந்தியா,' என்ற நூலைத் தொகுத்துள்ளார்.

உலக நாடுகளின் படங்கள் அடங்கிய நூல்களிலுள்ள (Atlas) இந்திய வரைப்படத்தில் காயலும், கொற்கையும் குறிக்கப் பட்டிருக்கின்றனவா என்பதை ஆய்வோமாக. அமெரிக்காவிலுள்ள புகழ் பெற்ற சிக்காகோ பல்கலை கழகம் மூலம் (A Historical Atlas of South Asia:- Edited by J. E. Schwartzberg-university of chicagopress,chicago-printed In 1928) வெளியிடப்பட்டுள்ள தென் ஆசியாவின் வரலாற்று வரைப்படத்தில் பலஇந்திய வரைபடங்களில் கொற்கையும் காயலும் தாமிரபரணி ஆறுகடலில் கலக்கும் இடத்தில் குறிக்கப்பட்டுள்ளன. வரைபடம் 13 B:- இந்த இந்திய வரைபடம் இராமாயண கதை அடிப்படையில் வரையப்பட்டுள்ளது. இதில் இராமன் லங்காவுக்கு தாமிர பரணி ஆறுகடலில் கலக்கும் இடத்தின் வழியாக (Kapata) கபாட்ட வந்து பின் இராமேஸ்வரம் வழியாக வந்து சென்றார் என குறிக்கப்படுகிறது. (The index identifies it with Kayalpatnam )சுவடியின் அட்டவணையில் அவ்வூரிருந்தஇடம் இன்றைய காயல்பட்டின பகுதி என குறிக்கப்படுகிறது. வரைபடம் 16C:- இந்த வரைபடம் கொளடில்லிய அர்த்த

சாஸ்திரத்தில் குறிக்கப்பட்டபடி வரையப்பட்டபடம்(கி மு 4ம் நூற்றாண்டு) இந்த வரைபடத்தில் பாண்டிய காவத்த (Pandya Kavata) தாமிரபரணி ஆற்றின் தெற்கே என்று எழுதப்பட்டிருக்கின்றது. சுவடியின் அட்டவணையில் அவ் வூர் இருந்த இடம் இன்றைய காயல்பட்டின பகுதி எனக் குறிக்கப்பட்டிருக்கிறது. வரைபடம் 18 Maurya Empire 321 - 181B.C(மௌரிய அரசாங்கம்)

வரைப்படம் 19— Maurya Empire VI to III B.C. (மௌரிய அரசாங்கம்)

வரைபடம் 20 — Indo Greek Ascendancy 200-1 B.C (இந்திய கிரீக் அஸென்டன்சி)

வரைபடம் 21 — Satrahana and Sakkushana 1-300 A D (சத்ரஹானா & சக்குஷானா)

வரைபடம் 22 — Religious and Cultural Sites 200-300 BC (ரிலிஜியஸ் & கல்ச்சுரல் சைட்ஸ்)

வரைபடம் 25 — Gupta Vakaraka Age 300-550 A.D (குப்தா வக்கரக காலம்)

வரைபடம் 26 — Pushyabuti and Chalukya 550 - 700 A D (புஸ்ஸியபட்டி & சாளுக்கியா)

மேலே குறிப்பிடபட்ட இந்திய வரைபடங்களில் கொற்கை தாமிரபரணி ஆற்றின்கரையில்உள்ள துறை முகம் என குறிப்பிடப்பட்டிருக்கிறது. சிலவரைபடங்களில் இராமேஸ்வரமும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் கீழக் கரை என்ற பெயரை காணமுடியவில்லை.

வரைபடம் 34A-Religious ond Cultural sites 8-12 Century A D Shows Korkai and Thrupullani(ரிலிஜியஸ் & கல்ச்சுரல் சைட்ஸ் கொற்கையும், திருப்புல்லாணியும் குறிக்கப்பட் டிருக்கிறது)

வரைபடம் 34B:-Religious and Cultural Sites8-12 Century A D Kayalpatnam is identified with Islam. (ரிலிஜியஸ் & கல்ச்சுரல்சைட்ஸ் காயல்பட்டணம் இஸ்லாமியர்களின் முக் கிய ஊர் என குறிக்கப்பட்டிருக்கிறது)



வரைபடம்:- 38 B: - 1190—1310. வரைபடம்: 39 C:- 1390 - 1485 வரைப்படம் 40 C:- 1485-1605 இப்படங்களில் எல்லாம்காயல் திருநெல்வேலிஜில்லாவிலுள்ளதாமிரபரணி ஆறுகடலில் கலக்கும் இடத்தில் குறிக்கப்பட்டுள்ளது.

வரைபடம்:-50 Plate VI B—1530 AD Shows Kayalpatnam and Punaikayal in block capltal and Kilakari in small Letters கி.பி. 1530யில்வரையப்பட்ட படத்தில் காயல்பட்டினமும் புன்னைக்காயலும் பெரிய எழுத்திலும், கீழக்கரை சிறிய எழுத்திலும் குறிக்கப்பட்டுள்ளன. கி.பி. 1530க்குப் பின் வரையப்பட்ட வரைபடங்களின் தான் கீழக்கரையின் பெயரை காணமுடிகிறது. எனவே வரைபடங்களின் அடிப் படையிலும் ஆய்கின்ற போதும் காயல்பட்டினம் மிகவும் தொன்மைவாய்ந்தஊர் என்பதை புரிய முடிகிறது.

காயல்பட்டினம் அமைந்திருக்கும் இடம் மிகவும் தொன்மையும், கீர்த்தியும் பெற்ற இடம் என்பதை தமிழ் இலக்கியங்கள் மூலம் அறிகிறோம், 'கபாடபுரம்' பொருனை ஆறுகடலோடு கலக்கும் இடத்திலிருந்தது. கபாடபுரம் பாண்டியர் தலைநகரே. கபாடபுரம்கடற்கோளால்அழிந்த காலம் கி.மு.நான்காம் நூற்றாண்டுக்குபின் (ஆதாரங்கள் ஆராய்ச்சித் தொகுதி மு இராகவையங்கார்; இலக்கியவர லாறு கா.சுப்பிரமணியபிள்ளை;தமிழ்நாவல்சரிதை-ஔவை சு. துரைசாமிப்பிள்ளை; கன்னித்தமிழ்-கி.வா. ஜெகந்நாதன். தென்னிந்தியாவும் சிலோனும். கே. கே. பிள்ளை)பொருனை ஆறு கடலோடுகலக்கும் இடத்தில் இன்று இருக்கும்ஊர்கள் காயல்பட்டினமும், புன்னைக்காயலும்தான். சங்ககால தலைநகராகவும், துறைமுகமாகவும் காயல் துலங்கியது என்பதை அறிகிறோம். "திருச்செந்தூருக்கு அருகில் அலை வாய் துறைமுகம் இருந்தது. கபாடபுரம் அலைவாய் நகர் ஆகும்" (ஆதாரங்கள் — தமிழ் லிட்டரேச்சர் எம். எஸ். பூரணலிங்கம்பிள்ளை; சோழர் வரலாறு-மா. இராச மாணிக்கர், தமிழர் வரலாறு தேவநேயன், தென் நாட்டுப் போர்க்களங்கள்— கா. அப்பாதுரை, தொல்காப் பியம், எழுத்ததிகாரம்-கா. சுப்பிரமணியப்பிள்ளை) இரா மயாணத்தில் சொல்லப்படும் கபாடம் என்பது அலைவாய்

என்னும் தமிழ் சொல்லின் சமஸ்கிருத ஆக்கமாக தோன்று கிறது என்று கூறுகிறார்கள். சி. கந்தையாப்பிள்ளை, பண்டிட். டி. சவரிராயன் போன்ற அறிஞர்கள் திருச்செந்தூருக்கும், கொற்கைக்கும் இடையில் இந்த அலைவாய் துறை முகம் இருந்ததாகச்சொல்லப்படுகிறது என்றுஉரைக்கிறார்கள். இதுவே பெரிப்ளூஸ் என்ற கிரேக்கர் குறிப்பிடும் துறைமுகமாகவும் தெரிகிறதுஎன்று கூறுகிறார். ஆபிரகாம் பண்டிதர். தொண்மையாணநாகரீகத்தின்இருப்பிடம்காயல் பட்டினம் என்பதை இலக்கியங்கள் வாயிலாகஅறிகிறோம்.

தென் இந்தியாவின் மிகப் பழமையான நாகரீகம் நனி சிறந்துவிளங்கியதுபொருநைக் கரையிலே என்று டாக்டர் கால்டுவெல் நவின்றுள்ளார். தன் பொருனை என்பதே தாமிரபரணி என மருவி வழங்குகிறது என்ற கருத்தும் நிலவி வருகிறது. ''பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே'' என்று புறநானூறு இந்த பொதியமலையை, இமயமலைக்கு இணையாகச்சிறப்பிக்கிறது. இம்மலையிலிருந்து இறை அருளால் சுரந்து பொழிவது போல் பொங்கி வருகின்றன. அருவியின் பெருவெள்ளம் பொருநை ஆறாய் தவழ்ந்து திருநெல்வேலி மாவட்டத்திற்கு வாழ்வும்வளமும் வழங்குகிறது இந்தபொருநை என்ற தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்திற்கு அருகில் கொற்கை இருந்தது. இந்ததாமிரபரணி ஆறு காயல்பட்டணத்திற்கும் புன்னைக் காயலுக்கும் இடையில் மன்னார்குடாக்கடலுடன் கலக்கிறது என்று சோமலே தன்னுடைய திருநெல்வேலி மா மாவட்டம் என்னும் நூலில் கூறுகிறார். கொற்கைத் துறைமுகம் ஈராயிரம் ஆண்டுகளுக்குமுன்னரே பலநாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்தன. பாண்டியரேயன்றிச் சேரர் சோழர் ஆகியோரும் சேர்ந்து மூன்று சகோதரர்களாக ஒரு காலத்தில் கொற்கையை ஆண்டதாக டாக்டர் கால்டுவெல் கருதுகிறார். கொற்கை பாண்டிய நாட்டின் தலைநகரமாக்வும் துறைமுகமாகவும் கடல் வணிகம் சிறந்த பெரு நகரமாகவும் விளங்கிற்று. கொற்கை கடலில் முத்து விளையும் சிப்பிகள் இருந்திருக்கின்றன. மீன் பிடிப்போர்



வளமாகவாழ்ந்தனர், சங்கஇலக்கியங்கள் கொற்கைத்துறை முகத்தைச் சிறப்பித்துக் கூறுகின்றன. மன்னார் வளைகுடா என்று இந்நாளில் குறிப்பிடுவது கொற்கை வளைகுடா என்று பெயர் பெற்றிருந்ததாக கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் கிரேக்க வணிகர்கள் எழுதி வைத்திருக்கின்றனர். 12ம்நூற்றாண்டுக்குப்பின்கொற்கைசிறப்பிழந்தது. புதைப் பொருள்களும் புதையல்களும் மிகுந்து தமிழ்நாட்டின் பண்டைக் கால மக்களை அறியச்சிறந்த இடங்களாக நெல்லையிலுள்ளகொற்கையும், ஆதிச்சநல்லூரும் திகழ்கின்றன.

கொற்கையில் ஒரு பாண்டிய வம்சமும், மதுரையில் ஒரு பாண்டிய வம்சமும் இருந்ததாக தெரிகிறது. ஆயிரக்கணக்கான கட்டிடங்கள் இருந்ததாகவும்பல நாட்டு நாணயங்கள் வழங்கி வந்ததாவும், தமிழ்க் கல்லூரி நிலவியதாகவும், பொருநை கடலுடன் கூடும் இடத்திலிருந்து 2 கி.மீ இவ்வூர் தொலைவிருந்ததாகவும், நாகரிக மனிதர் உலகில் வாழ்ந்த முதல் இடங்களுள் ஒன்று என்றும் கொற்கையைப் பற்றி ''திருநெல்வேலி மாவட்டம்'' என்னும் நூல் மூலம் அறியக் கிடக்கின்றன. கொற்கை என்ற கடற்கரை நகரம் பாண்டிய நாட்டின் சிறந்த துறைமுகமாகவும், முத்து விளையும் பதியாகவும் முன்னாளில் விளங்கிற்று. பொதிய மலையில் பிறக்கும் பொருநை என்னும் தாமிரபரணிஆறு கடலோடு கலக்கும் இடத்தில்கொற்கைமாநகரம் அமைந்துஇருக்கிறது என்று டாக்டர் ரா.பி.சேதுப்பிள்ளை தம்முடைய தமிழகம் அலையும் கடலும்என்னும் நூலில்எழுதியுள்ளார். நெல்லை நாட்டில் பிறந்து எல்லையற்ற புகழ் எய்திய குமரகுருபர அடிகள் குமரி துறையிலும், கொற்கை துறையிலும், பொருநை ஆற்றிலும், பொதிகை அருவியிலும், முத்து அகப்படும் என்றார். கொற்கை முத்து மரக்கலமேறி கடல் கடந்து பிறநாட்டு மன்னர்களின் முடிகளிலும், மாதர் அணிகளிலும் இலங்கிய செய்தியை பிறநாட்டவர்கள் குறிப்புகள் மூலம் அறியலாம்,

கபாடபுரம் அழிந்தபின் கொற்கை தோன்றியதென்று தமிழ் இலக்கிய நூல்களில் எழுதப்பட்டுள்ளன. மேலும் கொற்கையும் காயலும் திருச்செந்தூருக்கு அருகில்உள்ள சிறந்த துறைமுகப்பட்டினங்கள் என்றும் தமிழ் இலக்கிய நூல்களில் குறிக்கப்பட்டுள்ளன. கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச்சேர்ந்த சிலப்பதிகாரத்தில் கொற்கையில் பாண்டிய இளவரசர்கள் இருந்து ஆட்சி செய்யும் மரபு குறிக்கப்படுவதால் (கொற்கையில் இருந்த வெற்றிவேல் செழியன் — நீர்ப்படை காதை) கொற்கை அக்காலத்தில் ஒரு துணைத் தலைநகராக இருந்து வந்திருக்கிறது என்பது புலனாகும். மேலும் கொற்கை கடல் கோளால் அழியவில்லை. கடல் அங்கிருந்து ஐந்து மைல் விலகிச் சென்று விட்டதால் மதிப்பிழந்தது. (ஆதாரம்-1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்- வி. கனகசபைபிள்ளை தமிலியன் ஆன்டி கொரி திராவிடர்களின் ராஜ்யம்-டி.எம். ரங்காச்சாரியார். டி ஏ.தேசிகாச்சாரியார் தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் கே.கே பிள்ளை.)

கொற்கையை பெரிப்ளுஸ் கொல்ச்சி (Colchi) என்று குறிப்பிட்டதாக கே.எ. நீலகண்ட சாஸ்திரி தம்முடைய (Foreign Notices of South India) ''தென் இந்தியாவைப் பற்றி அந்நியர் குறிப்பு,, என்னும் நூலில் எழுதியுள்ளார். மார்க்கோபோலோ கண்ட காயல் துறையின் வாழ்வும் நீடித்து நிற்க வில்லை. கொற்கைக்கு நேர்ந்த கேடு காயலையும் தொடர்ந்தது. காயல் துறைமுகம் தாமிரபரணி கடலில்கலக்கும் இடத்தில் அமைந்ததனால் நாலைந்து நூற்றாண்டுகளில் தூர்ந்து போயிற்று. கொற்கைக்கும்காயலுக்கும் நேர்ந்த கதியைக் கண்ட பாண்டிய நாட்டார் தூத்துக்குடியைத் துறைமுகமாக திருத்தினார்கள் என்று டாக்டர் ரா,பி. சேதுபிள்ளை கூறுகிறார். கொற்கை கி.பி. 13ஆம் நூற்றாண்டின் இறுதியில்தான் தூர்ந்தது என்று அ. ராகவன் தம்முடைய கோநகர் கொற்கை என்னும் நூலில் எழுதுகிறார். எனவே அதற்குப் பின் வந்த மார்க்கோபோலோ



காயல் என்னும் பாண்டிய நாட்டு துறைமுகத்தில் கப்பல் ஏறினாரென்று அவரது நாட்டு குறிப்பில்காணப்படுகிறது. 13ம் நூற்றாண்டில் திருநெல்வேலி கடலோர பகுதியில் வளம் கொழித்த வணிக துறைமுக நகரங்களாக திகழ்ந்த கொற்கையும் காயலும் மணல் மேடுகளால் மூடப்பட்டு தூர்ந்து போயிற்று என்று கே.எ.நீலகண்ட சாஸ்திரி கூறுகிறார்.Once the wealthy commercial cities of Korkai and Kayal on the Tinnelvelly coast whichwere flourishing in thirteenth Century are now buried under sand dunes miles from the sea(K. A. Nilakanta Sastri — History of South India)

மா.ரா இளங்கோவன் தம்முடைய தமிழகத்தின் துறைமுகங்கள் என்னும் நூலில் கொற்கையைப் பற்றி குறிப்பிட்டவை:- பாண்டிய நாடு தென் வெள்ளாற்றை வட எல்லையாகவும், குமரி முனையைத் தென் எல்லையாகவும் வங்க கடலைக் கிழக்கு எல்லையாகவும், திருவாங்கூர் கொச்சிச் சீமையை மேற்கு எல்லையாகவும் பெற்ற நிலப்பகுதியே பாண்டிய நாடு. பாண்டிய நாட்டின் தலைநகர் மதுரை. துறைமுகப் பட்டினம் கொற்கை. கொற்கை பொருனை ஆற்றின் கரையிலுள்ள ஊர்களுள் ஒன்று. பொறுநையாறு இன்று கடலோடு கலக்கும் இடத்திற்கு நான்குகல் உள்தள்ளி, அவ்வாற்றின்வடகரையில் கொற்கை என்னும் சிற்றூர் உள்ளது. அவ்வூர் அருகில்தான் பொருநையாறு பண்டைக் காலத்தில் கடலில் கலந்து வந்தது. கொற்கை சங்க நூல்களில் பேசப்படுகிறது. கி.பி,முதலாம் நூற்றாண்டவரான 'பெரிபுளூஸ்' நூலின் ஆசிரியரும் கி.பி 2ம் நூற்றாண்டவரான தாலமியும் கொற்கையைச் சிறப்பித்துக் கூறியுள்ளனர். குமரிமுனையைச் சுற்றி வந்த வணிகர்கள் மன்னார் வளைகுடாவைக் கொற்கை வளைகுடா எனக் குறித்துள்ளனர். இச்சான்று கொற்கையின் பெருஞ்சிறப்பினை விளக்குதற்குரியது. இக்கொற்கை கிறிஸ்துநாதர் பிறப்பதற்கு முன்பே சிறப்புற்று இருந்தது எனக் கூறலாம். பாரசீகர், அரேபியர். பொனீஷியர், எதியோப்பியர்,

கிரேக்கர், உரோமானியர், பர்மியர், சீனர் ஆகியோர் இக் கொற்கைத் துறைமுகத்தோடு வணிக உறவு கொண்டனர். கொற்கையிலிருந்து முத்துக்களும், சங்குகளும் சங்கு கலால் செய்யப்பட்ட பொருட்களும் ஏற்றுமதி ஆயின. ஆடைகள், அரிசி, முதலிய தமிழகத்துப் பொருட்களையும் கொற்கைத் துறைமுகம் ஏற்றுமதி செய்தது. தமிழகத்தில் இருந்து அரிசி ஐரோப்பிய நாடுகளுக்கு மிகுதியாக கொற்கைத் துறைமுகத்தின் வழியே சென்றது.

''நீர்மிக்க முத்துக்கள் விளைகின்ற கடற்பரப்பினை உடைய கொற்கை''என நற்றினை கூறுகிறது.''கொற்கைத் துறைமுகம் உயர்ந்த மணல்மேடு வாய்ந்தது; மணல் மேட்டை அடுத்துக்கடற்கரைச் சோலை அமைந்து இருந்தது. அச் சோலையில் தாழை மரங்கள் படர்ந்திருந்தன. இத்தகையை சிறப்புடைய கொற்கைக்கடற்கரை''என அகநானூறு[130] கூறுகிறது ''விறற் போர்ப்பாண்டியன், புகழ் மலி சிறப்பிற் கொற்கை முன்றுறை''எனவுப் அகநானூறு[201]கூறுகிறது. ''கொற்கைக் கடலில் முத்து விளையும் சிப்பிகள் மிகுதியாக இருந்தன. கொற்கைக் கிளிஞ்சல்களை எடுத்து உப்பு வணிகர து பிள்ளைகள் விளையாடுவர் எனவும்அகநானூறு கூறுகிறது. தமிழகத்துத் துறைமுகங்களுள் கொற்கையும் ஒன்று. அது முத்துக்குப் பெயர் பெற்றது. அதற்கு தலைவன் பாண்டியன், அதுகடலைஎல்லையாகக் கொண்டது. உப்பளங்கள் அங்கு மிகுதியாக இருக்கும்.உப்பு வணிகரின் உப்பு வண்டிகள் உப்பை ஏற்றிக் கொண்டுபலவிடங்களுங்கும் செல்லும், என்று சிறுபாணாற்றுப்படை'' கூறுகிறது ''உலகில் பெரும் புகழ் பெற்றதுகொற்கை. அது விளைந்து முதிர்ந்த முத்துக்கள் மிகுந்த நகரம். சங்கு குளிக்கும் மக்கள் பெரும் பகுதி வாழும் சேரிகைகளை உடையது. அத்தகைய சிறந்த கொற்கைநாட்டிற்குத்தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் அரசன் ஆவான்'' என்று மதுரைக் காஞ்சி இயம்புகிறது.



பேராசிரியர் அ. சி. மிக்கேல்சாமி தம்முடைய பண்டைத் தமிழகமும் பல நாட்டறிஞரும் என்னும் நூலில் கொற்கைப் பற்றி எழுதியவை:-கொற்கை நகர் திருநெல்வேலி மாவட்டத்தில் பொருநையாறு கடலோடு கலக்கும் இடத்தில் அமைந்துள்ளது, இம்மூதூர் கி. மு. முதல் நூற்றாண்டில் பாண்டியப் பேரரசின் தலைநகராகத்திகழ்ந்தது. பின்னர்தான் மதுரை தலை நகரம் ஆகியது. இம்மாற்றம் எப்போது நிகழ்ந்தது எனத் திட்டமாகக் கூறுவதற்கு இல்லை. எனினும் கொற்கைப் பகுதியில் கிடைந்துள்ள முற்கால நாணயங்களைங் கொண்டு, கி. பி. எழு நூற்றில் தலை நகர் மாற்றப்பட்டிருக்கலாம் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள். தென்னிந்திய நாகரிகம், பொதிய மலையில் உற்பத்தியாகும் கொற்கை கடலோடு கலக்கும் பொருநை ஆற்றங்கரையில் தோன்றியது. கொற்கைமாநகர் அந்நாகரிகத்தின் தொட்டிலாக விளங்கியது என்றெல்லாம் தமிழ் நூல்கள் இயம்புகின்றன. முன்னாளில் கொற்கை சிறந்த துறைமுகப் பட்டினமாகவும் விளங்கியது. முத்து வாணிபத் துறைகளுக்கு எல்லாம் 'கோமகளாகத்திகழ்ந்தது. நவமணிகளுள் ஒன்றாகிய நன் முத்து உருண்டு, திரண்டு தெள்ளிய முத்தாக விளங்கியது. இதனை ''இப்பி ஈன்றிட்ட எரிகதிர் நித்திலம் கொற்கைப் படுவது'' என்பதால் அறியலாம் கொற்கை என்னும் பெயரை பெரிபுளுஸ், தாலமி ஆகிய இருவரும் 'கொல்கொய்' எனக் குறித்துள்ளார். இந்நன்னகர் கொற்கை என்று அழைக்கப்பட்டினும், அக்காலத்தில் அது ''கொல்கை என்றே அழைக்கப் பட்டிருக்க வேண்டும். இப்போதும் மலையாளத்தில் கொல்க என்று தான் குறிக்கப்படுகின்றது, அன்றியும் திருச்செந்தூர் கோயில் கல்வெட்டு ஒன்றிலும், காயல்பட்டின கல்வெட்டு ஒன்றிலும் அது கொல்கை எனவே பொறிக்கப்பட்டு உள்ளது. தாலமியும், பெரிபுளுஸ் ஆசிரியரும், அந்நகர் குமரி முனைக்குக் கிழக்கில் இருந்தது எனவும். தாம் அங்குப் பன்முறை சென்று இருப்பதாகவும் கூறியுள்ளனர். எனவே அக் கிரேக்கர்கள் கூறிய பெயர் (கொல் கொய்) அக்காலத்

தில் தமிழ்மக்கள் வழங்கிய பெயராகவே இருக்கும் எனத் துணியலாம் என்பவர் டாக்டர் கால்டுவெல். நம் இந்திய திரு நாட்டிலுள்ள எல்லா வரலாற்றுஆசிரியர்களும், இலக்கிய ஆசிரியர்களும், காயலும், கொற்கையும் திருநெல்வேலிஜில்லாவில் (இன்றைய சிதம்பரனார் மாவட்டம்) தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்தில் காயலும். அதற்கு அண்மையில் கொற்கையும் இருந்ததுஎன்று எழுதியுள்ளார்கள். ஆளால் அல்ஹாஜ் எம். இத்ரீஸ் மரைக்காயர் (தமிழகத்தில் மார்க்கோ போலோ இபுனு பதூதா முதற்பதிப்பு 1981, கீர்த்திமிகும் கீழக்கரை முதற்பதிப்பு (1986) ]கவிஞர் கா.மு. ஷெரீப் (வள்ளல் சீதக்காதி வரலாறு முதற்பதிப்பு 1981) கேப்டன் N. A. அமீர் அலி (வள்ளல் சீதக்காதியின் வாழ்வும் காலமும் - முதற்பதிப்பு 1983) ஆகிய மூவரும் இராமநாதபுரத்திலுள்ள கீழக்கரை தான் காயல் என்றும் கொற்கை யென்றும் எழுதியிருக்கிறார்கள். இந்த மூன்று ஆசிரியர்களும் ஒரே கருத்தை ஒரே நேரத்தில் ஒரே மாதிரியாக விளங்கி நின்று, ஒரே மாதிரியான குறிப்புகளையே விளக்கங்களையே வலியுறுத்துகின்றனர் என்பது தெளிவு. ஏற்கனவே இந்நூலில் சில இடங்களில் காயலும் கொற்கையும் எங்கு அமைந்திருந்தன என்பதை ஆதாரங்களுடன் எழுதியுள்ளேன். இருந்தாலும் இவர்களின் முரண்பாடான கருத்துக்களையும், அதற்கு வேண்டிய விளக்கங்களையும் இன்னும் சில சான்றுகளுடன் எழுதுகிறேன்.

''தமிழகத்தில் பொறுத்தவரை வரலாறு என்பது முழுமையான எழுத்து வடிவமுடையதல்லாத ஒன்றாம். கிடைத்துள்ள கல்வெட்டுகள், செப்பேடுகள், அன்னிய நாட்டினர் தம் குறிப்புகள், பயணிகள் பகர்ந்துள்ள செய்திகள், இலக்கியச் சான்றுகள் ஆகியவை தாம் ஆதாரத்திற்குரியனவாம். எனவே இருப்பதைக் கொண்டும் வெளிநாட்டுக் குறிப்புகளைக் கொண்டுமே ஆய்ந்தறிய முடியம். வெளிநாட்டுப் பயணிகளில் இப்னு பதூதாவும், மார்கோபோலோவுமேசில பயனுடைய செய்திகளைத் தருவோராவர்.



இவர்கள் தம் குறிப்புகளில் காணப்படுகின்ற பத்தன், காயல், காயல் துறை, ஆத்காடு போன்ற சொற்கள் சரித்திரஆய்வாளர்களைக் குழப்பி விட்டிருக்கக் காண்கிறோம். பத்தன் என்பதைத் திருநெல்வேலி மாவட்டத்தின்கண் உள்ள காயல்பட்டணமே என்கிறார் சிலர். காயல்துறை என்பதும் மேலே சொன்ன காயல்பட்டணமே என்று அவர்கள் ஆய்ந்து அறிந்துள்ளனர். இவர்கள் மதுரைக்கும் காயல் பட்டணத்திற்கும் உள்ள இடைவெளி தொலைவைக் கண்ணுறாதவர்கள்,'' என்றுகவிஞர் கா.மு.ஷெரீப், அவர்களின் வள்ளல் சீதக்காதி வரலாறு என்னும் நூலில் எழுதியிருக்கிறார்கள். இதேகருத்தைத்தான் எம். இத்ரீஸ் மரைக்காயர் அவர்களும் எழுதியுள்ளார்கள்.

பொதுவாகத் தமிழக வரலாற்று ஆசிரியர்கள் சரித்திரத்தைக் குழப்பி விட்டிருப்பது அரிது எனலாம். ஆனால் கவிஞர் கா. மு. ஷெரீப், கேப்டன் அமீர் அலி, எம். இத்ரீஸ் மரைக்காயர் ஆகியோர் தாம் தமிழகமுஸ்லீம்களின் வரலாற்றையும், இலக்கியத்தையும் தங்கள் மனம் போன போக்கில் எழுதி கருத்து வேறுபாடு உண்டாக வழி வகுத்து விட்டார்கள். கவிஞர் கா.மு. ஷெரீப் அவர்கள், ''அன்னிய நாட்டினர் தம் குறிப்புகள், பயணிகளின் பகர்ந்துள்ள செய்திகள், இலக்கிய சான்றுகள், கல்வெட்டு குறிப்புகள், ஆகியவற்றை ஆதாரமாக எடுக்க வேண்டுமென்று'' எழுதுகிறார்கள். ஆனால் அவர்கள் அந்தக கூற்றுக்கு முரணாகச் செயல்படுகிறார்கள். மார்க்கோபோலோவும், இபுனு பதூதாவும் தமிழகம் வந்து காயல் எங்கு இருக்கிறது என்பதை தெளிவாக எழுதியுள்ளார்கள். திருநெல்வேலி மாவட்டத்தில் தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்தில் காயல் இருக்கிறது என்று மிகவும் தெளிவாக மார்க்கோபோலோ என்ற பயணி எழுதியிருக்கிறார். இதையே சிறந்த சரித்திர ஆசிரியராகிய டாக்டர் கால்டுவெல் என்ற அன்னிய நாட்டு அறிஞரும் உறுதி செய்திருக்கிறார். இபுனுபதூதா என்ற அரபி பயணி காயலை காயல் துறை என்றும், பத்தன் என்றும்

அரபியில் அழகாக எழுதியிருக்கிறார். இபுனுபதூதா கீழக்கரையைப் பார்த்து இருந்தால், அரபியில்சிறப்பான முறையில் கீழக்கரைஎன்பதை எழுதியிருப்பார்கள். இலக்கிய நூல்கள் பலவற்றில் காயல், காயல்துறைமுகம் தாமிரபரணி ஆற்றுக் கழிமுகத்துவாரத்தில் உள்ளது என்று குறிப்பிட்டுள்ளன. உண்மை இவ்வாறிருக்க மேலே குறிப்பிட்ட மூவரும் காயலை ஏன் கீழக்கரை என்று நிருபிக்க முயலுகிறார்கள் என்பது புரியவில்லை? இவர்கள் ஏன் சரித்திரத்தைக்குழப்புகிறார்கள் என்பதைஆய்வுசெய்யஓர் ஆராய்ச்சி நிலையம் அமைத்தல் அவசியம் போல் தோன்றுகிறது!.

கொற்கைத் துறை அறிமுகம் ஆகின்ற காலத்தைக் கி. பி. இரண்டாம்நூற்றாண்டெனக் கொள்ள இயலும் சிலப்பதிகாரக்காலம் இதுவேயாதலின், கொற்கைத்துறை காலமும் இதுவாகவே அமையும் என்றும் கொற்கைதுறை பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரைக்கு அன்மையில் அறுபது மைல் தொலைவில் உள்ளது என்றும், கொற்கை என்பது நாணலின் காரணமாக ஊருக்கு ஏற்பட்டபெயர் என்றும் கவிஞர் கா.மு. ஷெரீப் அவர்கள் எழுதுகிறார்கள். நாணல் காரணமாக எழுந்த ஊராக இன்றுதிகழ்வதுதிருப்புல்லணை (திருப்புல்லாணி) என்கிற ஊராகும். இந்த திருப்புல்லாணையையும் அடுத்து நான்கு கல்தொலைவிற்குள் உள்ளதே கொற்கை. ஒரு காலத்திலே கொற்கையும், திருப்புல்லணையும் ஒன்றாக இணைந்த ஊராக இருந்திருக்கலாம்என்றும் கவிஞர் கா.மு. ஷெரீப் எழுதுகிறார்கள். நாணல் காரணமாக கொற்கைக்கும், திருப்புல்லணைக்கும் பெயர் ஏற்பட்டதனால், இரண்டு ஊர்களும் ஒன்றாக இணைந்த ஊராக இருந்து தற்போது நான்கு கல் தொலைவிலுள்ள ஊராக மாறி விட்டன என்ற கவிஞரின் நூதனமான ஆராய்ச்சியை எப்படி பாராட்டுவது என்று புரியவில்லை!

செம்பி நாடானது ஆதிநாளில் கொற்கையைத் 'தலைநகராகக்கொண்டு, மதுரை பாண்டியப்பேரரசின் கீழ் பட்



டத்து இளவரசராக வருவோரின் ஆளுகைக்கு உட்பட்டதாக இருந்திருத்தல் வேண்டும். பிற்காலத்தே வைகைஆறு விலகிச் சென்று விட்டதைப் போன்றே. பாண்டியனின் ஆட்சியும் செம்பிநாட்டை விட்டு அகன்று விட்டது. அதன் பின்னர் கொற்கை என்கின்றபெயரும் மறைந்தது. வைகையம்பதி, வகுதைமாநகர், காயல், தென் காயல் என்றெல்லாம் மாறி இறுதியாக கீழக்கரை என்று ஆகியுள்ளது என்று கவிஞர் கா.மு. ஷெரீப் கூறுகிறார். கொற்கை எப்படி வகுதையாகவும், காயலாகவும் மாறி இறுதியில் கீழக்கரையாக மாறியது என்ற கவிஞர் அவர்களின் ஆய்வுத்திறனும், கற்பனைச் சக்தியும் மிகவும் மெச்சதக்கது என்று கூறினாலும் மிகையாகாது! ஏன் இப்படியெல்லாம் கற்பனைச் செய்து எழுதுகிறார் என்பது புரியாதபுதிராக இருக்கிறது.

''தனியார் ஆய்வும் ஆராய்ச்சியும் குறையுள்ளாதாயிருக்க இயலும். அரசாங்க ஆராய்ச்சி அத்தகையதன்று. காலத்தையும் சிரமத்தையும், செலவுகளையும்பொருட்படுத்தாமல் நடுநிலையோடு ஆய்ந்து வெளியிடுகின்ற பொறுப்பு ஆட்சிக்கு உண்டு. அத்தகைய வகையில் ஆய்ந்து கண்டு இன்றைய கீழக்கரைத் தான் பழைய கொற்கை என்று கெசட்டியர் நூல் கூறுகின்றது'' என்று கவிஞர் காமு. ஷெரீப் அவர்கள் எழுதுகிறார்கள்.

கெஜட்டியர் (Gazetteer) நூல்களில் கீழக்கரைத்தான் கொற்கை என்ற ஒரு முடிவைத் தெரிவித்திருந்தால் ஏற்புடையதாக இருந்து இருக்கும். ஆனால் கெசட்டியர் நூல்களில் பயணிகள், வரலாற்று ஆசிரியர்கள், இலக்கிய ஆசிரியர்கள், ஆய்வாளர்கள் கூறுகின்ற கருத்துக்களையும் அவர்களின் தகுதியறிந்து இடம்பெற செய்கிறார்கள். சில சமயங்களில் மாற்றமான கருத்தாகவும் இருக்கலாம்.

கவிஞர் காமு. ஷெரீப் அவர்கள் கெஜட்டியரிலுள்ள இருவிதமான கூற்றுக்களையும் எழுதியுள்ளார்கள். 1930ம்

ஆண்டு இங்கிலாந்தைச் சார்ந்த சமஸ்கிருத பேராசிரியர் டாக்டர் வில்சன் என்பவர் கிரேக்கர்கள் தம் பழைய நூல்களில் குறிப்பிட்ட கொல்கோய் என்ற ஊரும், கொற்கையும் ஒரே இடமாக இருக்கலாம். இதுவே இராமநாதபுரத்திலுள்ள கீழக்கரை என கருதுகிறேன் என்று கூறியதும், இதுபோல் வில்லியம் டெய்லர் என்ற பாதிரியார், கொற்கை என்னும் ஊர் நேபாளத்தைச் சேர்ந்த கூர்க்காக இருக்கக்கூடும் என்பதும் திருநெல்வேலி கெஜட்டியரில் இருப்பதாக கவிஞர் கா.மு. ஷெரீப் எழுதியுள்ளார்கள். இதில் இரண்டாவது கூற்றை ஏற்றுக் கொண்டால் நிலைமை என்ன ஆகும்? அதுவே முதல் கூற்றுக்கும் பொருந்தும். மேலே குறிப்பிட்ட இரு எழுத்தாளர்களும் கொற்கையை வந்து நேரில் பார்க்காதவர்கள். ஆனால் கொற்கையை நேரில் பார்த்தவர்களின் கூற்றும் திருநெல்வேலி ஜில்லா கெஜட்டியரில் இடம் பெற்றிருக்கின்றன. கொற்கையும், காயலும் தாமிரபரணி ஆறு கடலில் கடக்கும் இடத்தில் அமைந்துள்ளது என்று மார்க்கோபோலோ கூறியதும் இடம் பெற்றிருக்கிறது. அதுபோல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் முஸ்லிம்கள் அரபு நாட்டிலிருந்து காயல்பட்டணம் வந்து பாண்டிய மன்னரிடம் இடம் பெற்று குடியேறினார்கள் என்ற குறிப்பும் கெஜட்டியரில் எழுதப்பட்டிருக்கிறது. இந்த நான்கு கூற்றுகளில் எதை ஏற்றுக் கொள்வது? ஒரே அரசாங்க கெஜட்டியரில் பல விதமான கருத்துக்கள் இருக்கின்றன. எனவே அரசாங்க ஆய்வாக இருந்தாலும் சரி, தனியார் ஆய்வாக இருந்தாலும்சரி, எதுநியாயமானது எதுபொருத்தமானது என்பதை அறிந்து முடிவு செய்வதுஅறிவுடைமையாகும். Honourable Justice M. Ananathanarayanan I. C. S. says that pioneers in administration, particularly during the closing decades of the Nineteenth century complied the District Gazetteers. கெஜட்டியர்களில் நிர்வாகத்தில் முன்னோடியாக உள்ளவர்களால் பதிவு செய்யும் பழக்கம் குறிப்பாக 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் தான் ஏற்பட்டது



என மாண்புமிகு நீதிபதி அனந்த நாராயணன் அவர்கள் கூறுகிறார்கள். இதனால் பழங்காலத்து முக்கிய செய்திகள் சிலவைகள் இடம் பெறாமலும் போய் இருக்கலாம். நேர்மையான தனியார்கள்எழுதுச்சிறப்பான நூல்களும்கெஜட்டியர் போன்றே என்று மாண்புமிகு நீதிபதி அனந்த நாராயணன் எழுதுகிறார். **எம். இத்ரீஸ் மரைக்காயர்** அவர்கள் தங்களுடைய "தமிழகத்தில் மார்க்கோபோலோ இபுனு பதூதா" என்னும் நூலில் முடிவுரையில் கீழ்க்கண்ட விதமாக எழுதி இருக்கிறார். "இன்றைய காயல்பட்டினம் 16ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட ஊரே ஆகும். சோனகர் பட்டணமாகிய கீழக்கரையிலிருந்து மக்கள் இன்றைய (திருநெல்வேலி மாவட்டம்) காயல்பட்டினத்திற்கு குடியேறிய பிற்கால பட்டினமே அது. அன்றி பழமையான காயல் என்பது அது அல்ல. மார்க்கோபோலோ குறிப்பிடும் "காயல்" கீழக்கரை - இதுவேகொற்கை துறைமுகப் பட்டினம். இப்னுபதூதா "பத்தன்" என்று அழைக்கப்பட்ட பௌத்திரமாணிக்கப்பட்டினமும் இதுவே."

கவிஞர் கா மு.ஷெரீப் அவர்கள் தங்களுடைய "வள்ளல் சீதக்காதி வரலாறு" என்னும் நூலில் "தமிழகத்தின் எந்த கடற்கரையிலும் 'காயல்' என்றோ 'காயல்துறை' என்றோ ஒருதுறைமுகம் எந்த நாளிலும் இருந்ததே இல்லை.கொச்சி துறைக்கு இப்பால் உள்ள ஒரே துறைமுகம் கொற்கைதான். கொச்சி மேலக்கரையாதலின் கொற்கை கீழக்கரையாதல் இயல்பே அவ்வியல்பின்பயேடி கொற்கை கீழக்கரையாயிற்று" என்று கூறுகிறார்.

இவ்விரு கூற்றுகளை படிக்கும் அறிஞர்கள் வரலாற்று நூல்களையும், தமிழ் இலக்கிய நூல்களையும், வெளிநாட்டு பயணிகளின் குறிப்புகளையும், கண்ணுராதவர்களால் எழுதப்பட்ட நூல்கள் என்ற முடிவுக்கு வர ஏதுவாகும். காயலைப்பற்றியும் காயல் துறைமுகத்தைப்பற்றியும், சிறப்பாக பல வரலாற்று நூல்களிலும், தமிழ் இலக்கிய நூல்களிலும், வெளிநாட்டுப்பயணிகளின் குறிப்பு நூல்களிலும்,

எழுதப்பட்டுள்ளன. இந்நூலின் முன்பகுதியில் பல ஆதாரங்களைக் காட்டியுள்ளேன். இன்னும் சில சான்றுகளை இங்கு எழுத விழைகிறேன்.

மாதிஹீர் ரசூல் சதக்கத்துல்லா அப்பா அவர்கள் தங்களை காயல் வாசி என்றே குறிப்பிட்டதோடு நில்லாமல் தங்கள் கைப்பட எழுதி கொடுத்த சில பத்வாக்களில் (மார்க்க சட்ட விளக்க குறிப்புகளில்) அவர்களின் கையெழுத்திற்குகீழ் 'காயலி' என்றே எழுதியுள்ளார்கள். ஆனால் குத்புஸமான் சத்க்கத்தல்லா அப்பா அவர்களின் பெண் வழியில் வந்தவர் எனக்கூறும் எம். இத்ரீஸ் மரைக்காயர் அவர்கள் ஏன்காயலை கீழக்கரை என்று கூறுகிறார்கள்? அப்பா அவர்கள் இறுதிக் காலத்தில் கீழக்கரைக்கு வந்ததனால் காயலும் அவர்களுடன் கீழக்கரைக்கு வந்துவிட்டது எனக்கருதி எழுதினார் போலும். ஷரகின் மன்னர் சதக்கத்துல்லா அப்பா அவர்கள்காயல் எம்முடைய ஊர் என்கிறார்கள். கவிஞர் கா. மு. ஷெரீப் காயல் என்ற ஓர் ஊர் தமிழகத்தில் எந்தக் கடற்கரையிலும் எந்த நாளிலும் இருந்ததே இல்லை, என்று உரைக்கிறார். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த குத்புஸமான் செய்யிது அஹ்மது வலியுல்லாஹ், அவர்கள் ஹிஜ்ரி 430 வருடம் (கி. பி. 1036) துல்ஹஜ்ஜு மாதம் பிறை 8 ல் மரணமாகி காயல்பட்டணத்தில் அடங்கியுள்ளார்கள். இவர் பல ஆண்டுகள் காயல்பட்டணம் கடற்கரைப் பள்ளியில் இமாமாக பணியாற்றி மார்க்க கல்வியும் கற்றுக்கொடுத்துள்ளார்கள். அவர்கள் தகப்பனார் ஷாகிது அவர்களும் பாட்டனார் அப்துல்கரீம் மதனி அவர்களும்காயல்பட்டணத்தில் வாழ்ந்தார்கள். சுமார் 980 வருடங்களுக்குமுன்மறைந்த செய்யிது அஹ்மது வலியுல்லாஹ் அவர்களின் மீஸான்கற்கள் (கல்லறைக் கற்கள்) காயல்பட்டணம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது என சான்று பகன்றிருக்கின்றன. ஆனால் காயல்பட்டனத்திருந்து சென்றவர்களின் வம்சவழியினர் எனக்கூறும் எம் இத்ரீஸ் மரைக்காயர் அவர்கள் காயல்பட்



டினம் பதினொரும் நூற்றாண்டில் ஏற்பட்ட ஊராகுமென கூறுகிறார். ஹிஜ்ரி 446ல் அரபு நாட்டில் பிறந்து காயல் பட்டினத்தில் வாழ்ந்து ஹிஜ்ரி 539 ல் மறைந்த காட்டு மொகுதூம் வலியுல்லாஹ் அவர்கள் ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி (ரலி) கௌதுல் அஃலம் முஹிய்யதீன் அப்துல்காதர் ஜெய்லானி (ரலி) ஆகிய மாபெரும் மேதைகளின் காலத்தைச்சேர்ந்தவர். ஏர்வாடி செய்யிது இப்ருகீம் வலியுல்லாஹ் அவர்களின் சிறிய தந்தையுமாவார். சுமார் 875 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்து காயல்பட்டணத்தில் அடங்கியுள்ள இவர்களின் சிறப்பான தர்ஹா காயல்பட்டினம் பழமையான ஊர் என்பதற்கு சாட்சி பகர்கின்றது. 800 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த சிலரின் மீஸான்கற்கள் இன்னும் காயல் பட்டணத்தில் இருக்கின்றன.

மாஃபர் தேசாதிபதிமன்னர் அப்துல்அஜீஸ் என்பவரின் கல்லறையும் காயல்பட்டணத்தில் இருக்கின்றது. செய்கு மாஃபர் சிர்மிகு காயல்பட்டணத்தை தம் தலைநகராகக் கொண்டு மாஃபர் தேசத்தை ஆண்ட சிறந்த மன்னர். இவர்களின் மரணம் ஹிஜ்ரி 628 (கி. பி. 1231) என்பதை மீஸான் கற்கள் மூலம் அறிகிறோம். காயல் மாஃபர் தேசத்தின் முக்கிய துறைமுகப்பட்டணம் என்று மார்க்கோபோலோ கூறியது ஈண்டு கவனிக்கத்தக்கது. சுல்தான் ஜமாலுத்தீன் மாஃபர் தேசத்தின் தூதுவராகச் சீனாவுக்குச் சென்றதை கர்னல்யூல் தம்முடைய நூலில் எழுதியுள்ளதும் குறிப்பிடப்பிடத்தக்கது.

An envoy Jamaluddin had been sent from Mabar to the Mongol court - Yuel's Marcopolo.

இந்த சுல்தான் ஜமாலுத்தீன் தான் காயல்பட்டணத்தில் முஹம்மதுகல்ஜி கி. பி.843இல் கட்டிய பெரிய ஜும்மா பள்ளியை புதுப்பித்து பிரமாண்டமாக கி. பி. 1300ல் கட்ட துவங்கியவர். இவருடைய மகனார் இதை கி. பி. 1337 இல் கட்டி முடித்தார் என்பதை இந்திய தொல் பொருள்,

ஆராய்ச்சி கழக அறிக்கை மூலம் அறியக்கிடைக்கிறது. உண்மை இவ்வாறாக இருக்க எம். இத்ரீஸ் மரைக்காயர் அவர்கள் காயல்பட்டணம் பதினாறாம் நூற்றாண்டில் ஏற்பட்ட ஊரே ஆகுமென்று எழுதுகிறார்கள். கவிஞர் கா. மு ஷெரீப் அவர்கள் காயல் என்ற துறைமுகம் தமிழக கடற்கரையில் இருந்ததே இல்லை என்று கூறுகிறார்கள்.

இனிவெளிநாட்டு பயணிகளின் குறிப்புகள் வரலாற்று நூல்கள், இலக்கிய நூல்களில் ஆதாரங்களை ஆய்வோமாக கி.பி. 1292ல் காயல் வந்த மார்க்கோபோலோ மதுறாஸ் மாகாணத்தில் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள காயல் ஒரு சிறந்த துறைமுகப் பட்டினம். கொற்கை காயல் என்ற இரு ஊர்களும்தாமிரபரணி ஆற்றின்முகத்துவாரத்தில் அமைந்திருக்கின்றனஎன்றுஎழுதுகிறார். Kail was a famous port on the coast of what is now the Tinnelvely District of Madras the Presidency. Both place (Korkai and kayal) situated on the delta of the Tamiraparani (Marco polo) ரசீதுத்தீன் என்ற வரலாற்று ஆசிரியர் காயல் மாஃபரின் துறைமுகப்பட்டினம் என்று உரைக்கிறார். Kail is the port of Mabar Rashid uddin வாஸாப் என்ற பெர்சியா நாட்டு சரித்திர ஆசிரியர் கூறுவதில் ஒவ்வொருஆண்டும் சுல்தான் ஜமாலுதீன் மாஃபருக்கு 1400 குதிரைகள் கைஸ்தீவிலிருந்து கொண்டு வர வேண்டுமென்று உடன்பாட்டை பாண்டிய மன்னனோடு செய்து கொண்டார். wassaf says that it was a matter of agreement that Malikul Islam Jamaluddin and merchants should embark of every year from the Island of kais and land at Mabar 1400horses of his own breed. எம்போலி, வர்தீமா என்ற எழுத்தாளர்கள் காயல் முத்துக் குளிக்கும் துறைமுகமாக திகழ்ந்தது என உரைக்கிறார், வசதிபடைத்த முஸ்லிம்கள் நிறைந்த துறைமுகப் பட்டினம் காயல். இங்கு பல நாட்டு கப்பல்களும் வந்து சென்றன என்று பார்போஸா கூறுகிறார். காயல்மாஃபரின் முக்கிய துறைமுகப்பட்டினம். மாஃபரின் வாணிபச் சிறப்பு எல்லாம் காயலுக்குரியது. காயலில் இருந்த மன்னர் அனைத்து மாஃபருக்குரிய மன்னரின் சகோதரராகவோ உதவியாளாராகவோ இருந்தார்.



அக்காலத்தில் சுந்தரபாண்டியன் பாண்டிய நாட்டையும் சோழநாட்டையும் ஆட்சிபுரிந்தார். சுந்தரபாண்டியனை பற்றிய குறிப்புகளை நான் காயலுக்குப்பக்கத்திலுள்ள மாரமங்களத்தில் பார்த்தேன் என்று மார்க்கோபோலோ தெளிவாக கூறுகிறார்.

"Kayal having been the principal port in Mabar much of what Marcopolo says about Mabar its trade & etc really applies to Kayal. The King of Kayal was not an independent prince but the deputy (and brothar) of the real king of the whole Mabar, at that time, Sundrapandi Deva who Is called by Marcopolo 'Sundrapnadi Devar" and who ruled both the Pandiya and the chola countries. I have found of Inscriptions of Sundrapandiya at a place called Maramangalam just outside Kayal (Marco polo's notice of Kayal colonelyule)

திருநெல்வேலிகடற்கரை பகுதியில் காயல் அமைந்திருக்கின்றது. அங்கு முத்துக்கள் ஏராளமாக கிடைக்கின்றன, காயல் முஸ்லிம் மன்னரின் ஆட்சிக்குக் கீழ் இருந்தது என்று கி. பி. 1498ல் தமிழகம் வந்த போர்த்துக்கீசியபயணி, வாஸ்கோடாகாம கூறினர். According to Vascodagama Kayal was on the Tinnelvelly coast where pearls were found It was under mussalman king. கி. பி. 1563ல் தமிழகம் வந்த சீஸர் பெட்ரிக்என்பவர்நெல்லைச்சீமையிலுள்ளகாயலில்சிறப்பாக நடைபெற்ற முத்து வாணிபத்தைப் பற்றி எழுதியுள்ளார். கே. எ. நீலகண்டசாஸ்திரி அவர்கள் நெல்லை மாவட்டத்திற்கு உயிர் ஊட்டும் தாமிரபரணி நதி கடலில் கலக்கும் இடத்திலுள்ள கொற்கையும்காயலும்முத்துவாணிபத்திற்கு புகழ்பெற்று விளங்கின என அந்நிய நாட்டு பயணிகள் கூறியதை தம்முடைய தென்னிந்திய சரித்திரம் என்னும் நூலில் குறித்துள்ளார். மொரோக்கோ நாட்டைச் சார்ந்த இபுனு பதூதா என்ற பயணி கி. பி. 1348ல் மாஃபர் தேசத்தைச் சுற்றி பார்த்தார் என்று டாக்டர் கால்டுவெல் எழுதுகிறார். இபுனு பதூதா மாஃபர் தேசம் முஸ்லிம்

மன்னர் ஆட்சியிலிருந்தது என எழுதுகிறார், மாஃபரில் பத்தன் என்ற ஒரு சிறப்பான நகரத்தைப் பார்த்ததாக கூறுகிறார். அங்குள்ள ஓர் அழகிய பள்ளிவாசலைப் பற்றியும் குறிப்பிட்டுள்ளார். அங்கிருந்துதலைநகரமானமதுரைக்குச் சென்றதாகவும் கூறுகிறார். இபுனு பதூதா நாகர்கோயிலுள்ள கோட்டார் என்னும் ஊரில் ஒரு கல் வெட்டு பார்த்ததாக குறிப்பிடுகிறார். இந்த கோட்டார் காயல்பட்டினத்திலிருந்து சுமார் 25 மைல் தொலைவிலிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது. இக்குறிப்பு டாக்டர் கால்டுவெல் எழுதிய திருநெல்வேலி சரித்திரம் என்னும் நூலில் இடம்பெற்றிருக்கிறது. பத்தன் என்று இபுனு பதூதா குறிப்பிட்டது. காயல்பட்டணம் (அரபியில் காஹிர் பத்தன்) என்பதின் சுருக்கமாகவும்இருக்கலாம். பவித்ரமாணிக்கப்பட்டணம் என்பதின் சுருக்கமாகவும் இருக்கலாம். காயல்பட்டினத்திற்குப் பவித்ரமாணிக்கப்பட்டணம்என்ற பெயர் உண்டு என்பதை காயல்பட்டணம் கற்புடையார் கல்வெட்டு மூலமும், காயல்பட்டினம் காட்டு மகுதூம்பள்ளி கல்வெட்டு மூலமும் அறியலாம். மார்க்கோபோலோ, இபுனுபதூதா மற்றும் வெளிநாட்டு பயணிகள்எழுதிய பயணக்குறிப்புகளிலிருந்து நாம் தெளிவாக அறிவது. (1) காயல் மாஃபரின் கரு (2) காயலும், கொற்கையும் திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபரணி ஆறுகடலில்கலக்கும் இடத்தில் அமைந்துள்ள சிறப்பான துறைமுகப்பட்டினங்கள். ஆனால் ''தமிழகத்தில் மார்க்கோபோலோ இபுனுபதூதா. நூலை எழுதிய எம் ஐ. மரைக்காயர் அவர்கள் முக்கியத்துவம் வாய்ந்த மேலே கண்ட குறிப்புகளைக் கவனிக்கவில்லைப் போலும்.

டாக்டர் கால்டுவெல் அவர்கள் கி. பி. 1876 ல் கொற்கையிலும், காயலிலும் நடத்திய அகழ் ஆரய்ச்சியைப்பற்றி அழகாக அவருடைய திருநெல்வேலிசரித்திரம் என்னும் நூலில் வர்ணித்துள்ளார் ''தென்னிந்தியாவில் நாகரீகத்தின் உறைவிடமாகிய கொற்கையில்நான்குநாட்களும், பாண்டியநாட்டின் சிறந்த துறைமுகமாகிய காயலில் ஒரு நாளும் அகழ் ஆராய்ச்சி பண்ணியதாக எழுதுகிறார்.



இவருடைய குறிப்பில் நாம் ஊன்றி கவனிக்க வேண்டியது கொற்கையும், காயலும் எங்கு அமைந்திருந்தன என்பது தான். இரு புகழ்பெற்ற நகரங்களும் திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபரணி ஆறு கடலில் சங்கமமாகும் இடத்தில் அமைந்திருந்தன எனக் கூறுகிறார். கொற்கைக்கு அண்மையில் முக்காணி, ஆத்தூர், மாரமங்கலம், காயல் இருக்கின்றன எனகூறுகிறார்கள். இவ்வூர்கள் எல்லாம் கீழக்கரைக்கு அருகிலுள்ள ஊர்கள் இல்லை என்பது கற்றவர்களுக்குத் தெரியும். தமிழ்நாட்டின் தொல் பொருள் ஆய்வுக் கழகம் (State department of Archaeology Tamil Nadu) கொற்கையில் 1968ல் அகழ் ஆய்வுசெய்துள்ளது என்பது அறிகிறோம். டாக்டர் கே. வி. ராமன் இப்பகுதியில்நடந்த அகழ்ஆய்வை பற்றி (Recent Archaeological Excavations in Tamil Nadu) சிறப்பாக எழுதியுள்ளார். அரசாங்கமும் தொல் பொருள் ஆய்வுக்கழகமும், நெல்லைமாவட்டத்தில் தான் [இன்றைய சிதம்பரனர் மாவட்டம்] கொற்கையும் காயலும் அமைந்துள்ளன எனத் தீர்க்கமாக அறிவித்திருக்கின்றன. எனவே கா.மு ஷெரீப், கேப்டன் அமீர் அலி, அல்ஹாஜ் எம். ஐ. மரைக்காயர் ஆகியோர் கூறும் கீழக்கரைதான் கொற்கை என்பதும், காயல் என்பதும் பொருந்துவன அல்ல-ஏற்புடையன அல்ல, என்பதை அறிகிறோம்.

கீர்த்திமிகும் கீழக்கரை என்னும் நூலில்; கீழக்கரையில் வாழ்ந்து மறைந்த இறைநேசர்கள், இறைநேசச் செல்வியர்கள் என இரு அதிகாரங்கள் இருக்கின்றன.பதினேழு இறைநேசச்செல்வர்கள், ஏழு இறைநேசச்செல்வியர்கள்ஆகியோர்களின் வாழ்க்கை வரலாறு இடம் பெற்றுள்ளன. பதினேழு இறைநேசச் செல்வர்களில் ஐவர் காயல்பட்டினத்தில் பிறந்தவர்கள். எழுவர் காயல்பட்டினத்தில் பிறந்த பெற்றோர்களுக்கும் அவர்களின் மக்களுக்கும் பிறந்தவர்கள் மூவர் அதிராம் பட்டின வழியினர். மிஞ்சிய இருவர் கீழக்கரையாக தெரிகிறது. இறைநேசச் செல்வியர்கள் அனைவரும் காயல்பட்டினத்திலோ அல்லது காயல்பட்டின பெற்றோர்களுக்கோ அல்லது அவர்களின் மக்களுக்கோ

பிறந்தவர்கள் என்பது ஆசிரியர் அவர்களின் நூலே நமக்கு எடுத்துரைக்கின்றது. கீழக்கரையிலிருந்து காயல் பட்டினத்திற்கு சென்றார்கள் என்று எம். ஐ. மரைக்காயர் அவர்கள் ஆவலுடன் எழுதுகிறார். ஆனுல் அவருடைய நூலில் உள்ள இறைநேசச் செல்வர், இறைநேசச்செல்வியர் அதிகாரங்கள் காயல்பட்டினத்திலிந்து கீழக்கரைக்கு சென்றார்கள் என்பதை விளக்கி நிற்கின்றது. எம். ஐ மரைக்கார் அவர்கள் கீழக்கரையில் மூத்தவலிமார்களாக மகுதூம் சின்னெய்னு லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் அவர்களையும், மகான் சதக்கத்துல்லா அப்பா அவர்களையும்குறிப்பிடுகிறார். இருவரும் கீழக்கரைச் சேர்ந்தவர்கள் அல்ல. மகுதூம் சின்னெய்னா லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் அவர்கள் அதிராம்பட்டினத்தில் பிறந்தவர்கள். அக்காலத்தில் இஸ்லாமிய கல்வி பயில தலைச்சிறந்தபதியாகதிகழ்ந்த காயல் பதியில் பல ஆண்டுகள் தங்கி மார்க்க கல்வி பயின்றவர்கள். கல்வி கடலாகிய எங்கள் அருமை பாட்டனார் மகான் பெரிய சம்சுத்தீன் வலியுல்லாஹ் அவர்களிடம் கல்வி கற்றார்கள். மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் சம்சுத்தீன் வலியுல்லாஹ் அவர்கள் ஓதி கொடுத்தார்கள். இவர்களிடம் கல்வி கற்றதன் பயனால் மகுதூம் சின்னனெயினா லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் அவர்களும் பிற்காலத்தில் மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் ஓதி கொடுத்த மகிமையைஅறிகிறோம். இவர்களுடன் ஒன்றாக கல்வி கற்றவர்கள் காயல்பட்டினம் சுலைமான் வலியுல்லாஹ், ஹாபில் அமீர் வலியுல்லாஹ் போன்றவர்கள். மகுதூம் சின்னனெய்னா லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் பிற்காலத்தில் அதிராம்பட்டனத்தில் ஒரு மத்ரஸா வைத்து ஓதி கொடுத்தார்கள். சதக்கத்துல்லா அப்பா அவர்கள் முதலில் தங்கள் தகப்பனார் சுலைமான் வலியுல்லாஹ் அவர்களிடம் ஓதினார்கள். பின்பு தகப்பனார் அவர்களின் இனிய நண்பரான மகுதூம் சின்னனெய்னா வலி அவர்களிடம் அதிராம்பட்டினத்தில் தங்கி ஓதினார்கள்,



என்பதை அறிகிறோம். மகுதூம் சின்னெயினா லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் அவர்கள் தங்களுடைய இறுதி காலத்தில் ஏர்வாடியில் தங்கி இருந்த போது, சதக்கத்துல்லா அப்பா அவர்களின் வேண்டுதலின் பேரில் கீழக்கரையில் தங்கி ஓதிகொடுத்தார்கள். அங்கு காலமாயி அங்குஅடங்கப் பட்டுள்ளார்கள். அவர்கள் மரணமாகி இன்று 342 வருடங்கள் ஆகின்றன.

கீழக்கரையில் அடங்கியுள்ள இரண்டாவது மூத்த வலியுல்லாஹ் அஷ்ஷெய்கு சதக்கத்துல்லா அப்பாஅவர்கள். இவர்கள் காயல்பட்டினத்தில் தோன்றி வாழ்ந்தவர்கள், அவர்களின் இறுதிகாலத்தில் கீழக்கரையில் ஓதி கொடுக்கும் போது காலமாகி அங்கு அடங்கியுள்ளார்கள். இவர்களின் ஆறுமக்களில் ஐவரின் வம்சவழியினர் காயல்பட்டினத்தில் வாழ்ந்து வருகிறார்கள். கடைசிமகளாகியஸாரா உம்மாள் அவர்களின்வம்சத்தினர் கீழக்கரையில் வாழ்ந்து வருகிறார்கள். மூன்றாமவர் தொண்டி அப்பா என்ற அபுபக்கர் வலியுல்லாஹ். இவர்கள் கீழக்கரையில்பிறந்துதொண்டியில் அடக்கியுள்ளார்கள். இவர்கள் குத்புஜமானாக திகழ்ந்தவர்கள். இவர்கள் காலமாகி 210ஆண்டுகள் ஆகின்றன. எம்.ஐ. மரைக்காயர் அவர்களின் நூல் குறிப்பு படி கீழக்கரையில் கீழக்கரை பெற்றோர்களுக்கு பிறந்த முதல் வலியுல்லாஹ் குத்பு ஜமான் அபுபக்கர் வலியுல்லாஹ் என அறிகிறோம். ஆனால் காயல்பட்டினத்தில் கி. பி. 850 முதல் இன்றுவரை பல ஆயிரக்கணக்கான இறைநேச செல்வர்கள் பிறந்து வாழ்ந்து மறைந்துள்ளார்கள் என்பதை தைக்கா சாகிப் வலியுல்லாஹ் அவர்களின் கூற்று மூலம் அறிகிறோம். ஆனால் எம். ஐ மறைக்காயர் அவர்கள் காயல்பட்டணம் பிற்கால பட்டணம் என்று கூற காயல்பட்டணம் மீது அவர்களுக்கு என்ன ஆதங்கமோ?

சோமலே அவர்கள் ஏறத்தாழ எல்லா தமிழக மாவட்டங்களையும் பற்றி சுவைப்பட எழுதியிருக்கிறார். அவர்களின் ''நமது தமிழ்நாடு - இராம நாதபுர மாவட்டம்'' என்னும் நூல் இராமநாதபுர ராஜா எஸ். இராமநாத

சேதுபதி அவர்களின் சிறப்புரையுடன் வெளியாகி யிருக்கிறது. சோமலே அவர்களின் சொந்த மாவட்டமாக இருப்பதனால் சமீப காலம் வரை வெளிவாராத பல வரலாற்று உண்மைகளையெல்லாம் சேகரித்து எழுதியுள்ளார். ஒவ்வொரு வட்டத்தின்எந்தச் சிற்றூரையும் கூட விடாமல் எல்லா ஊர்களைப் பற்றிய குறிப்பும், அவற்றின் பெயர் காரணமும் ஆராய்ச்சியறிவால் ஆசிரியர் ஆங்காங்கே விளக்கமாக தந்துள்ளனர் என்று ராஜா எஸ். இராமநாத சேதுபதி கூறுகிறார். இத்தகைய சிறப்பு வாய்ந்த இராமநாதபுர மாவட்ட நூலில் கீர்த்திமிகும் கீழக்கரையைப் பற்றிய குறிப்பை இங்கு எழுதுகிறேன். ''கீழக்கரை இராமநாதபுரத்திலிருந்து 15 கி. மீ. தூரம். சிறு துறைமுகம். படகுகளில் பொருள்கள்ஏற்றிச் செல்லப்படுகின்றன. என்று குறிப்பிட்டுள்ளார். ஆனால் சங்ககால துறைமுகமாகிய தொண்டியைப் பற்றி சிறப்பாக எழுதியிருக்கிறார். அரபு நாடுகளின் தொடர்புடைய நகரென்றும், வெளிநாட்டு பயணிகளால் குறிப்பிடப்பட்டுள்ள துறையென்றும் எழுதியுள்ளார். பாண்டிய நாட்டின் கீழ்கடற்கரை பகுதியில் தொண்டி சிறந்த துறைமுகப்பட்டினமாகதிகழ்ந்தது என்று கி. பி. 150ல் 'தாலமி' கூறியுள்ளார். ஆனால் சோமலே கீழக்கரையை வெறும் சிறிய துறைமுகமென்றே குறிப்பிட்டுள்ளார். 16ஆம் நூற்றாண்டிற்கு முன் வெளி நாட்டு பயணிகள்கீழக்கரைக்கு விஜயம் செய்ததைப்பற்றிய குறிப்பு எதுவுமில்லை. சுருங்கக்கூறின் காயல்பட்டணத்திலிருந்து கீழக்கரைக்கு மகான் சதக்கதுல்லா அப்பா அவர்களும், வள்ளல் சீதக்காதி அவர்களும் சென்ற பின் தான், கீழக்கரை உலகிற்கு தெரிய வந்திருக்கிறது என்பதை உணர முடிகிறது.

டாக்டர் ஹூசைன் நயினார் தம்முடைய சீதக்காதி வள்ளல் என்னும் நூலில் ''காயல்துறைபண்டைக்காலத்தில் தாமிரபரணி நதியின் முகத்துவாரத்தில் கடலுக்கு அருகே இருந்தது. கொற்கை பெயர் போன துறைமுகமாயிருந்த விபரத்தைக் கிரேக்க வணிகர் மூலமாகவும் டாலமி எழுதி



யவற்றின் மூலம் அறிகிறோம். இது பாண்டியரின் தலைநகரமாகவும் இருந்தது. நாளடைவில் கடல் விலகியதால் கைவிடப்படவே அதற்கருகில் காயல்துறை ஏற்பட்டது என்று எழுதுவதின் மூலம் காயலும் கொற்கையும் நெல்லை ஜில்லாவில் உள்ளன என்பதை நிலைநாட்டி விட்டார். ஆனால் அவருடைய நூலை ஆதாரமாக கருதும் எம்.ஐ. மறைக்காயர் இக்குறிப்புகளைக் கண்டதாக தெரியவில்லை. வரலாற்று வல்லுனர்களும் முதுபெரும் அறிஞர்களுமான P.T.S ஐயங்கார், K Aநீலகண்டசாஸ்திரி, சதாசிவப்பண்டாரத்தார், சீரினிவாஸசாஸ்திரி, மா. இராசமாணிக்கனார், T.R. சேஷஐயங்கார், R.S. சத்தியநாதஐயர், அ.கி. பரந்தாமனார் போன்றோர் தம் வரலாற்றுக் குறிப்புகளால் ஐயமின்றி அறிவதுயாதெனின் 'பொதியமலையிலிருந்துபொருநை (தாமிரபரணி) ஆறுகடலோடு கலக்கின்ற இடத்தில் கொற்கை என்னும் துறைமுக நகரம் சங்க காலத்தில் சிறப்புற்றிருந்தது. இக்கொற்கை தான் பாண்டியரின் சிறந்த துறைமுகநகராக விளங்கிவந்தது எனவே கொற்கை என்னும் பழம் பெரும் வரலாற்றுச் சிறப்பு மிக்க துறைமுக பட்டினம் தாமிரபரணி ஆற்றின் தீரத்து அமைந்துள்ள திருநெல்வேலி மாவட்டத்துள்ள காயல்பட்டினத்துக்கு அண்மையில் இருக்கும் இன்றைய கொற்கையே ஆகும் என்பதும் உறுதியாக அறியலாம். இக்கொற்கையின் அருகில் தான் காயல்பட்டினம், பழையகாயல் புன்னைக்காயல், முக்காணி எனும் ஊர்கள் இன்னும்அன்று போன்றே அடுத்தடுத்து அமைந்தும் உள்ளன என்பது கொண்டும் உண்மையை உணரலாம்.

மேற்கோள் காணப்பட்ட எல்லா சான்றுகளையும் வைத்து சுருங்ககூறின், ''பாண்டிய நாட்டு மண்டலத்துள் உட்பெரும் பிரிவாகிய பவித்திரமாணிக்கப்பட்டினத்து சரக்கத்துள் தென்கோடிக் கீழைக்கடல் தீரத்து, கொற்கை துறைமுகத்திற்கு அருகில், தாமிரபரணியாம் பொருநையாற்று தீராத்து முத்துத்துறை பட்டினத்துக்கு உட்பட்டு, திருச்செந்தூர் துறைக்கு அண்மையில் கடற்றுரை வணிக

நகராய் விளங்கி நிற்கும் ஊரே காயல்பட்டினம் ஆகும். இதனை முன்னோர்வகுதைஎன்றும்,காயல்என்றும்,காகிரூர் என்றும், தென்காயல் என்றும் சிறப்பித்துக் கூறிப் போந்தனர். இவ்வூரில் ஆதி இஸ்லாமிய குடியேற்றம் புக்கதும் உணர்க. ஆயிரத்தினும் மிக்க ஆண்டின் பழமைச் சிறப்பினதாம் இவ்வூர்என்துபம்உண்மை.இக்கூற்றுகளால், காயல் என்பது கீழக்கரை அன்று என்பதும், காயல்பட்டினமே என்பதும், கொற்கை என்பது கீழக்கரை அன்று என்பதும், இன்றும் உள்ள கொற்கை என்ற ஊரையே குறிக்கும் என்பதும் தெளிவு. ஆதலால் வெளி நாட்டு பயணிகள், வரலாற்று ஆய்வாளர்கள்,இலக்கிய வல்லுனர்கள் தம் கூற்றுக்களால் அறியும் உண்மை என்னவெனில், ''தமிழகத்தில் மார்க்கோபோலோ இபுனுபதூதா'', ''கீர்த்திமிகும் கீழக்கரை'', ''வள்ளல் சீதக்காதி வரலாறு'', ''வள்ளல் சீதக்காதியின் வாழ்வும் காலமும்'' போன்ற நூல்களில், அந்நூல் ஆசிரியர்கள் கூறியுள்ள ஒரே வகையான கருத்துக்கள் முற்றும் தவறானவை, முரணானவை, கற்பனையானவை, ஒருதலைப்பட்சமானவை என்பதும் உறுதியாவது உணரலாம்.



# வகுதை

மாஃபர் என்னும் அரபிச் சொல்லின் தமிழ் பெயர் ''வழித்தடம்''. இதுவே தமிழில் வகுதி எனவும் வகுதை எனவும் வழங்கப்பட்டு வந்துள்ளது. ''வகுதி எனில் குறிப்பிட்ட இனமக்கள் வாழும் பகுதி என நிகண்டுகள் கூறுகின்றன. ஆனால் வகுதை என்பது இஸ்லாமியரின் கோநகராகிய பகுதாது என்பதின் திரிவு எனவும் கூறுகிறார்கள். தமிழகத்தில் இஸ்லாமியர்கள் சிறப்போடு வாழ்ந்த காயல் பட்டணம், கீழக்கரை,பரங்கிப்பேட்டை,தொண்டி போன்ற ஊர்களை 'வகுதை' என இஸ்லாமிய இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன, எனச்சில இலக்கிய ஆசிரியர்கள் எழுதுகிறார்கள்.

பல புலவர்களும், அறிஞர்களும், காயல்பட்டணத்தை 'வகுதை' என்ற பெயரால் கவிதைகள் புனைந்துள்ளார்கள். இத்தகைய கவிதைகள் ஏராளமாக இருக்கின்றன. சில கவிஞர்கள் காயல்பட்டண மக்கள் குடியேறிய சில முக்கிய ஊர்களையும், வகுதை எனப் பாடியுள்ளார்கள். சில புலவர்கள், வெளியூரில் குடியேறிய காயல்பட்டண வாசிகளின் மக்களையும் 'வகுதையர்' 'வகுதைநாட்டான்' என்ற பெயர்களால் குறிப்பிட்டுள்ளார்கள். ஆதாரங்களுடன் அனுகிப்பார்க்கும்போது இக்கூற்றுகள் யாவும் பொருத்தமாகவும் நியாயமாகவும் அமைகின்றன. காயல்பட்டண மக்கள் குடியேறிய பரங்கிப்பேட்டை, கீழக்கரை, தொண்டி ஆகிய ஊர்களைத்தான் கவிஞர்கள் ஒருசில இடங்களில் 'வகுதை' எனப்பாடியுள்ளதாக தெரிகிறது.

காயல் துறைமுகம் தன் செல்வாக்கை இழந்தபின்,அங்குள்ள சில முஸ்லீம் குடும்பங்கள் தென்கரையில் உள்ள சில ஊர்களில் குடியேறினார்கள். அவற்றுள் கீழக்கரை, பரங்கிப்பேட்டை, முத்துப்பேட்டை முதலிய சிறந்த ஊர்களாகும் என்று டாக்டர் ஹுசைன் நெய்னுர் தம்முடைய 'வள்ளல் சீதக்காதி' என்னும் நூலில் எழுதியுள்ளார். தொடக்

கத்தில் காயல்பட்டினத்தில் குடியேறிய முஸ்லீம்கள் படிப் படியாகக் கடலோரமெல்லாம் பரவிச்செழித்தார்கள். அவற்றுள் முக்கியமானவை குலசேகரன் பட்டினம், மண்டபம், தேவிப்பட்டினம், பெரிய பட்டினம், கீழக்கரை, தொண்டி, அதிராம்பட்டினம், காரைக்கால், நாகூர், நாகப்பட்டினம், பரங்கிப்பேட்டை, சென்னைப்பட்டினம், பழையாறு எனப் பேராசிரியர் அப்துல் காதிர் தம்முடைய 'சீதக்காதியும், செந்தமிழ் புலவரும்' என்ற நூலில் குறிப்பிடுகிறார், டாக்டர் கிருஷ்ணசாமி, கி. பி. 1532ல் போர்த்துக்கீசியரின் படையெடுப்பாலும், தாக்குதலாலும், காயல்பட்டண முஸ்லீம்கள் பெரிதும் பாதிக்கப்பட்டனர் என உரைக்கிறார். டாக்டர் கால்டுவெல் போர்த்துக்கீசியரின் கட்டளையால் புன்னக்காயலில் உள்ள பல ஆயிரக்கணக்கான இந்துபரதவர்கள் கிறிஸ்துவ மதத்தில் இணைந்தார்கள் என எழுதியுள்ளார். காயல்பட்டின முஸ்லீம்களுக்குப்போர்த்துக்கீசியர்கள் பல விதமான தொல்லைகளைக்கொடுத்தார்கள். இதே காலக்கட்டத்தில் காயல்பட்டினத்திலுள்ள சில முஸ்லீம் குடும்பங்கள் இராமநாதபுரத்தின் கிழக்குக் கடற்கரையில் குடியேறினார்கள். கீழக்கரையும், வேதாளையும் அவர்களின் புதிய தாயகம் ஆகின என டாக்டர் எஸ். எம். கமால் தம்முடைய 'முஸ்லீம்களும் தமிழகமும்' என்னும் நூலில் கூறுகின்றார். கி. பி. 9ஆம் நூற்றாண்டிற்குப் பின் காயல் பட்டண முஸ்லீம்களில் சிலர் இஸ்லாம் மார்க்கத்தைப் பரப்புவதற்காகவும், வியாபாரம் செய்வதற்காகவும், தமிழகத்தின் பல ஊர்களுக்கும் இலங்கைக்கும் சென்று குடியேறினார்கள் என்று சில ஆங்கில வரலாற்று ஆசிரியர்களும், இலங்கை எழுத்தாளர்களும் எழுதியிருக்கிறார்கள். எனவே மேற்கூறப்பட்ட சான்றுகளால் 'வகுதை' என்ற பெயரால் அழைக்கப்பட்ட கீழக்கரை, பரங்கிப் பேட்டை, தொண்டி ஆகிய ஊர்களில் உள்ள முஸ்லீம்களின் முன்னோர்கள் காயல்பட்டணத்திலிருந்து சென்றார்கள் என்பது நிருபனமாகிறது.

காயல்பட்டனத்தில் பிறந்து கீழக்கரையில் அடங்கியுள்ள மகான் அஷ்ஷெய்கு மாப்பிள்ளை லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் அவர்கள் தங்களுடைய ஹதியா மாலையில் காயல்பட்டணத்தை வகுதை என்று பாடியுள்ளார்கள்.



''வகுதைப் பிறந்து கீழக்கரையில்
வாசம்செய் தவ்வூ ரடங்குமெங்கள்
தகுதி ஷெய்குனு அப்துல் காதிறு
ஆலிம் ஸாஹிபின் காதிமானேன்
மிகுதி பாவத்தை விரும்பும் பாவி
மிஸ்கீன் செய்யிது முஹம்மதென் போன்
பகுதி பகுதியாப் பனுவல் செய்தான்
பலன் கொள்ஹத்யா மாலை தனையே.''

இப்பாடலில், காயல்பட்டணத்தில் பிறந்து கீழக்கரையில் அடங்கியுள்ள அவர்களின் ஷெய்குனா அப்துல்காதிர்ஆலிம் என்ற தைக்கா சாகிபு ஒலியுல்லாஹ் அவர்களைப் பற்றிப் பாடியுள்ளார்கள். தைக்கா சாகிபு ஒலியுல்லாஹ் அவர்கள் காயல்பட்டினத்தில் பிறந்தவர்கள். இவர்கள் இளமையில் தாயை இழக்கவே, பல பெண்களிடம் பால்குடித்தார்கள். இதனால் காயல்பட்டனத்தில் திருமணம் செய்யாமல் கீழக்கரையில் திருமணம் புரிந்தார்கள். இவர்கள் காயல்பட்டனத்தில் அடங்கியுள்ள தைக்கா சாகிபு ஒலியுல்லாஹ் அவர்களின் மைத்துனர். மாப்பிள்ளை லெப்பை ஆலிம், சேக்னாப்புலவர், குணங்குடி மஸ்தான் சாகிபு, அம்மாப் பட்டினம் யூசுப் லெப்பைஆலிம், அல்லா ஹஸரத்தின் தந்தை ஷைகு அப்துல் காதிர் ஆகியோர் இவர்களின் மாணவர்களின் குறிப்பிடத்தக்கவர்கள். மாப்பிள்ளைலெப்பைஆலிம் அவர்கள் தங்களுடைய ஷெய்குனா தைக்கா சாகிப் ஒலியுல்லாஹ் அவர்கள் வகுதையில் பிறந்து கீழக்கரையில் வாசம் செய்து அடங்கியுள்ளார் எனப்பாடியுள்ளார். இம்மகான் அவர்களின் வாயிலாகக் காயல்பட்டனம் தான் ''வகுதை'' என நிருபிக்கப்படுகிறது. ஆனால் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களின் வழித்தோன்றல் எனக் கூறும் அல்ஹாஜ் எம். இத்ரீஸ் மரைக்கார் அவர்கள் வகுதை என்பது கீழக்கரைத்தான் குறிக்கும் என்று தம்முடைய ''கீர்த்தி மிகும் கீழக்கரை'', ''தமிழகத்தில் மார்க்கோபோலோ இபுனு

பதூதா'', ''நானிலம் போற்றும் நன்னகர்'' என்னும் நூல்களில் கூறுகிறார்கள். யார் சொல் ஏற்புடையது என்பதை வாசகர்கள் முடிவு செய்து கொள்ள வேண்டியது.

இஸ்லாமிய தமிழிலக்கியங்களில் வகுதை அல்லது வகுதாபுரி என்ற பெயர் ஒரு சில ஊர்களை மட்டும் குறிப் பயன்படுத்தப்பட்டுள்ளன. வகுதை என்பது எந்த ஊரைக் குறிக்கிறது என்பதற்கு அந்தந்த ஊரில் கல்வெட்டு குறிப்புகள் கிடைக்காததால் திட்டவட்டமாகக் கூறமுடியவில்லை என்று வரலாற்று ஆசிரியர்களும், இலக்கியவித்தகர்களும் வாதாடுகிறார்கள். அவர்களின்வாதங்களும்சரியே எனலாம். இத்தகைய பிரச்சினைகளையே போக்குகிறது காயல்பட்டினத்திலுள்ள சில கல்வெட்டுக் குறிப்புகள். சுமார் 1180 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட காயல்பட்டினம் பெரிய குத்பா பள்ளி மையவாடியிலுள்ள இரு மிஸான் கற்களில் வகுதை என்ற பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

1 ''பௌத்ர மாணிக்கப் பட்டினமாம், வகுதைத்துறை
காயற் கதிபதியான நிலக் கிழவர் மறைவிடம்
கொல்லம்......................''

2 ''வகுதையான தென் காயல்பட்டணத்து..................
மன்னவற் ந மருகர் காழி ..................யான செம்பி
நாடான்..................'' என்பவர் மறைவிடம்.

இந்த இரண்டு கல்வெட்டுகளும், வகுதை என்பது காயல் பட்டினம் என்பதை மிகவும் தெளிவாகவும், அழகாகவும் விளக்குகின்றன. பௌத்ர மாணிக்கப்பட்டினம் என்பதும், தென்காயல் என்பதும் காயல்பட்டினம் என நிரூபணமாகின்றது. எது வகுதை? எது பௌத்ர மாணிக்கப்பட்டினம்? எது தென் காயல்? என்ற பிரச்சினைகளுக்கெல்லாம் இந்த இரு மீஸான்கற்களின் (கல்வெட்டுகள்) குறிப்புகள்முற்றுப் புள்ளி வைத்துவிட்டன. இந்த கல்வெட்டுகளின் ஆண்டுகளும், மற்றும் சில குறிப்புகளும், வாசிக்க முடியாமல் தேய்ந்து விட்டன.



இனி, இஸ்லாமியர்களின்முதல் தமிழ்இலக்கியம் என்று சொல்லப்படுகின்ற பல்சந்த மாலையிலிருந்து இன்று வரையிலுள்ள சில இஸ்லாமிய இலக்கியங்களிலிருந்து வரும் வகுதாபுரி, வகுதைப் பற்றி ஆய்வோமாக. இன்று நமக்குக் கிடைத்துள்ள தொண்மையான இஸ்லாமிய தமிழ் இலக்கியம் பல்சந்த மாலை தான். இந்நூலில் நமக்குக் கிடைத்திருப்பவை எட்டுப்பாடல்களே. இப்பாடல்களில் வச்சீர நாட்டு வகுதாபுரியை ஆண்ட அஞ்சு வண்ணத்தவர் மரபினராகிய ஒரு முஸ்லிம் மன்னனைப்பற்றி புகழ்ந்து பாடப்பட்டது என அறிகிறோம். ''பல்சந்த மாலையின் காலம் எது?'' இந்நூலில் வரும் வகுதாபுரி எந்த ஊர்? இந்நூலில் வருகின்ற யவனர். சோனகர், கலுபா, கலுபதி, அஞ்சு வண்ணத்தார், அல்லா போன்ற சொற்களை ஆராய்வதும் அவசியம்.

வரலாற்று நூல்களின் படி பாண்டியநாட்டை ஆண்ட அரபிய முஸ்லீம்கள் இருவர் என்பது அறிய முடிகிறது. ஒருவர் சுல்தான் செய்து இபுறாஹீம் வலியுல்லாஹ். மற்றொருவர் சுல்தான் ஜமாலுத்தீன். கி பி. 1185 முதல் 1198 வரை சுல்தான் செய்யிது இபுறாஹீம் வலியுல்லாஹ் பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்ததாக அறிகிறோம். அக்காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்ட விக்கிரம பாண்டிய மன்னனுடன் போர் புரிந்துதான் ஆட்சியைக் கைப்பற்றினார்கள், என்பதை அறிகிறோம். செய்யிது இபுறாஹீம் வலியுல்லாஹ் ஜித்தாவிலிருந்து கண்ணனூர் வழியாகக் காயல்பட்டினம் வந்து தங்கினார்கள். இவர்களின் சிறிய தந்தையார் செய்யிது மகுதூம் வலியுல்லாஹ் காயல்பட்டினத்தில் அடங்கியுள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது, இவர்கள் தங்கள் சிறியதந்தைஅவர்களின் அடக்கவிடத்தில் பல நாட்கள் தங்களுடன்வந்தவர்களுடன் தங்கிஇருந்தார்கள் என்பதும் தெரிய வருகிறது. வண்ணக்களஞ்சிய புலவர் அவர்களால் இயற்றப்பட்ட ''தீன் விளக்கம்'' என்னும் நூலில் 'அரசாட்சிப்படலம்' என்னும்பகுதி ஏர்வாடி சுல்தான் செய்யிது இபுறாஹீம் ஷஹீது ஒலியுல்லாஹ் அவர்களின் ஆட்சியின் மாட்சிமையைச் சிறப்பாக வருணிக்

கிறது. சுல்தான் ஜமாலுத்தீன் அவர்கள் கி.பி. 1293 முதல் 1303 வரை பாண்டியநாட்டை ஆண்டார்கள் என்பது தெரிய வருகிறது சுந்தரபாண்டிய மன்னர் 1293 (ஹிஜ்ரி 692) இறந்ததும் பாண்டிய நாட்டின் ஆட்சி பொறுப்பு செய்கு ஜமாலுத்தீன் கைவசம் கிடைத்தது என்று டாக்டர் கால்டுவெல் கூறுகிறார். சுல்தான் ஜமாலுத்தீன் அவர்கள் காயல்பட்டினத்தில் வாழ்ந்தவர்கள். காயல்பட்டனத்தில் லுள்ள பழைய குத்பா பள்ளியை இடிக்காமல் அதையும் ஒன்றாகச் சேர்த்து ஒரு பெரிய பள்ளியைக் கட்டினார்கள் என்பது அரசாங்கக் கல்வெட்டுக்குறிப்பு மூலமும், வரலாற்றின் வாயிலாகவும் அறிகிறோம். சுல்தான் ஜமாலுத்தீன் அவர்கள் பரம்பரையினர் இன்றும் காயல்பட்டனத்தில் வாழ்ந்து வருகின்றனர். அவர்களின் குடும்ப தலைமுறை நூல் (சில்சிலா) பலரிடமும் இருக்கின்றன. எனவே பல்சந்த மாலை குறிக்கும் மன்னன் இவ்விருவர்களில் ஒருவராக இருக்க வேண்டுமென்பது புலனாகிறது.

பல்சந்தா மாலை நூல் காலம் பதிநான்காம் நூற்றாண்டுஎன்கிறார் அறிஞர் மு.அருணாசலம்அவர்கள். எனவே இந்நூல் குறிப்பிடும் முஸ்லீம் மன்னர் சுல்தான் ஜமாலுத்தீன் என்பது புலனாகிறது. காலம் 14ம் நூற்றாண்டின் முற்பகுதி என்று உணரமுடியிறது. பல் சந்தா மாலை என்னும் நூலில்எட்டுப்பாடல்களை மேற்கோளாக கொண்டுள்ள 'களவியல்காரிகையை" பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் முதன் முறையாக வெளியிட்டுள்ளார்கள். வச்சிர நாட்டு வகுதா புரி என்பதுஇக்காலத்தில் உள்ள காயல்பட்டினம் என்று திட்டவட்டமாகப் பேராசிரியர் வையாபுரிபிள்ளை அவர்கள் கூறுகிறார்கள் மேலே குறிப்பிட்டுள்ள ஆதாரப்படி பல்சந்த மாலை குறிப்பிடும் மன்னர் சுல்தான் ஜமாலுத்தீன் என்பதும் பல்சந்த மாலையன் காலம் 14ம் நூற்றாண்டின் முற்பகுதி என்பதும் பல்சந்தா மாலை குறிப்பிடும் வகுதா புரி காயல்பட்டினம் என்பதும் தெள்ளத் தெளிவாக தெரிகிறது.

இயவனராசர் கலுபா தாமுதலெண்ண வந்தோர்



இயன்மிகு தானையர் அஞ்சு வண்ணத்தார்........
..................................................................
சோனகர் வாழும் செழும் பொழில் அந்துபார்
..................................................................
அல்லா என வந்து சத்தியா நந்தா வகை தொழுஞ்சீர்
நல்லார் பயிலும் பழனங்கள் சூழ் தரு நாட்டகமே.

பல்சந்த மாலை என்ற நூலில் இயவனராசன், கலுபா, கலுல்பா, கலுபதி என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. பொதுவாக யவனர் என்ற சொல் சங்க இலக்கியங்களிலும் பின்னர் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, பெருங்கதை ஆகிய,படைப்புகளிலும் தமிழகம் புகுந்த பிற நாட்டரைக் குறிக்க கையாளப்பட்டுள்ளன.குறிப்பாக அரபுநாடுகளிலிருந்து வந்த முஸ்லிம்களை குறிக்கின்றது. யவனர், சோனகர் என்ற இரு சொற்களையும், ஆசிரியர் முஸ்லிம்களைக் குறிக்க பயன்படுத்தியுள்ளார்.

கலுபா என்பது கலீபா என்ற அரபிச் சொல்லின் திரிபாகும். கலீபா என்ற சொல்லுக்கு தலைவர், பிரதிநிதி என்ற பொருளும் கொள்ளலாம். நாட்டை ஆட்சிசெய்பவர்கள் அல்லாஹ்வின் பிரதிநிதியாக திகழ்கிறார்கள். அஞ்சு வண்ணத்தார் என்பது ஐந்து வேளை தொழுகும் முஸ்லீம்களைக் குறிக்கும். யவனர், சோனகர், அஞ்சு வண்ணத்தார், என்ற சொற்களால் குறிக்கப்படும் முஸ்லீம்கள் ஒப்பார் இல்லாதவனும், எவரையுப் பெறாதவனும் எவராலும் பெறப்படாதவனும், தனித்தவனும், தேவையற்றவனுமாகிய ஏக இறைவனாகிய அல்லாஹ்வை வணங்க கூடியவர் என்பதை அறிகிறோம். சோனவப்பள்ளி,சோனக வியாபாரி, சோனவசாது,புதைக்குழி, சோனவப் பிள்ளார் பள்ளி, அஞ்சு வண்ணத்தொழுகை, வகுதை போன்ற சொற்கள் காயல்பட்டினத்தில் உள்ள சில கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ளன. (இந்நூலில் பார்க்க—காயலின் கல்வெட்டுக்கள் என்ற அத்தியாயம்). இக்கல்வெட்டு குறிப்புகளிலிருந்தும், மேலே கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்கவிலிருந்தும், பல்சந்த மாலை குறிப்பிடும் வின்னன் என்னும் மன்னன் சுல்தான் ஜமாலுந்தீன் என்பதும் அவர்

ஆட்சி புரிந்தது காயல்பட்டினம்என்ற வகுதாபுரிஎன்பதும் அறிய வருகிறது. வகுதாபுரியில் வாழ்ந்த சோனவர்கள் பாங்குஒலிகேட்டதும் (தொழுகைக்குஅழைப்பு விடுத்ததும்) பள்ளிக்குச்சென்று தொழக்கூடியவர்களாகவும், ஏழை எளியோர்க்கு வாரி வழங்க கூடியவர்களாகவும் திகழ்த்தார் கள் என்பதையும் அறிகிறோம். சுருங்ககூறின் உண்மை முஸ்லீம்களாக, அல்லாஹ்விற்கு அஞ்சக்கூடிய அஞ்சு வண்ணத்தார்களாக வாழ்ந்தார்கள் என்பதை அறிகிறோம்.

ஆயிரமசாலாவைஇயற்றியவர்வண்ணப்பரிமளபுலவர். நூலாசிரியரின் வரலாற்றுக் குறிப்பை நூலின் முகப்பில் அமைந்த பாடலில் ,

புயலாய்ந்த மதுரைகீழ்பாற் பொருந்திய சுலைமானிற்
செயலாய்ந்த முல்லாமிய செயிதுரை செய்ய விந்நூல்
இயலாய்ந்த முதலி செய்து இசுஹாக் என்னும் வகுதை
நாடன்
பயஹாம்பரருள்சேர் வண்னப்பரிமளம் பகர லுற்றான்,

எனக்குறிப்பிட்டுள்ளார். இப்பாடலின் மூலம்நூலாசிரியறின் இயற்பெயர்செய்யதுஇசுஹாக்கென்ப தையும், அவர் வகுதை என்ற காயல்பட்டினத்தைச் சேர்ந் தவர் என்பதையும் அறிகிறோம். சீறாப்புராண ஆசிரியர் அந்நூலில் கொடை வள்ளல் அபுல் காசிம்மரைக்காயரைப் பற்றி குறிப்பிடும் போது

முன்னவன் வகுதைத் துரைபுல் காசீம்
வளமனைச்செருக்கு மொத்திருக்கும்

என்று பாடுகிறார்.அபுல் காசீம் மரைக்காயரின் முன்னோர் கள் காயல் பட்டணத்திலிருந்து பரங்கிபேட்டைக்குச் சென் றவர்கள். இவர் காயலார் குடும்கத்தைச் சேர்ந்தவர்கள். (ஆதாரம்—மஹ்மூதுபந்தர். மஹா வித்வான், காதிரு ஹஸானா மரைக்காயர் — காயலார் வமிசா வழிதிரட்டு 1928 ஆம் ஆண்டு பதிப்பு) புலவர்கள் காயல்தட்டினத் திலிருந்துசென்ற மக்களையும் வகுதைதுறை பிறந்தவர் என்றுபாடியமைக்கு இஃதுஒருஉதாரணமாகும். "திருமணக் காட்சி,, என்னும் காப்பியத்தின் ஆசிரியர் சேகாதி நயினர் என்பவர். இவர் காயல்ற்ட்டினம் சுல்தான் ஜமாலுத்தீன்



வழிவந்த பிரபு செய்து அப்துல் காதிரின் புதல்வர்.

"தள்ளருஞ்சீர் வகுதையபு துல்காதிர் நயினார்
சொற் றனையன் வாசக்
கள்ள விழ்கும் குமப் புயன்சே காதிநயினான் புகழ்மேற்
கருதினானே''

இப்பாடலில் வகுதை காயல்பட்டினத்தைக் குறிக்கிறது. கண்ணகுமது மொகுதூம் முஹம்மது புலவரும், சேகாதி நயினார்ப்புலவரும் காயல்பட்டினத்தைச் சேர்ந்தவர் எனப் புலனாகிறது. காயல்பட்டணத்தில் பிறந்த வள்ளல் சீதக்காதியை ''வகுதைநகர் சீதக்காதி'' என்று நொண்டி நாடகத்தில் அதன் ஆசிரியர் பாடியுள்ளதும் ஈன்று கவனிக் கத்தக்கது. சின்ன சீறாவின் கொடை வள்ளல் லெப்பை நயினாரைப் பற்றிக்குறிப்பிடும் போது "சாதி நாயகன் வகுதை இலப்பை நயினான் இதயதடத்திற்பூத்த'' என்று பனி அஹ்மது மரைக்காயர் குறிப்பிடுகிறார். லெப்பை நயினாரின் தாயார் சாரா உம்மாள் காயல்பட்டினத்தில் பிறந்தவர். இவர்கள் சதக்கததுல்லாஹ் அப்பா அவர்களின் கடைசி மகள். சாரா உம்மாள் அவர்களின் மகன் லெப்பை நயினார் காயல் பட்டணத்தில் பிறந்திருக்கலாம். அல்லது, கீழக்கரையில் பிறந்திருக்கலாம். காயல்பட்ட ணத்தில் பிறந்தவர்களையும், காயல்பட்டணத்தில் பிறந்த வர்களின் மக்களையும், வகுதை வாசிஎன்றுசில புலவர்கள் பாடியதற்கு இதுவும் ஒரு ஆதாரமாக அமைகிறது.

"சீர்த்தியின் வகுதைப் பதியிசுமாயீல் திருவிழிக்கொரு மணியென்ன'' என்றும் ''புகழ்தரும் வகுதை மன்னன் பொருவிலா இசுமாயீல்மெய் மகிழ்தருமணிஹபீபுமுகம்மது' ................ என்றும் புலவர் நாயகம் தங்களுடைய திரு மணி மாலையின்கொடைவள்ளல் ஹபீபுமுஹம்மதுவுடைய தந்தையைப்பற்றி குறிப்பிட்டுள்ளார். அவரின் தந்தை வகுதை என்னும் காயல்பட்டத்தைச் சார்ந்தவர்கள். நவ கணி மாலை என்னும் முஹியித்தீன் புராணத்தை இயற் றிய ஐதூறுசு நயினார்புலவர் காயல்பட்டணத்திற்குஅருகி

லுள்ளகாலன்குடியிருப்பைச்சேர்ந்தவர். இவர்கள்முன்னோர்கள் காயல்பட்டணத்திலிருந்து காலன் குடியிருப்பு சென்றவர்கள் என்பதை கவிதை மூலம் விளக்குகிறார். ''சீரார் வகுதை நகரகத்தி பினன் சேரையின் சேர முதலியாராம் புலவர் பேரர் சீறாசுத்தீன் பாபா நயினாரார்.''

வகுதையான காகிரூரில் பிறந்து, வளர்ந்து, மறைந்த கல்வி கடலாகிய மகான் பெரிய சம்சுத்தீன் வலியுல்லாஹ் அவர்களைப்பற்றி பாவலர் காதிரவி மரைக்காயர் பல கவிதைகள் புனைந்துள்ளார்கள். அவர்களின் சில பாடல்களை பொருளுடன் ஆய்வோமாக.

''மருங்கெலாம் காணும் மாடமார் மனையின் உள்ளில்
அருமையாம் பசுங்கிளி அருமறை புருகான் ஓதும்
தெருவெலாம் காணும் திகழ்திரு மதரஸா தன்னில்
உருவிடும் மனன வோதை முழங்கு வகிதை!'' (1)

''பெருமைசேர் ஞானி பெரிய ஷம்ஷுத்தீன் நிமலர்
தருமொரு பாடந்தன்னை மனுவோடு ஜின்னும்
அருமையா யோதும் அழகினைக் கண்டு கண்டு
உருவிலான் தேவர் உவந்திடும் பதியாம் காயல்;'' (2)

''அப்பதி காயல் அணி பெறும் வகுதையான காகிர்
.......................................................................
செப்பொனாப்புகழின்சிலர்பெரியஷம்ஷுத்தீன் வலியே!'' (3)

(நூல்: காகிரூர் வழிநடை சிந்து.)

பாடல்களின் பொருள்:

பெருமையுடைய வகுதையாகிய காயல்பட்டினம் தெருக்களில்காணப்படும் மாடிவீடுகளில் எல்லாம், அழகான பஞ்சவர்ணக் கிளிகள் அருள்மறை குர் ஆன் ஷரீபை மனப்பாடமாக ஓதுகின்றன. அங்குள்ள வீதிகளில்எல்லாம் குர் ஆன் பாடம் ஓதித் தரக்கூடிய மதரஸாக்களில் மாணவர்கள் மனப்பாடம் (ஹிப்ளு) செய்யும் குர் ஆன் ஓசை முழங்கி கொண்டிருக்கிறது.

கண்ணியம் மிகுந்த ஞான வள்ளலான அஷ்ஷெய்கு, பெரிய ஷம்ஷீத்தீன் ஒலியுல்லாஹ் (ரஹ்) அவர்கள்



மனிதர்களுக்கும், ஜின்களுக்கும் அழகான திருமறை குர்ஆன் ஷரிபை ஓதிக்கொடுக்கும் அழகைக் கண்டு இறைவனின் மலக்குகள் (தேவர்கள்) உள்ளம் மகிழ்ந்து இன்பம் அடையும் சிறப்பு மிகுந்த நகரம்காயல் என்னும் காயல் பட்டணமாகும்.

சொல்ல முடியாத, அளவற்ற புகழ் பெற்ற ஞானச் சீலரான அஷ்ஷெய்கு, பெரிய ஷம்ஷுத்தீன் ஒலியுல்லாஹ் (ரஹ்) அவர்கள், வாழும்ஊர் அழகும் சிறப்பும் பொருந்திய வகுதை என்னும் காஹிறூர் (காயல்பட்டினம்) ஆகும்.

வகுதை தான் காயல்பட்டினம் என்பதற்குஇக்கவிதைகள் சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றன. இக்கவிதைகளின் ஆசிரியர் காதிரலிமரைக்காயர், மஹ்மூது தீபிஒலியுல்லாஹ் அவர்ககளின்மகள் வழியில்வந்தவர். அதிராம்பட்டினத்தில் தோன்றிய சிறந்த இறைநேசச் செல்வரான மகுதூம் சின்னீனா லெப்பை ஆலிம் வலி அவர்கள் காயல்பட்டினம் வந்து மகான் பெரிய சம்சுத்தீன் அப்பா அவர்களிடம் பல ஆண்டுகள் கல்வி கற்றார்கள். இவர்களிடம் கல்வி கற்றதன் பொருட்டால் குருநாதர் போன்று இவர்களும் மனிதர்களுக்கும், ஜின்களுக்கும் அதிராம்பட்டினத்தில் ஒரு மதரஸா நிறுவி ஓதிகொடுத்தார்கள். அவர்களின் இறுதி காலத்தில் கீழக்கரையில் ஓதிக் கொடுத்துக்கொண்டிருக்கும் போது அங்கு காலமாகி அடங்கியுள்ளார்கள் என்பதும் ஈண்டுகுறிப்பிடத்தக்கது.

''விண்ணவர் துதித்துப் போற்றும் இயனிறை தருமம் ஓங்கும்
புண்ணிய பதியாம் புகழ் நிறை காகிர் வகுதை எம்மூரே!

(நூல்: உக்காஷாவலியுல்லாஹ் பாமாலை.
ஆசிரியர்: புலவர் செய்குனுமரைக்காயர்.)

வானவர்களான மலக்குகள் மகிழ்ந்து வாழ்த்திப் போற்றும் அளவுக்குத் தான தர்மங்கள் மிகுந்துள்ளதும், புண்ணியம் நிறைந்ததுமான காஹிர் என்னும் வகுதை நகர் எங்களூர் என்பது இப்பாடலின் கருத்துரையாகும்

''வழிவழிப் பெருமை சேரும் வகுதையாம் காயற் பதிதனில்
அழிவிலாப் புகழின் சீயம் அன்னவோர் தன்மை பெற்ற
கழிபெரும் குலத்தில் தோன்றி நன்னயத் தமிழில் புலமைப்
பிழையிலா நாவின் மிக்கப் பாவலன் காதிறு அசனா!

[-நூல் : காட்டானை ஒலியுல்லா முனாஜாத்து.
ஆசிரியர் : ஆசுகவி முத்துத் தாண்டவராயர் புலவர் அவர்கள்]

பாடல் பொருள்:-

தலைமுறை தலைமுறையாகப் பெருமை மிக்கதும், புகழ் நிறைந்ததுமான வகுதை என்னும் காயல்பட்டினத்தின் மரபினரின்வழித்தோன்றலான, தமிழ்ப்புலமைமிக்கவரான குற்றமில்லா நாவினைப் பெற்றவரான காதிர் ஹசனா மரைக்காயர் புலவர்.

''வகுதையம் பதியாங் வளமிகு காகிறூர் வழிவரு மரபின்
தகுதிசேர் குலத்தில் தோன்றி தனநகர் மஹ்மூது பந்தர்
கதிபெற வாழும்நல் கவிப்புல வனானோன் தருநூ லீதே!''

[-நூல்: மஹ்மூது தீபி நான்மணி மாலை
ஆசிரியர்: குலாம் காதிறு நாவலர்]

பாடல் பொருள்:-

வகுதை என்னும் வளம் பொருந்திய காஹிரூர் என்னும் ஊரின் மரபின் வழியில் தோன்றியவரும், மஹ்மூது பந்தர் என்னும் பறங்கிப்பேட்டையில் வாழ்பவருமான 'கவிச்சாகரம்' செய்கு நைனா மரைக்காயர் புலவர் சிறப்பு மிக்க புலமை பெற்றவர் ஆவார்.

''......வகுதை யூரான் மஹ்மூது பந்தர் வாழ்வோன்''

[நூல்: புதூகுத் துறுபு.
ஆசிரியர்: மகாவித்வான் அல்ஹாஜ் காதிரலி மரைக்காயர்]

பாடல் பொருள்:

வகுதை என்னும் காயல் பட்டினம் ஊரினரும், மஹ்மூது பந்தர் என்னும் பறங்கிப் பேட்டையின் வாழ்வோருமான மஹாவித்வான் அல்ஹாஜ் காதிரலி மரைக்காயர் புலவர்.



''வகுதை எனும் பேர் வழங்கா நின்ற காயல் பட்டின நன்னகர்
தகுதிசால் குலத்திற் றோன்றி மிகுபுகழ் கொண்ட மகிபர் செய்யிது
மகுமுது மரைக்கார் மாதவன் வழியின் வந்த புலமை மிக்கான்
நகுமலர் விரைசெறி தாரான் எந்தை செய்குனா மரைக்கான் தானே!''

[நூல்: மஹ்மூது தீபி ஒலியுல்லாஹ் கீர்த்தனை
ஆசிரியர்: பாவலர் சாதிர் அலி மரைக்காயர்]

பாடல் பொருள்:

வகுதை என்னும் பேரினால் வழங்கப்பட்டதான காயல்பட்டினத்தின் தகுதி மிக்க குடும்பத்தில்பிறந்துமிகுந்த புகழைப் பெற்ற செய்யிது முஹம்மது (மஹ்மூது) என்னும் பெரியினை உடைய மாதவம் மிகுந்தவரின் வழியில் வந்த, புலமைமிக்க கவிச்சாரகம் செய்கு நைனா மரைக்காயர் புலவர்.

மேலே கூறப்பட்ட பாடல்கள் மூலம் வகுதை என்பது காயல்பட்டணம் என திட்டவட்டமாக தெரிகிறது. ஆதலான் ''வகுதை'' என்பது குறிப்பாகவும் சிறப்பாகவும் ''காயல்'' எனப்பட்ட காயல்பட்டினத்தையே குறித்து நிற்கிறது என்பதை ஐயமின்றி அறிகிறோம்.



# காயலும் இலங்கை முஸ்லிம்களும்

இலங்கை முஸ்லிம்களின் தாயகம் தமிழ்நாடா? அரபு நாடா? என்பது இலங்கையிலுள்ள வரலாற்று வல்லுனர்கள், அறிஞர்கள், எழுத்தாளர்கள் இடையே பெரும் சிக்கலான பிரச்சனையாக இருந்தது. பலர் இலங்கை முஸ்லிம்களின் முன்னோர்கள் தமிழகத்தின் திருநெல்வேலி மாவட்டத்தி லுள்ள தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்தில் அமைந்துள்ள காயல்பட்டினத்திலிருந்து வந்தவர்கள் என்றும், சிலர் அரபு நாட்டிலிருந்து வந்தவர்கள் என்றும் கூறுகிறார்கள். எது உண்மை என்பதை வரலாற்று நூல் களின் ஆதாரங்களைக் கொண்டும், அறிஞர்களின் கருத்துக் களைக் கொண்டும், அங்குள்ள மக்களின் பழக்க வழக்கங் களைக் கொண்டும் ஆய்வு செய்து ஒரு முடிவுக்கு வருவோமாக.

சிறந்த வரலாற்று வல்லுனரான பேராசிரியர் முஜிப் அவர்கள் காயல்பட்டினத்திற்கும், இலங்கைக்கும் உள்ள பழமையானதொடர்பை தங்களுடைய "இந்தியன் முஸ்லிம்' (The Indian Muslim Published in London.) என்னும் நூலில் தெளிவான முறையில் எழுதியுள்ளார். அந்நூலில் இலங்கைக்கும், காயல்பட்டினத்திற்கும், வர்த்தகத்தொடர்பு 9 ஆம் நூற்றாண்டு முதல் இருந்ததாக எழுதியிருக்கிறார். குறிப்பாக 13 ஆம் நூற்றாண்டிலிருந்து இலங்கைக்கும், மலபார்பகுதியிலுள்ளகள்ளிக்கோட்டை, கொச்சி, மாஃபர் பகுதியிலுள்ள காயலுக்கும் விரிந்த அளவில் வியாபார தொடர்பு பரந்து இருந்தது என இயம்பியுள்ளார். இவர் களின் நூல்மூலம் காயல்பட்டினம் மாஃபர் பகுதியிலுள்ள பழமையான நகரம் என்பதும், அங்குள்ளவர்கள் இலங்கைக் குச்சுமார் 1000 ஆண்டுகளுக்கு முன்பே தொழில் தொடர்பு கொண்டவர்கள் என்பதும் புலனாகிறது. இலங்கையைச் சேர்ந்தடாக்டர் சிரிமா கிரிப்பாமுன் (Dr Sirima Kiribamune)



என்ற அறிஞர் இலங்கை முஸ்லிம்களின் மூதாதையர்கள் காயல்பட்டினத்திலிருந்து வந்தவர்கள்எனவரைந்துள்ளார்.

இலங்கை பல்கலைக் கழகத்தின் சரித்திர பேராசிரியர் டாக்டர் K. W. குணவர்த்தன் ஒன்பதாம் நூற்றாண்டிலேயே மலபார் மாஃபார் பகுதிகளில் குடியேறிய அரபு முஸ்லிம் கள் இலங்கையோடு தொடர்பு கொண்டனர் என்றும் தமிழகத்தில் தொண்மையான ஊராகிய காயல்பட்டணத் திலிருந்து முஸ்லிம்கள் இலங்கையிலுள்ள வேர்விளையில் குடியேறினார்கள் என்றும் கூறுகிறார். குறிப்பாக 14ஆம் நூற்றாண்டின் மத்தியில் காயல்பட்டினத்திலிருந்து இலங் கையின் சில பகுதிகளில் குடியேறினார்கள் என்றும் உரைக் கிறார். டாக்டர் எஸ். எம். கமால் தம்முடைய முஸ்லிம் களும் தமிழகமும் என்னும் நூலில் காயல்பட்டினத்திற்கும், இலங்கைக்கும்உள்ள தொடர்பை கீழ்க்கண்ட விதமாக குறிப்பிடுகிறார். "ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியரது இன்னொரு ஆவணத்தின்படி, காயல்பட்டினத்தில் அரபி முஸ்லிம்கள் கி.பி. ஒன்பதாவது நூற்றாணடில் அரபித் தாயகத்தில் இருந்து குடியேறி அங்கு அறுபத்து நான்கு தொழுகைப் பள்ளிகளை அமைத்தனர் என்றும், தென்னை, பனைமரத்தோப்புகள் பலவற்றை ஏற்படுத்தினார் என்றும் தெரிகிறது. இவர்களும், இவர்களது வம்ச வழியினரும், சோழ மண்டலத்தின் எதிர் கரையான ஈழத்துடனும் வணிகத் தொடர்புகளைப் பெருக்கியதுடன், ஈழத்தின் வடக்கு, வடகிழக்கு, தெற்கு பகுதிகளில் திருக்கோணமலை யாழ்ப்பாணம், மாதோட்டம், மன்னார், புத்தளம், கொழும்பு வேருவிளை, காலி ஆகிய பகுதிகளில் இஸ்லாமியர்களது முதலாவது குடியிருப்புகளை நிறுவினர்.'' இவர்கள் ஈழத் தின் முத்துக்களையும், மணிகளையும் பெற்றுக் கொண்டு, தங்கள் நாட்டு தங்கம், செம்பு, பட்டு, மட்கலங்கள் குதிரைகள் ஆகியவைகளைப் பண்டமாற்றில் வழங்கியதாக வரலாற்றுஆசிரியர் நிக்கோலஸ் பரணவிதான குறிப்பிட் டுள்ள்ளார். (Nicholos and Paranavitana—Concise History of Ceylon) இன்னொரு நூலாசிரியரான ஜட்ஜ் காசி

செட்டியும் இலங்கை முஸ்லிம்களைப் பற்றிக் குறிப்பிடு கையில் அவர்கள் முதலில் குமரிமுனைக்கு கிழக்கே உள்ள காயல்பட்டினத்தில், எட்டாவது நூற்றாண்டில் குடியேறிய அரபியர்களின் பரம்பரையினர். காயலில் வாழ்ந்து பின்னர் இலங்கைக்கு வந்ததாக வரைந்துள்ளார். காயல் பட்டினம் சோனகர்பட்டினமாக வழங்கி வந்ததாக டாக்டர் கால்டுவெல் குறிப்பிட்டுள்ளார்''

ஆர்னல்டு என்ற ஆங்கில அறிஞர் காயல்பட்டினத் திற்கும், இலங்கையிலுள்ள புத்தளம், பேருவிளைக்கும் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே உறவு முறையும் தொழில் தொடர்பும் இருந்ததாக இயம்பியுள்ளார். வரலாற்று வல்லுநர் திரு. தாராசந்த் (Mr. Tarachand Influence of Islam on Indian culture) அவர்கள் அரபியர்கள் இந்தியா வின் மலபார் பகுதியிலும் மாஃபர் பகுதியிலும் வெகு காலத்திற்கு முன்பே வாணிக தொடர்பு கொண்டிருந் தார்கள். மாஃபர் பகுதியில் திருநெல்வேலி ஜில்லாவின் தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடத்திலுள்ள காயல்பட்டினம் தலைச் சிறந்த துறைமுகப்பட்டினமாக திகழ்ந்தது, என்றும் குறிப்பிட்டுள்ளார். இங்கு 7-ஆம் நூற்றாண்டு முதல் 13-ம் நூற்றாண்டு வரையிலுள்ள அரபிய நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன என்றும் எழுதியுள்ளார்.

மாஃபரின் ஆட்சிப்பீடம் காயல்பட்டினத்தில்தான் இருந்தது என்பதை காயல்பட்டினத்தில் வாழ்த்து மறைந்த மன்னர்களின் கல்லறைக் குறிப்புகள் நிரூபிக்கின்றன. ஹிஜ்ரி 628-ல் மரணமாகி காயல்பட்டினத்தில் அடங்கி யுள்ள மாஃபர் சுல்தான் அப்துல் அஜீஸ் அவர்களின் மீஸான் கல் இன்றும் சான்று பகன்று கொண்டிருக்கின்றது. டாக்டர் டென்ஹாம் இலங்கை மூர்கள் (சோனகர்கள்) தங்கள் இனத்தின் முதல் இடம் காயல்பட்டினம் என மதிப்பிடுகிறார்கள் என்றும், இவர்கள் கி.பி. 1024-ல் களுத் துறை மாவட்டத்திலுள்ள பர்பரீன் என்ற பேருவிளை



வந்து இறங்கினார்கள் என்றும், இவர்களின் குடியேற்றம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது என்றும் உரைக்கின் றார்கள் என்றும் எழுதுகிறார்.

காயல்பட்டினத்திற்கு சோனகர்பட்டினம் என்ற பெய ரும் உண்டு என்பதை பல வரலாற்று நூற்கள் மூலம் அறிய முடிகிறது. எகிப்து நாட்டிலிருந்து காயலபட்டினம் வந்து குடியேறிய அரபிகளின் வழித்தோன்றல்களை சோனர்கள் என்று அழைத்த விபரத்தை டாக்டர் கால்டு வெல் தங்களுடைய நூலில் விளக்கியுள்ளார். காயல்பட் டினத்திற்கு அருகில் சோனகன்விளை என்ற சிற்றூரும் இருக்கிறது. தமிழர்கள் கிரேக்கர்களை யவனர் என்ற அழைத்தது போல் அரபிவழித் தோன்றல்களையும் அழைத் துள்ளார்கள். காலப் போக்கில் யவனர், சோனகர் என்று மருவிற்று. நக்சினார்கினியார் என்ற புலவர் "நெடு நெல் வாடை" என்னும் நூலில் சோனகர் என்னும் சொல்லை கையாண்டுள்ளார். இதே மாதிரி பழைய தமிழ் இலக்கி யங்கள் சிலவற்றிலும் இச்சொல் பயன்படுத்தப்பட் டுள்ளது.

காயல்பட்டினம் சோனகர்களின் தந்தை நாடாக இன்றும் மதிக்கப்படுவதாக ஸர்ஸைமன் காசி சிட்டியும், ஸர். பொன்னம்பலம் இராமநாதனும் ராயல்ஆசியா சஞ்சி கையில் எழுதியுள்ளார்கள்.

காயல்பட்டினத்திலிருந்து இலங்கைக்கு முதல் குடி யேற்றம் கி.பி. 1024-ல் நடைபெற்றது இஸ்லாத்தை பரப்புவதற்காகவும், தொழில் தொடர்பு கொள்வதற்காக வும் நடைபெற்றது, இரண்டாவது குடியேற்றம் கி.பி. 1532-ல் போர்த்துக்கீசியர் காயலில் படையெடுத்த போது நடைபெற்றது. போர்த்துக்கீசியர் படையெடுப் பால் முஸ்லிம் மக்களின் தொழில்கள் பாதிக்கப்பட்டன. எனவே முஸ்லிம் மக்களின் சிலர் இலங்கைக்கும் சிலர் தமிழகத்தின் மற்ற பகுதிகளுக்குச் சென்றார்கள்.

The settlements of the portuguese on the Tirunelvelly

coast dates from 1532. The chief place along the coast was Kayalpatnam. (Dr. Caldwell)

கி.. 1532-ல்பி போர்த்துகீசிரியர் திருநெல்வேலி ஜில்லா வில் குடியேறினார்கள். அவர்களின் குடியேற்றத்தின் முக்கிய பகுதி காயல்பட்டினம் என டாக்டர் கால்டுவெல் எழுதுகிறார். போர்த்துகீசிரியர் காயலில் படையெடுத்தார் என்பதற்கு பதிலாக குடியேறினார் என்று டாக்டர் கால்டு வெல் குறிப்பிடுகிறார். காயலில் போர்த்துகீசியர் படையெ டுத்தபோது முஸ்லிம் தலைவர்கள் கொல்லப்பட்டார்கள். அவர்களின் ஆட்சியும் தகர்த்து எறியப்பட்டன என்று திரு. சேவியர் எழுதுகிறார. Francis Xavier writes that the chiefs of the saracens (Muhammadans) were slained and that their power was Utterly broken.

மொழிவழி ஆராய்ச்சி வல்லுனர்கள் இலங்கை முஸ் லிம்களின் தாயகம் எது என்பதை மொழியை அடிப்ப டையாக வைத்து ஆய்ந்துள்ளார்கள். இலங்கையிலுள்ள முஸ்லிம்களின் முன்னோர்கள் அரபு நாட்டிலிருந்து பெரு மளவில் வந்து இருந்தால் அவர்கள் தாய்மொழி அரபியாக இருக்க வேண்டும் அல்லது இலங்கையின் பூர்வீக மொழி யாகிய சிங்களம் இருக்க வேண்டும். ஆனால் இலங்கை முஸ்லீம்களின் தாய்மொழி தமிழாக இருக்கிறது. எனவே திரு. டிசில்வா என்ற இலங்கை அறிஞர், இலங்கை முஸ்லீம்கள் தமிழகத்திலிருந்து வந்தார்கள் எனக் கூறு கிறார்.

ஜனாப். H. M. Z. பரூக் என்ற இலங்கை எழுத்தாளர் இலங்கை முஸ்லீம்களில முன்னோர்களில் வெகு சிலரே அரபு நாட்டிலிருந்து வந்து இங்குள்ள மக்களுடன் திருமணம் செய்து அவர்களின் வழிவந்தவர்கள் என்றும், மற்றவர்களின் பெரும்பாலானோர்கள் காயல்பட்டினத் திலிருந்து வந்தார்கள். இவர்களும் அரபு வம்சா வழியைச்



சேர்ந்தவர்கள். வணிகர்களாக வந்து இங்குள்ள மக்களு டன் கலந்து இங்கே தங்கிவிட்டார்கள், என எழுதியுள் ளார்கள். ( The ceylon moors are the descendants, first of the nucleus Arab settlers and the converts to Islam among the local population with whom they intermarried and secondly of the Muslims are similar origin from across the Palkstrait, Particularly, Kayalpatnam who too came as traders and remained to settle down mainly with the outburst of Muslims of commerical activity in the region,

Dr. R. L. புரோஹியர் ( R. L. Brohier, on seeing ceylon ) என்ற எழுத்தாளர் வேர்வளை கடலோர பகுதி யிலுள்ள கச்சிமலைப் பகுதியில் கி. பி. 1024யில் குடியேறிய காயல் மக்களின் வழிவந்தவர்கள் கச்சிமலைப் பள்ளி வாயலைக் கட்டியிருக்கலாம் என்பது பிரபலமான கருத்து என்று எழுதியிருக்கிறார். திரு. தாராசந்த சரித்திர இலக் கிய நூல்கள் மூலம் தென் இந்தியாவிலுள்ள காயலுக்கும், இலங்கையிலுள்ள பேருவிளைக் நம் மிகுதியான தொடர்பு கள் இருந்தன என்பதை உணர முடிகிறது (We find Increasing influence to Beruwala in Srilanka and Kayal in South India in the historical and literary works) என்று எழுதியிருக்கிறார். பேருவலையிலுள்ள செய்கு முஸ்தபா வலியுல்லாஹ் அவர்களின் முன்னோர்கள் குடி பெயர்ந்து வந்த ஊராகிய காயல்பட்டினத்திலிருந்து வந்த உலகக்கீர்த்திப் பெற்ற குத்புஜமான் உமறு வலியுல்லாஹ் அவர்களை பேருவலையில் வரவேற்று முரிது பெற்று அவர் களின் ஆசியால் செய்கு முஸ்தபா வலியுல்லாஹ் மார்க்கக் கலையில் வல்லவராக திகழ்ந்தார்கள் என்று இலங்கை வரலாற்று ஆசிரியர்கள் பறைசாற்றுகிறார்கள்.

திரு A. V. வீர சூர என்ற சிங்கள எழுத்தாளர் ''ராஜ வலிய'' என்னும் நூலில் காயல்பட்டணத்திலிருந்து வந்த முஸ்லீம்களைச் சோனர்கள் (யோனர்கள்) என்று அழைக்

கப்படுகிறார்கள்என்றுஎழுதியுள்ளார்கள்.திரு.C.பிரிட்டோ என்ற அறிஞர் சோனகர்கள் காயல்பட்டினத்திலிருந்தும் மற்றும் சிலதென்னிந்திய நகரிலிருந்தும் போர்த்துக்கீஸியர் காலத்திலும், டச்சுகாலத்திலும் அதிகமாக வந்து இலங்கையில் குடியேறியிருக்கிறார்கள் என்று குறிப்பிட்டுள்ளார். திரு. பிரிட்டோ அவர்கள் காயல்பட்டினத்திலிருந்து கி. பி. 1532 யில் இலங்கைக்கு ஏற்பட்ட இரண்டாவது குடியேற்றத்தை நினைவுபடுத்துகிறார்.

வரலாற்று நூல்களின் மூலமாகவும், அறிஞர்களின் ஆய்வைக்கொண்டும் இலங்கை முஸ்லிம்களின் தாயகம் காயல்பட்டினம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல் தெள்ளத்தெளிவாகத் தெரிகிறது. காயல்பட்டின மக்கள் ஒன்பதாம் நூற்றாண்டிலே இலங்கையில் குடியேறினர்கள் என்பதை பல இலங்கை அறிஞர்களின் நூல் மூலம் அறிகிறோம். எனவே காயல்பட்டினம் சுமார் 1100 ஆண்டுகளுக்கு முந்திய சீரும்சிறப்பும் பெற்ற ஊர் என்பது புலனாகிறது. மேலும் மார்க்கோபோலோ, இபுனுபதுதா போன்றவர்கள் குறிப்பிடும் மாஃபர் பகுதியின் கரு காயல்பட்டினம் என்பது இலங்கை முஸ்லிம்கம்களின் சரித்திர நூல் மூலம் திட்டவட்டமாக அறிய முடிகிறது.

மேலே குறிப்பிட்ட இலங்கை மற்றும் உலக அறிஞர்கள், பேராசிரியர்கள், வரலாற்று வல்லுனர்களின் முடிவு மிகவும் பொருத்தமானது என்பதற்கு காயல்பட்டினத்தில் இன்றும் பல ஆதாரங்கள் இருக்கின்றன. சுமார் 1180 ஆண்டுகளுக்கு முன்பு அரபுநாட்டிலிருந்து வந்த பரம்பரையினர்களின் வாரிசுகள் இன்றும் காயல்பட்டினத்தில் இருக்கிறார்கள். அவர்களின் குடும்பவழிமுறை (சில்சிலா) குறிப்பேடுகள் பலரின் கைகளில் இன்றும் இருக்கின்றன. கி.பி. 843 (ஹிஜ்ரி 228)யில் கட்டப்பட்ட பெரிய ஜும்ஆ பள்ளி பல மாற்றங்களுடன் இன்றும் காயல்பட்டினம் நெய்னார் தெருவில் பொழிவுடன் காட்சி அளிக்கின்றன. கி.பி.843யில்



முஹம்மது கல்ஜி, மற்றும் அவர்களுடன் வந்த நாதக்களால் கட்டப்பட்ட இப்பெரிய ஜும்ஆ பள்ளி சுல்தான் ஜமாலுத்தீன் அவர்களால் மீண்டும் கட்ட துவங்கப்பட்டு அவர்களின் மகனால் கி. பி. 1329ல் பிரமாண்டமாகப் பெரிய அளவில் கட்டி முடிக்கப்பட்டது,என்பதை இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களின் குறிப்பு மூலமும் அறியக்கிடைக்கிறது. சுமார் 1000 ஆண்டுகளுக்குமுன் கட்டப்பட்ட கடற்கரைப்பள்ளியின் இமாமாக இருந்த செய்யிது அஹ்மது பின் ஷாஹிது இப்னு முஹம்மது கரீம் மதனி அவர்களின் மீஸான்கற்கள்மூலம் அவர்களின் இறப்பு ஹிஜ்ரி 430 என்பதை அறிகிறோம்.

இந்த ஆதாரங்கள் மூலம் காயல்பட்டினம் மிகவும் தொன்மையான பதி என்பதும், இங்கு இருந்து, இனிய இஸ்லாம், இந்தியாவின் பலபகுதிகளிலும், இலங்கையிலும் பரவியது என்பதும் நன்கு புலனாகிறது. இப்பழமையான காயல்பதிதான் இலங்கை முஸ்லிம்களின் தாயகம் என்பதை இக்கட்டுரையில் குறிப்பிட்ட இலங்கை அறிஞர்கள், உலகத்திலுள்ள பல்வேறு வரலாற்று ஆசிரியர்கள், எழுத்தாளர்களின் ஆதாரங்கள் நமக்குத் தெளிவாக விளக்குகின்றன.



# பவித்திர மாணிக்கப்பட்டினம்

வரலாற்று நூல்கள், இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் கூறும் பவித்திர மாணிக்கப்பட்டினம் (பௌத்ர மாணிக் கப்பட்டினம்)எது என்பது குறித்து ஆய்ந்துநோக்குவோம். பவித்ரமாணிக்கப்பட்டினம் என்பது அன்று எவ்வூரைக் குறித்தது? அவ்வூர் இன்று எங்குள்ளது? இன்று அவ்வூரின் பெயர் என்ன? பவித்ரமாணிக்கப்பட்டினம் ஒருதனிஊரை மட்டும் கொண்டு விளங்கியதா? அல்லது அவ்வூரின் ஆளுகைக்கு உட்பட்ட எல்லைக்குப் பொது பெயராகவும் அவ்வூருக்குச் சிறப்புப்பெயராகவும் கொள்ளப்பட்டதா? அப்பெயர் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு மட்டும் உரியதாக இருந்ததா? என்பன பற்றி ஆய்தல் அவசியம்.

பவித்ரமாணிக்கப்பட்டினம் பற்றிய குறிப்புகள் காயல் பட்டினம் கறுப்புடையார்ப்பள்ளிக்கல்வெட்டு, காயல்பட் டினம் காட்டு மகுதூம் பள்ளி தர்ஹா கல்வெட்டு, காயல் பட்டினப் யூசுப் ஒலி தர்ஹாகல்வெட்டு, காயல்பட்டினம் கொடிமரசிறுநெய்னார்பள்ளிக்கல்வெட்டு,காயல்பட்டினம் பெரிய குத்பாபள்ளியின் மையவாடியிலுள்ள நடுகல் (மீஸான்கள்)கல்வெட்டு, காயல்பட்டினம் சிவன்கோயில் கல்வெட்டு, கொற்கையிலுள்ள கொற்கையம்மன் கோயில் படித்தளக்கல்வெட்டு, திருநெல்வேலி திருக்கோயில் திருச்சுற்று மாளிகைகல்வெட்டு, திருபுல்லாணிக்கோயில் கல்வெட்டு போன்றவற்றில் இடம்பெற்றுள்ளன. இவை ஒருபுறம் இருக்க வரலாற்றைக் கவனிப்போம்.

பாண்டிய மன்னர்களைப் பற்றி வரலாறு விளக்கமா கவும் தெளிவாகவும் எடுத்துக் கூறும் ''தீன்விளக்கம்'' காவியம் (ஏர்வாடி செய்யிது இப்றாஹீம் ஒலியுல்லாஹ் அவர்களின் வரலாற்றுக் காவியம்) இந்த 'பவித்ர மாணிக் கப் பட்டினம்' பற்றி தெளிவாகவும், அழகாகவும் எடுத்து இயம்பியுள்ளது. இப்பட்டினம் எங்கிருந்தது என்றும் துல் லியமாகவும், தெளிவாகவும்இக் காவியம் கூறியுள்ளது.



வண்ணக் களஞ்சியப்புலவர் இயற்றிய தீன் விளக்கம் காவியம் மிகவும் தெளிவாகவும் துல்லியமாகக் கூறும் குறிப்புகளாவன:- இப்றாஹீம்ஷஹீது ஒலியுல்லாஹ்(ரஹ்) அவர்கள் ஜித்தாவில் இருந்து பல கப்பல்களில்பெரும்படை யுடன் புறப்பட்டு கேரளக் கரையில் உள்ளக் கண்ணனூர் துறைமுகத்தில் இறங்கினார். அனைவரும் ஒரு சோலையை அடைந்து இளைப்பாறினார்கள். மரக்கலங்கள்ஜித்தாவுக்குத் திருப்பியனுப்பப்பட்டன. அவர்களின் வருகையைப் பற்றி கேள்வியுற்ற கண்ணனூர் மன்னன்அங்கு வந்து அவர்களை வரவேற்று வருகையின் நோக்கம் யாதென வினவஒலியவர் கள் விளக்கம் செய்தனர். மன்னன் மகிழ்ந்து என் பங்காக நானும் சில வீரர்களை உங்களுடன் அனுப்புவேன். என் மூதாதையர்களுக்கு நபி பெருமானார் இட்டியிருக்கும் கட்டளையாவது கண்ணனூர் மன்னர்கள் வேறு எங்கும் செல்லாது ஹஜ்ஜீக்கு செல்வோரை மரக்கலத்தில் ஏற்றி அனுப்ப வேண்டும் என்பதாகும். அச்சொல்லை நாங்கள் என்றும் காத்து வருகிறோம். எனவே நான் வர இயலாது என்றுரைத்தான். அவன் சொன்னபடியே படைவீரர் பலர் அவர்களுடன் வந்து சேர்ந்து கொண்டனர். அங்கிருந்து அனைவரும் பயணமாகி கொச்சிக்கு வந்து சேர்ந்தனர். கொச்சியை விட்டு நீங்கி கொல்லம் அடைந்தனர். அங் கிருந்து கடலோரமாகச்சென்று விளிஞ்சம் என்னும் ஊரை அடைந்தனர். அதன் பின்னர் விளிஞ்சத்திலிருந்து புறப் பட்டு ஆறுகள், மலைகள், காடுகள் எல்லாம் கடந்து பாண் டியநாட்டினுள் நுழைந்தார்கள். வண்ணக்களஞ்சியப்புலவர் இயற்றிய தீன்விளக்கத்திலுள்ள சமர்யாத்திரைப் படலத்தி லுள்ள பர்டல்கள் செய்யிது இப்றாஹீம்ஷஹீது ஒலி அவர் கள் பவித்திர மாணிக்கப்பட்டினம் வந்த வழியை அழகாக வர்ணிக்கின்றன.

## "தீன் விளக்கம்" காவியம் காட்டும் வழித்தடம்:

ஜித்தாவில் இருந்து புறப்பட்ட இபுறாஹீம் ஷஹீது
ஒலி(ரவ்ஹ்) கடல்வழி, தரைவழி தமிழகம் வருகை

NOT SCALED: BY. BARAKAATH.

| | |
|---|---|
| பவுத்ர மாணிக்கப் பட்டினம் | : தங்குதல் (CAMP) |
| புன்னக் காயல் | : படைத்தளம் (MILITARY CAMP) NO. 1. |
| வைப்பாறு | : படைத்தளம் (MILITARY CAMP & BATTLE FIELD) NO. 2, |
| மதுரை | : தலைநகர் (CAPITAL CITY) |
| ஏர்வாடி | : இருப்பு (தங்கல்) / படைத்தளம் / M.C.&B.F. NO. 3, |



### தீன் விளக்கப் பாடல்கள்:

''பரியுமோர் வாயு வேகப் பண்புறப் பலநாள் ஓடிச்
சொரியுள்நீள் வளஞ்செய் 'கண்ணூர்க் கரை'மிகுதொலை
யிற்றோன்ற'' [சமர்யாத்திரைப் படலம்: 135]

''தொகைமரக் கலங்கள் எல்லாம் துறைமுகத்தினிலே
சேர்த்துத் திகையுறப் பீனிசேறிச் செம்மலார் கரையில் வந்து''
[ச.யா.ப. - 137]

''மேவிய 'கண்ணூர்' வாழும் வேந்தன் ஈதுணர்து காண்க
ஆவியுள் அன்பு கூர்ந்தே.............'' [ச. யா ப. -140]

''நன்குயர் வளஞ்சேர் கண்ணூர்' நாட்டெல்கை ஒழுகி
நீங்கி அங்கொரு தினம் உறைந்தே..............................
.......................புரவி யூர்ந்து கேரள தேயம் ஆன
குங்குமச் 'சோலைசூழும் 'கொச்சி'யின் வந்து சேர்ந்தார்''
[ச. யா. ப. - 150]

''திளர்மணிப் புரவி யூர்ந்து கேரள தேயம் தன்னில்
வளர்நெடுந் தூரம் நீங்கி வளந்தரு 'கொல்லம்' சேர்ந்தார்''
[ச. யா. ப. 151]

''சாகரத் தோரம் சென்று 'விளிஞ்சத்தில்'மேவினாரே(152)
..........................................................வைகை
நதிவளம் பெருகும் 'பாண்டி நாட்டில் வந்துற்றா ரன்றே
வாது [ச. யா. ப. - 153]

''திலைதரும் 'பாண்டி தேயத்தெல்கையில்' நிறைந்தவாறு''
[ச. யா. ப. - 154]

''.......................................................தானே யத்தில்
கொண்டுவாழ் தலைவனாம் 'கோப்பாண்டியன்' முன்புகூற
விண்டுகூற அரிதாய் மாழ்கி வெகுவலியில்
கலங்கினானே'' [ச. யா. ப. - 155]

''வாறெலாம் 'பவுத்திர மாணிக்கப் பதிவந்து வெம்போர்
வீறெலாம் பொருந்து 'மாறன் விக்ரமன்' செவியில்
விண்டான்'' [ச. யா. ப. - 157]

''திருந்து முன்னவனாம் 'கூடல்' உறை'திருப்பாண்டியன்'
பால் வருந்தி வந்துரைத்தான்''………… [ச. யா. ப. 156]

''பவுத்திர மாணிக்கப் பட்டின'த்தின் மேற்காக உற்ற
நவத்துறு 'புன்னைக்காயலு'க்கு அப்புறம் நவிலோர்காதம்
அவற்றினில் இருப்ப தான வருந்தலைத் தானைண
யத்தில்'' (ச. யா. ப. 159)

………………தலைத்தாணை யத்தின் மேற்கொரு காதத்
தூரம் மொய்த்து வந்திடும்போ தங்கே எதிர்ந்தனர்
முனைகொள் வீரர்'' (ச. யா. ப. 160)

"இத்திசை யினுக்குக்கீழ்ப்பால் இயன்ற முக்காதத் தப்பால்
கத்தலை கடலோ ரத்தில் கதிர்மணி மாட கூடம்
மைத்த விண்ணொளிர் 'பவுத்திர மாணிக்க நகரின் மீது
பத்திகொள் குடிரோர் வேந்தன் பாண்டியன் உறைகின்
றானே'' (ச. யா. ப. 177)

செய்யது இப்றாஹீம் ஒலியுல்லாஹ் அவர்களின் வருகையை அறிந்த எல்லைக் காவலர்கள் விரைந்துசென்று அப்பகுதி ஆளுனனான கோப்பாண்டியன் என்பவனிடம் முறையிட்டனர். அவன் உடனே விரைந்து சென்று தம் தமையனும், மதுரையில் இருந்து ஆட்சி நடத்திய மன்னனுமான திருப்பாண்டியன் என்பவனிடம் விபரம் கூறினான். அது கேட்டு மன்னன்பயமுற்று தீய சகுனம் எனக் கருதி மதுரையில் இருப்பது நல்லது அல்ல என்று எண்ணி திருப்பதிக்குச் சென்று தஞ்சம் புகுந்தான். இது கண்ட கோப் பாண்டியன் தன்து மற்றொரு சகோதரனும் பவித்திர மாணிக்கப்பட்டினத்தை ஆட்சி செய்து வந்தவனுமான விக்ரம பாண்டியன் இடம்சென்று முறையிட்டனர். அவன் சினங் கொண்டு வெகுண்டு எழுந்தான். அவன் வெகுண்டு எழுந்ததைக் கண்டதும்பவித்திர மாணிக்கப்பட்டினத்துக்கு மேற்காக அமைந்திருந்தப் புன்னைக்காயல் என்னும் ஊருக்கு அப்பாலே ஒரு காத தூரத்தில் நிறுத்தப்பட்டிருந்த பாண்டிய மன்னனின் காவல் படைகள் கோபமுற்று



போருக்கு எழுந்தனர். மாறன் விக்ரம பாண்டியன் பவித்திர மாணிக்கப்பட்டினத்தில் தான் தங்கி வாழ்கிறான் என்பதை அறிந்து செய்யிது இப்றாஹீம் வலியுல்லாஹ் அவர்கள் பவித்திர மாணிக்கம் நோக்கி படையோடுபுறப் பட்டனர். இவ்வாறு தீன் விளக்கம் என்னும் காப்பியம் விளக்கிகூறுகிறது. இவற்றினை வைத்து நோக்கும் போது கீழ்வருவன புலனாகும். அவ்வாறானால் செய்யிது இப்ராஹீம் வலியுல்லாஹ் வந்தடைந்த பாண்டிய நாட்டின் எல்லை எது? அவர்கள் படையெடுத்து வந்து தங்கிய பவித்திர மாணிக்கப்பட்டினம் எந்த ஊர்? பவித்திர மாணிக்கப்பட்டினத்திற்கு மேற்கே புன்னைக்காயல் என்பதனால் காயல்பட்டினம் தான் பவித்திர மாணிக்கப் பட்டினம் என்பது புலனாகிறது. வலியுல்லாஹ் அவர்கள் வந்தடைந்த எல்லை குலசேகர பட்டினமாக இருக்கலாம். எம். ஆர். எம். அப்துற்றஹீம் அவர்களால் எழுதப்பட்ட இஸ்லாமியகலைக்களஞ்சியத்தில்செய்யிதுஇப்ராஹீம் ஷஹிது வலி அவர்கள் கண்ணனூரிலிருந்து காயல்பட்டினம் வந்து தங்கிய நடப்பு கீழ்க்கண்ட விதமாக எழுதப்பட்டிருக்கிறது.

மூத்த சகோதரர்களான திருப்பாண்டினும், விக்கிரம பாண்டியனும் ஒன்று சேர்ந்து தம் இளவல் குலசேகரப் பாண்டியனுக்கு தொல்லைக் கொடுக்க அவன் கண்ணனூர் வந்து செய்யிது இப்ராஹீம் வலி அவர்களின் உதவியை வேண்டினான். சகோதரர்களிடையே ஏற்பட்ட தகராறைத் தீர்த்து வைக்கும் நோக்கத்துடன் குலசேகரப் பட்டணத்திற்கு அண்மையிலுள்ள காயல்பட்டணத்தில் வந்து தங்கினார்கள். இவர்கள் முஹிய்யத்தீன், இம்யான் இருவரை காயல்பட்டணத்திலிருந்து திருப்பாண்டியனிடம் தூது அனுப்பினர். திருப்பாண்டியன் தன் நாட்டில் இஸ்லாமிய பிரச்சாரம் செய்ய அனுமதியளித்து விட்டு தன் குடும்பத்தினருடன் திருப்பதி சென்று விட்டான். தம்முடன் வந்த ஜித்தாவின் முன்னாள் ஆளுநர் சிக்கந்தருக்கு இவர்கள் பட்டம் சூட்டியதுடன் திருப்பாண்டியன் அபகரித்த பகுதிகளை எல்லாம் குலசேகரப்பாண்டியனுக்கு இவர்கள் அளித்தனர்.

பின்னர் விக்ரம பாண்டியனுக்கு இவர்கள் தூது அனுப்பி குலசேகரபாண்டியனுக்கு உரிய பங்கினை அவனுக்குக் கொடுத்து வருமாறு கூற அவன் போருக்கெழுந்தான். தாம் ஒரு மார்க்கப் பிரச்சாரகரேயன்றி வேறில்லை என்று இவர்கள் எவ்வளவோ கூறியும் கேளாது அவன் போர் தொடுத்தான். ஒருவெள்ளிக்கிழமை முஸ்லிம்கள் ஜும்ஆ தொழுகையில் ஈடுபட்டிருக்கும் பொழுது பாண்டியர் படை தாக்குதல் துவங்கியது. போரில் இவர்களின் மகன் செய்யிது அபூதாஹிர் இந்திரப் பாண்டியனைக் கொன்றார். முஸ்லிம் படையணியால் இம்யான் கொல்லப்பட்டான். பத்தாம் நாள் விக்கிரம பாண்டியனே போர்களம் வந்தான். செய்யிது இப்றாஹீம் ஒலி அவர்கள் விடுத்த அம்பொன்று பல்லாக்கிலிருந்த அவனுடைய உயிரைக் குடித்தது. அரசன் மாண்ட செய்தியை அறிந்து பாண்டியர் படை சிதறுண்டது. செய்யிது இப்ராஹீம் அவர்கள் நல்லாட்சிப் புரியத் துவங்கினார்கள். இப்பொழுது இந்தியா வந்து மூன்று ஆண்டுகளாகிவிட்டதால் அவர்களுடன்வந்த ஆயிரம் பேர், அரபுநாடு திரும்பினர். இவ்வாறுஎம். ஆர்.எம்.அப்துற்றஹீம்அவர்கள் எழுதுகிறார்கள். இவர்களின் கூற்றுப்படி செய்யிது இப்றாஹீம் வலியுல்லாஹ் தமிழகத்தில் முதலில் தங்கிய இடம் காயல் பட்டினம் என்ற பவித்திரமாணிக்கப்பட்டினம் என்பது நன்கு விளங்குகிறது. பவித்திர மாணிக்கப்பட்டினத்தின் மேற்கு எல்லை புன்னைக்காயல் என்று தீன் விளக்கப் புராணத்தின் ஆசிரியர்கூறுவதும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

அன்றைய பாண்டிய நாடு, மதுரையைத் தனிப் பெருந் தலைநகராகக் கொண்டு, பாண்டிய நாடு எல்லை முழுமையும் தன்னாட்சியின் கீழ்தான் வைத்து ஆண்டது எனினும் தன்னாட்சிக்கு உட்பட்ட பாண்டிய நாட்டைப் பல கோட்டங்களாக மண்டலங்களாகப் பிரித்து, அப்பிரிவுகட்கு ஒரு சிறு தலைநகரையும் (கோட்டாச்சியம்) ஏற்படுத்தி அந்நகரில் அக் கோட்டாச்சியர் ஆகத் (ஆளுநகராக) தம் தாயத்தாரை, சிற்றரசர் அந்தஸ்த்தில் வைத்து



அப்பகுதிக்கு உட்பட்ட ஆட்சியைக் கவனித்து வரச்செய்து இருந்தது என்பது வரலாற்றிஞர்களின் ஆய்வுரை. அவ்வாறு அமைந்த தென் மண்டலக் கோட்டம் ஒன்றின் தலைநகராய் கோட்டாச்சி நகராய் விளங்கியதே இந்த பவித்திர மாணிக்கப்பட்டினம் என்பதும், அப்பட்டினம் கடற்கரை நகர் என்பதும் அதுவே இன்றைய காயல் பட்டினம் என்பதும் உணரலாம். இந்த பவித்திர மாணிக்கப்பட்டினத்தின் கோட்டாச்சி எல்லையின் வரையறை யாது என்பதையும் அறிவது அவசியம்.

இப் பவித்திர மாணிக்கப்பட்டினம், காயல்பட்டினத்தைத் தலைப் பீடமாக (ஆட்சிப்பீடம்) கொண்டது இதன் எல்லை குலசேகரப்பட்டணம் முதல் வைப்பாறுவரை பரவியிருக்கலாமென உணர முடிகிறது. சிலர் இதன்எல்லைஏர்வாடிவரைபரவியிருந்ததுஎன்றுகருதுகிறார்கள். ''அக்காலத்தில் பாண்டியநாடுபல பகுதிகளாககோட்டங்களாகப்பிரிக்கப்பட்டு ஆட்சியாளரின் சகோதரர்கள், தாயத்தார்களால் ஆட்சிசெய்யப்பட்டுவந்தன. சடையவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன்விக்ரமபாண்டியன், மாறவர்மன்வீரப்பாண்டியன், கோப்பாண்டியன், அதிவீரப்பாண்டியன், கரிகாலப் பாண்டியன், பராக்கிராம பாண்டியன், ஜெய சூரப்பாண்டியன், சவுந்திரப்பாண்டியன் போன்றவர்கள் கோட்ட ஆளுநர்கள் பதவியில் இருந்து அவ்வப்பகுதிகளை ஆண்டுள்ளனர்'' என்று டாக்டர் மா. இராசமாணிக்கனார் தம்முடைய தமிழக வரலாறு என்னும் நூலில் கூறுகிறார்.

வரலாற்று நூல்கள், இலக்கியங்கள் வாயிலாக காயல் பட்டினம் தான் பவித்திர மாணிக்கப்பட்டினம் என்பதை அறிந்தோம். இனி காயல்பட்டினம் என்பது பவித்திர மாணிக்கப்பட்டினம் என்பதை காயல்பட்டினத்திலுள்ள கல்வெட்டு சான்றுகளைக் கொண்டு ஆய்வோமாக.

1. காயல்பட்டினம் கொடிமரப்பள்ளி (சிறுநெயினாற் பள்ளி)

கல்வெட்டு கூறும் செய்தி :

இக் கல்வெட்டு கொற்கை, பராக்ரம மாறன் பாண்டிய மன்னனால் வெட்டப்பட்டது என்பது தெளிவாகின்றது. இக் கல்வெட்டு இன்றைய காயல்பட்டினத்தை மிகவும் தெளிவாக, விளக்குவதனை உணரலாம். காயல்பட்டினத்தை தென்காயல் நாடு எனவும், காயற்பட்டினம் எனவும், பவுத்திர மாணிக்கப்பட்டினம் எனவும், தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறது. அக்காலத்தில் காயல்பட்டினம், பவுத்திர மாணிக்கப்பட்டினம் என்னும் பெயரோடு, பாண்டிய மன்னரின் அரசுக்கோட்டமாகத் திகழ்ந்துள்ளது என்ற உண்மை இக் கல்வெட்டு மூலம் உணரப்படுகிறது. இக் கல்வெட்டு, பவித்திர மாணிக்கப்பட்டினத்து (காயல்பட்டினத்து) ''சோனகப்பள்ளிக்கு'' (கொடிமர சிறு நெயினாற் பள்ளி) நிலமும் மானியமும் மேற்படி பாண்டியனால் வழங்கப்பட்ட கொடையை விளக்குவதாக உள்ளது.

II. கறுப்புடையார்ப் பள்ளிக் கல்வெட்டு [கல்வெட்டு எண் : 1]

திரிபு வனசக்கரவர்தியான குமாரப் பாண்டியன் என்பவனால் (வீரபாண்டியன்) பவுத்திர மாணிக்கப்பட்டினமான காகிறூர் என்னும் காயல்பட்டினத்திலுள்ள கறுப்புடையார்ப் பள்ளிக்கு, பள்ளி பரிபாலனத்துக்காக வழங்கப்பட்ட கொடையை இக்கல்வெட்டு கூறுகிறது.

காயல்பட்டினத்தை இக்கல்வெட்டு காயல் எனவும் காகிறூர் எனவும் பவுத்திர மாணிக்கப்பட்டினம் எனவும் பவித்திர மாணிக்க நகறூர் எனவும் தெளிவாக விளக்கி உள்ளதை அறிய முடிகிறது. இப்பள்ளி காயல்பட்டினத்திலுள்ள மிகவும் பழமையான பள்ளி வாயில்களின் ஒன்று இப்பள்ளி சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டிருக்கலாம் எனக் கூறப்படுகிறது.



III. கறுப்புடையார்ப் பள்ளிக் கல்வெட்டு: [கல்வெட்டு எண்: 2]

இக் கல்வெட்டு காயல்பட்டினம் கடற்கரைப் பள்ளிக்கு நிலமும், மானியமும் வழங்கிய செய்தியை விளக்குகிறது. இக் கல்வெட்டு மூலம் பவுத்திர மாணிக்கப்பட்டினம் என்பது காயல் துறை என்ற பெயராலும், அந்தப் பவித்திர மாணிக்கப்பட்டினம் வீரபாண்டியன்பட்டினத்து கரை அருகில் மேற்குஎல்லையாக அமைந்துள்ளது எனவும் கூறுகின்றது, கறுப்புடையார் பள்ளியை ஒட்டி முஹியித்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளி அமைந்திருக்கிறது. இதற்கு அண்மையில் கடற்கரைப் பள்ளியிருந்தது கடற்கரைப்பள்ளி ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது என்பது அங்கு பணிபுரிந்த இமாம் செய்யிது அஹ்மது வலியுல்லாஹ் அவர்களின் மீஸான் கற்கள் மூலம் அறிய முடிகிறது.

IV. காயல்பட்டினம் யூசுப் ஒலியுல்லாஹ் தர்கா கல்வெட்டு :

இக் கல்வெட்டு, இந்த யூசுப் ஒலியுல்லாஹ் பள்ளிக்கு (தர்காவுக்கு) நிலமும், மானியமும் வழங்கிய விபரத்தைக் கூறுகிறது. இக் கல்வெட்டு ஜெயசூரபாண்டியன் என்னும் வீரபாண்டிய மன்னனால் வெட்டப்பட்டது எனவும் இப்பள்ளியை விரிவுபடுத்துவதற்காக செலவுத் தொகையும் இறையிலி நிலமும் (வரியில்லா நிலம்) வழங்கப்பட்டது எனவும் தெரிய வருகிறது.

இக் கல்வெட்டும் காயல்பட்டினத்தை ''பவுத்திர மாணிக்க வூர்'' எனவும் காயல் துறை எனவும் சுட்டிக் காட்டுகிறது.

## V. காட்டு மகுதூம் ஒலியுல்லாஹ் [தர்ஹா] பள்ளி கல்வெட்டு : [கல்வெட்டு எண் : 2]

இக் கல்வெட்டும் பாண்டிய மன்னனால் (வீரபாண்டியன்) வழங்கப்பட்டதாகும். இக்கல்வெட்டில் கொற்கை, வீரபாண்டியன்பட்டினம், பவுத்திர மாணிக்கப்பட்டினம், காயல் நகர், முக்காணி, போன்ற ஊரின் பெயர்கள் தெளிவாக இடம் பெற்றுள்ளன.

இக்கல்வெட்டு' பவுத்திர மாணிக்க நல்லூரில் காயல் துறை எனவும், இக் காயல் துறை வீரபாண்டிய நல்லூர் (வீரபாண்டியன்பட்டினம்) அருகில் உள்ளது எனவும், பவுத்திரமாணிக்கப்பட்டினமே காயல் நகராக இருந்தது என்பதனையும் தெளிவாக உணர்த்துகிறது.

இப் பள்ளிக்கு வழங்கப்பட்ட இறையிலி நிலத்தின் மிகப் பரந்த எல்லையையும் அவற்றில் உட்பட்ட நஞ்சை, புஞ்சை நிலங்களின் விபரங்களையும் தெளிவாகக்கூறியுள்ளது

## VI. சிவன் கோயில் கல்வெட்டு :

காயல்பட்டினத்தில் உள்ள பழமை வாய்ந்த சிவன் கோயிலில் காணப்பட்ட கல்வெட்டும் காயல்பட்டினத்தை "தென் காயல்" எனக் குறிப்பிடுவதுடன் "பவ்த்திர மாணிக்கமான இவ்வூர்" எனவும் நிறுவியுள்ளது. இக்கல்வெட்டும் திரிபுவன சக்கரவர்த்தியான பாண்டிய மன்னனால் வெட்டப்பட்டுள்ளது.

இக் கோயிலுக்கு மானியமாக நெல்லும், பொருளும் வழங்கப்பட்ட செய்தியையும் கோயில் திருப்பணிகள் செவ்வனே நடைபெற பண்டங்கள், வழங்கப்பட்ட செய்தியையும் இக்கல்வெட்டு மூலம் உணரப்படுகிறது.



## காயல்பட்டினம் பெரியகுத்பாப்பள்ளி மையவாடி நடுகல் குறிப்பு

இங்குள்ள மையவாடியில் உள்ள ஒரு பெரியாரின் நடுகல்லில் (மிஸான்கல்) கீழ்கண்ட விதமாக எழுதப்பட்டிருக்கின்றது. பவித்திர மாணிக்கப்பட்டினமாம் வகுதைத் துறை காயலின் அதிபதியான நிலக்கிழவரின் மறைவிடம் கொல்லம்என்று பொறிக்கப்பட்டிருக்கின்றது. மற்ற எழுத்துகள் வாசிக்க முடியாவண்ணம் அழிந்துவிட்டன.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள காயல்பட்டினத்திலுள்ள கல்வெட்டுகள் எல்லாம் காயல்பட்டினத்தை பவித்திர மாணிக்கப்பட்டினம் மென்றும், வகுதையென்றும், காயல்துறை யென்றும், தென்காயல் என்றும், தெள்ளத் தெளிவாகசுட்டிக்காட்டுகின்றன. காயல்பட்டினத்திலுள்ள பழமையான கறுப்புடையார் பள்ளியிலுள்ள கல்வெட்டு ஒன்று வீரபாண்டியன்பட்டினத்தின் கடல்கரை மணல் மேட்டுக்கு மேற்கு எல்லையாக பவித்திரமாணிக்கப் பட்டினம் அமைந்துள்ளது எனக்குறிப்பிடுகிறது. தீன் காவியத்திலுள்ள தீன்விளக்கப்பாடல்களில் ஒன்றில் பவித்திர மாணிக்கப்பட்டினத்திற்கும் மேற்கு எல்லையாக புன்னைக்காயல் அமைந்திருக்கிறது என்று கூறுகிறது. வீரபாண்டியன்பட்டினத்திற்கும், புன்னைக்காயலுக்கும் இடையில் இருப்பது காயல்பட்டினம். அன்றியும் தீன் விளக்கப்பாடலும், கற்புடையார் கல்வெட்டும் கூறும் எல்லைகளும்காயல்பட்டினத்தையே குறிக்கின்றன. எனவே காயல்பட்டினம் தான் பவித்திர மாணிக்கப்பட்டினம் என்பது உறுதி.

# காயலின் கல்வெட்டுகள்

ஒரு நாட்டின் வரலாற்றை அறிய அந்நாட்டிலுள்ள கல்வெட்டுகளின் குறிப்புகள் மிகவும் இன்றியமையாதவை. பழங்காலத்திலுள்ள கோயில்கள், பள்ளிவாயில்கள், ஆலயங்கள், மன்னர்களின் அரண்மனைகள் போன்றவை களிலுள்ள கல்வெட்டு குறிப்புகளும், பண்டைகாலத்தில் மறைந்தவர்களின் கல்லறைகற்களிலுள்ள கல்வெட்டு (நடுகற்கள்) குறிப்புகளும், அன்றைய ஆட்சிமுறை, ஆட்சிக்குட்பட்ட இடங்கள், அரசியல் நிகழ்ச்சிகள், நடத்த யுத்தங்கள். அக்காலத்தில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகள், முன் காலத்தில் வாழ்ந்த மகான்களின் வரலாற்றுக் குறிப்புகள் மற்றும் பல முக்கிய குறிப்புகளை அறிய உதவுவன.

---

கல்வெட்டுகளை ஆய்ந்து, படித்து, படியெடுத்துஎழுதியது கவிஞர் எஸ். எம். அபுல்பரகாத், M.A.B. Ed
(ஆசிரியர் - முஹியித்தீன் மெட்ரீக்குலேசன் மேல்நிலைப் பள்ளி - காயல்பட்டினம்)
ஆய்வுக்காலம் - டிசம்பர் 1980.
கல்வெட்டுகளைக்கண்டறிந்து காட்டியவர்கள், ஆய்வதற்கு உதவியவர்கள் ஜனாப். மௌலவி அல்ஹாஜ் கத்திபு S. N. சாகிப்தம்பி ஆலிம் மஹ்லரி முப்தி முதல்வர் மஹ்லரு அரபிக்கல்லூரி, ஜனாப். மௌலவி அல்ஹாஜ் அல்ஹாபிழ் S. M. சேக் அப்துல்காதிர் ஆலிம்மிஸ்பாஹி, கவிஞர் சதக்துல்லா ஆலிம் ஜனாப் K.M.K. காதர் சுலைமான், ஜனாப். அல்ஹாஜ் H. M. B. புகாரி, ஜனாப். P. S, A. பல்லாக்கு லெப்பை B Sc, ஜனாப் பாளையம் இப்றாஹிம், ஜனாப். M. K. புகாரி S. N. சேக், B.Sc., ஆகியோர். கல்வெட்டுகளை ஆய்யும் போது பணிவிடை செய்தவர்கள் - முஹியித்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளி மாணவர்கள். இக்கல்வெட்டுகளில் சில தொல்பொருள் ஆய்வாளர்களின் அறிக்கைகளில் இடம்பெற்றுள்ளன. (Annual Report on Indian Epigraphy)



தென்னகத்தில் இஸ்லாமியர்களின் வரலாறு கி. பி. ஏழாம் நூற்றாண்டுமுதல் தொடங்குகிறது. ஏழாம்நூற்றாண்டு முதல் அரபிய முஸ்லிம்கள் சமயப்பணிக்காகவும், வியாபாரத்திற்காகவும்,சேர, சோழ, பாண்டியநாடுகளுக்கு வந்தார்கள் என்பதை சில கல்வெட்டுக் குறிப்புகள் வாயிலாகவும், செப்பேடுகள் மூலமாகவும், அறிய முடிகிறது. ஒன்பதாம் நூற்றாண்டிலும், பதின்மூன்றாம் நூற்றாண்டிலும் அரபிய முஸ்லிம்கள் காயல்பட்டினத்தில் குடியேறியதைச் செப்பேடுகள் மூலமாகவும், கல்வெட்டு மூலமாகவும், வரலாற்று நூல்கள் வாயிலாகவும் அறிகிறோம்.

காயல்பட்டினத்தில் பழமையான கல்வெட்டுகளும் நடுக்கற்களும் (மீஸான் கற்களும்) நிறைய இருந்துள்ளன. இன்றும் சில இருக்கின்றன. 1948—49, 1949—50 ஆகிய ஆண்டுகளில் தமிழக தொல் பொருள் ஆய்வு கழகம் சில குறிப்பிட்ட (நடுகற்களையும்) மீஸான் கற்களையும், கி. பி. 1300ல் சுல்தான் ஜமாலுத்தீன் அவர்களால் புதுப்பித்து கட்ட ஆரம்பிக்கப்பட்டு, அவர்களின் மகனால் கி. பி. 1337ல் கட்டிமுடிக்கப்பட்ட பெரியஜீம்ஆ பள்ளியை பற்றிய கல்வெட்டு குறிப்புகளையும் முறைப்படி ஆய்ந்து எடுத்துள்ளார்கள். 1964ம் ஆண்டு இத்தொல்பொருள் ஆய்வு கழகம் காயல்பட்டினம் காட்டு மகுதூம் பள்ளியில் கி. பி. 1387ல் செதுக்கப்பட்ட ஒரு கல்வெட்டை ஆய்ந்து குறித்துள்ளார்கள். 1975ம் ஆண்டுக்குப் பிறகு சில தனிப்பட்ட ஆய்வாளர்கள் காயல்பட்டினத்திலுள்ள சில முக்கிய கல்வெட்டுகளையும்,மீஸான் கற்களையும்ஆய்ந்துள்ளார்கள். இத்தகையஆய்வுக்குமதுரை தொல்லியல் நிபுணர்கள் உதவி உள்ளார்கள். இந்நூலில், அரசாங்க குறிப்பேடுகளில்வந்துள்ள கல்வெட்டுகளும், தனியார் ஆய்வின் மூலம் எடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளும் இடம் பெறுகின்றன.

அண்மையில் காயல்பட்டினத்தில் தொல்லியல் துறை அலுவலர்கள் உதவியோடு, மேற்கொண்ட தொல்லியல் ஆய்வன் போது பல பழமையான பொருட்கள் கண்டு எடுக்கப்பட்டன. இந்த பேராய்விற்கு காயல்பட்டினம் காயிதே மில்லத் இளைஞர் சமூக அமைப்பும், பெரிய ஜும்ஆ பள்ளி ஜமாத்தைச் சேர்ந்த பெரியவர்களும் ஏற்பாடு செய்து இருந்தார்கள். இந்த ஆய்வு காயல்படடினம் முஹியித்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளி விளையாட்டு மைதானத்திலிருந்து தொடங்கி கடலோரமாகக் காயல்பட்டினத்தின் வடஎல்லை முடிவுவரை (தாமிரபரணி ஆறு கடலில் கலக்கும் இடம்வரை) நடந்தது. இக்குழுவினர் புன்னைக்காயலில் சில பகுதிகளையும் ஆய்ந்தனர். இந்த ஆய்வில் தொல் பொருள்கழகஆய்வாளர் இருவர், சதக்கத்துல்லா அப்பாகல்லூரிபேராசிரியர், ஜனாப் நாஸர், காயல்பட்டினத்திலுள்ள எல்கே மேல்நிலைப்பள்ளி, சென்ட்ரல் மேல்நிலைப்பள்ளி, முஹியித்தீன் மேல்நிலைப் பள்ளி மாணவர்களில் சிலரும், காயிதே மில்லத் சங்க வாலிபர்களின் சிலரும் பங்கு எடுத்தனர்.

இந்தத் தொல்லியல் ஆய்வின் போது பல தொன்மையான மண்பாண்ட ஓடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றுள் சுமார் 2000 ஆண்டுகளுக்கு முந்திய ரோமானிய ரவுலட் (Rouletted wares) பானைஓடுகளும், சங்குவளையல் துண்டுகளும் கிடைத்தன. கி.பி 1000 முதல் கி. பி. 1500 வரையிலான ஆண்டுகளுக்கு உட்பட்ட சீனத்து களிமண்ணால் செய்யப்பட்ட பீங்கான்ஒடுகளும், மண் குமிழ்களும் சிலகடினமான கண்ணாடி துண்டுகளும், குதிரைலாடங்களும் கிடைத்தன. 2000 ஆண்டுகளுக்கு முந்திய சுடு மண்ணால் செய்யப்பட்ட கருப்பு மற்றும் சிகப்பு நிற கோலிக்காய்களும் வட்டாக்கு சில்லுகளும் இதில் அடங்கும்.





**காயல்பட்டினத்தில் கண்டெடுக்கப்பட்ட
இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய
ரோமானியரவுலட்டு பானை ஓடுகள் (Rouletted wares)
சைனாபீங்கான் துண்டுகள்**

இத்தகைய அரிய கண்டுபிடிப்புகள் காயல்பட்டினம் 2000 ஆண்டுகளுக்கு முந்திய ஊர் என்பதை உணர்த்துகின்றன. சங்ககால பாண்டியர்களின் துறைமுகப் பட்டினமாகக் காயல்பட்டினம் திகழ்ந்தது என்பதற்கு, ரோமானிய ரவுலட்டுகள், மண்பாண்ட துண்டுகள் மூலம் உறுதியாகின்றது. பாண்டிய நாட்டின் தலைநகர் கபாடபுரம் தாமிரபரணி ஆறு (பொருனை ஆறு) கடலோடு கலக்கும் இடத்தில் இருந்தது என்று தமிழ் இலக்கிய நூல்கள் கூறுவதும் ஈண்டு கவனிக்கத்தக்கது.

பழையகாயலில் நாயக்கர் கால கல்வெட்டுகள் தான் கிடைத்து இருக்கின்றனவே அன்றி வேறு எந்த மன்னனுடைய கல்வெட்டுகளும் கிடைக்கவில்லை. சில உடைந்த சீன பீங்கான் துண்டுகளும் கிடைத்துள்ளன. ஆனால் ரோமானிய ரவுலட்டுகள் போன்றவை கிடைக்கவில்லை. காயல்பட்டினத்தில் ரோமானியர்களோடு தமிழர்கள்

கொண்ட தொடர்பை விளக்கும் வகையில் இங்கு கிடைத்த ரோமானிய பானை ஓடுகள் சாட்சி பகர்கின்றன. புன்னைக் காயலில் போர்த்துகீசியரின் வருகைக்குப் பின்னுள்ள (கி. பி. 1532 க்கு பின்) குறிப்புகள்தான் கிடைத்துள்ளன. [காண்க : "கோநகர் கொற்கை" அ. இராகவன்].

முற்கால பாண்டியர் காலத்திலும், முற்கால பாண்டியர்களுக்குப் பின் சோழர்கள் ஆட்சி காலத்திலும் பிற்கால பாண்டியர் காலத்திலும், பாண்டிய நாட்டில் முஸ்லிம் ஆட்சி நடந்த போதும் இவ்வூர் சிறப்புற்று திகழ்ந்தமைக்கு இங்குக்கிடைத்தரோமானிய ரவுலட்டர்களும், வரையறுத்த சங்குகளும், அரபிய சீன பீங்கான்களின் துண்டுகளும், சுடு மண்ணாலான கிணற்று உறைகளும் இங்குள்ள தொன்மையான பள்ளி வாயல்களும் பழமையான நடுகற்களும் சிறந்த சாட்சிகளாகக் காட்சியளிக்கின்றன. பிற்காலப் பாண்டியர்களுக்குப் பின்னர் திருவிதாங்கூர் மன்னராகிய உதயமார்த்தாண்டன் வசம் இம்மாவட்டத்தின் சில பகுதிகள் இருந்திருக்கின்றன என்பதற்குகாயல்பட்டினத்திலுள்ள காட்டு மகுதூம் பள்ளி கல்வெட்டுகளும், பெரிய ஜும்ஆ பள்ளி மையவாடியிலுள்ள நடுகற்களின் குறிப்புகளும் தக்க சான்றுகளாகும். காட்டு மகுதூம் பள்ளியை உதய மார்த்தாண்ட பெரும்பள்ளியென்றும், ஊரின் நீதிபதியை (காழியை) உதய மார்த்தாண்ட காழியார் என்றும் அழைத்தனர், என்பதை கல்வெட்டு மூலம் அறிகிறோம். பெரிய ஜும்ஆ பள்ளி மையவாடியில் லெப்பை அப்பா வலிமார்களின் அடக்க தலத்திற்கு வடக்காக அமைந்துள்ள கல்லறை நடுகற்களில் உதய மார்த்தாண்ட காழியார், அப்துல் கப்பார் நயினாஆன முடிகொண்ட செண்பகராம முதலியார், செய்யிது அஹ்மது ஆன வீரபாண்டிய முதலியார் ஜமால் ஆன பராக்கிர பாண்டிய முதலியார் என்று பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ள மீஸான் கற்கள் இருக்கின்றன. இவர்களின் நடுகற்களில் (மீஸான் கற்களில்) பல்லக்கு, வெண்கொற்ற கொடை சாமரம் போன்றவை செதுக்கப்பட்டுள்ளன, மேற்படி குறிக்கப்பட்டவர்கள் இப்பகுதியில் மன்னர்களாக இருந்தனர் என்பது விளங்குகின்றது.





**மன்னர்களின் மீஸான் கற்கள்**
(பெரிய ஜும்ஆ பள்ளி மையவாடியின் லெப்பை அப்பா தர்ஹாவுக்கு வடக்கே அமைந்திருக்கின்றன)

**காயல்பட்டினம் கறுப்புடையார் பள்ளிக்கல்வெட்டு - பாகம் 1: வாயில்நிலைகீழ்ப்பால்கற்பதிவு-பிளவுபட்டது**

1. ஸ்வஸ்தி சிறீ கொமாற பன்மரான திரிபுவன ச-
2. க்கரவர்த்திகள் செம்பிணாடு கொண்டருளின சிறிவிர
3. பாண்டிய தெவற்கு யாண்டு.......யாவதின்எதிராமா
4. ண்டு இசப நாயிற்று யிருபத்.........டாந் தியதியும் தி-
5. ங்கணுரு (ம்) புனர்பூயத்து நாள் கண்டனன்
6. பவுத்ரி மாணிக்கம் பட்டினமான காகிற் றூர் கண் நாடா—
7. ழ்வானென் எட்டடி நெடுந்தெரு வீற்றுள்ள ஆரல் கத்—
8. தலை தரள தரங்கத்து சோனக வியாபாரி நாயகற்—
9. குகறுப்புடையார் சோனவப் பள்ளி......குடிக்குள் கோன்
10. செய்யுனென் ......................மேல்...குடிமை அந்த—
11. ராயம்........................கீழ்மேல் எல்கை காயல் கரைக்
12. குப் புள்ளிபுக்க நிலம்புன்செய் நன்செய்......மாவுக்குப்
13. பாசனம் பொக்கத்து வாயிலைக் கொடிப்புறத்து

14. வாழையுள்பட்டு ஆடி குறுவை அல்பிசி குறுவாய்க்கு மாத்தால்
15. ……………கலநெல்லு எதுாணி பதக்கு நெல்லும் அ—
16. ………………திரமும் இறுப்பதாக…………………வும்
17. ………………………………………சோனவப்
18. பள்ளிக் கிதுவகை வரி இல்தாத இருநிதிப் பிறக்கம் வரி—
19. சையிற் காட்டி……………………………
20. ………………………அஞ்சு வண்ணத் தொழுகை செய்—
21. துவரற்கா …………பவித்திர மாணிக்க நகரூர் காகி—
22. றூர் நாடென்ற பட்டினத்து ………………………கறுப்
23. புடையான் தலைவன்கணக்கன் புரந்து எளுதி காத்து அறப்
24. பகஞ்செய் யக்…………………………கடவரால்
25. ……………கு இறுக்கும் படிக்கு…………கல்வெட்டிக்
26. குடுத்தன் ……………………ஸ்வஸ்தி,ஸ்ரீ ……………….....



**கறுப்புடையார் பள்ளி**

[ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது]

கல்வெட்டுகளை பள்ளியின் மதிலோடு சாய்த்து வைக்கப்பட்டிருக்கிறன .



## கறுப்புடையார்ப்பள்ளிக்கல்வெட்டு
## பாகம் 1 (வாயிற்படி கீழ்த்தளம்)

கல்வெட்டு கூறும் செய்திகளும் கல்வெட்டினால் அறியப்படும் உண்மைகளும்:- பவித்ரமாணிக்கப்பட்டினமான காஹிறூரில் எட்டடி நெடுந்தெருவிலுள்ள புகழ்பெற்ற சோனக வியாபாரிகளின் தலைவருக்கு, சோனவப்பள்ள் பரிபாலனத்துக்காக இறையிலி (வரி இல்லாத) நிலம் வழங்கப்பட்ட விபரமும் காயல்நகரின் எல்லைக்குட்பட்ட நஞ்சை, புஞ்சை, கொடிகால்' வாழைத்தோட்டம் போன்றவை வழங்கப்பட்ட விபரமும்,இவைகள் வரிஇல்லாதநிலங்களாக ஐந்துவேளை தொழுகையும் முறைப்படி தவறாது நடத்தப்பட்டு வருவதற்காகவும் அவ்வூர் தலைவன் கணக்கன் (முத்தவல்லி) இந்நில புலங்களையும் சொத்துக்களையும் அறமுறை தவறாது காத்து வருவதற்காகவும் ஸ்வஸ்தி சிறீ கோமாறபன்மரான திரிபுனச்சக்கரவர்த்திகள் செம்பிநாடு கொண்டருளிய வீரபாண்டிய மன்னரால் சோனவப்பள்ளி என வழங்கப்பட்ட கறுப்புடையார் பள்ளிக்கு கொடுக்கப்பட்ட கொடையை இக்கல்வெட்டு விளக்குவதாக உள்ளது.

இக்கல்வெட்டில் 'சோனவப்பள்ளி, அஞ்சுவண்ணம், பவித்திரமாணிக்கப்பட்டினம், காயல்கரை, பவித்ரமாணிக்கநகரூர், காகிறூர், காயல்கரை என்பன இடம்பெற்றுள்ளன. இக்கல்வெட்டு, குறிப்பிடும் சோனவப்பள்ளி, அஞ்சு வண்ணம் என்பன பல்சந்தமாலையிலும் இடம் பெற்றுள்ளது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். அஞ்சு வண்ணத் தொழுகை என்று இக்கல்வெட்டு குறிப்பிடுவது ஐந்து வேளை தொழுகையைத்தான் என்பதும் அறிந்து இன்புறத்தக்க செய்தியாகும்.

இக்கல்வெட்டில் வருடம் அழிந்து விட்டதனால், இக்கல்வெட்டு குறிப்பிடும் வீரபாண்டிய மன்னன்எக்காலத்தில் ஆட்சி செய்தான் என்பதை பல கல்வெட்டுக்களையும் வைத்து ஆராயவேண்டியதாகயிருக்கிறது .வீரபாண்டியன் என்ற பெயரில் பல மன்னர்களும் ஆண்டுள்ளார்கள் என்ப

தும் குறிப்பிடதக்கது. மதுரை யுனிவர்சிட்டி பேராசிரியர் டாக்டர் கோ. விசயவேணுகோபால் அவர்களின் ''வீர பாண்டிய வட்டெழுத்துக்கல்வெட்டு'' என்னும் கட்டுரையின் மூலமும், அம்பாசமுத்திரத்திலுள்ள எரிச்சவுடையார் கோவிலில் காணப்படும் கல்வெட்டு மூலமும் இவ் வீரபாண்டியன் மன்னன் ஆண்டகாலம் கி.பி 946முதல் 966 வரை என்று யூகிக்கமுடிகிறது. இப்பழமையான பள்ளி சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட பள்ளி என்பது அறிய முடிகிறது.

**காயல்பட்டினம் கறுப்புடையார் பள்ளிக் கல்வெட்டு நிலைக்கதவம்-மேற்பால் கற்பதிவு—அடித்தளமான கல் (கடற்கரைப் பள்ளிக்குரிய கல்வெட்டு)**

1. பூவின் கிழத்தி மேவி குடைவீற்றிருப்ப மே-
2. தினி மாது நீதியில் புணர.................மடந்
3. தை சயப் புயத்தி ருப்ப மாக்கலை மடந்தை வாக்-
4. கினில் விளங்கத் திசையிரு நான்கு மிசை நிலா
5. வெறிப்ப மறைநெறி வளர மனுநெறி திகழ்தர
6. அறநெறிச் சமயங் களாறுந் தழைப்ப...............
7. ..............................................................
8. .............................................எழுகடல் பொ-
9. ழில் வெண்குடை நிழற்ற செங்கோல் நடப்ப
10. இருநேமி யளவு மொருநேமி யோங்க சேரலர்
11. பணிய மணியணி மாடகூடப் பாண்டி மண்டலங்
12. கொள் தென்கீழ்க் கடல்படர் காயலந் துறை கொல்கை
13. முத்துடை வீரபாண்டியன் பட்டித்துள் வெண்டிரள் மணல்
14. மேட்டு மேலெல்கை பவித்திர மாணிக்கம் நகர்க்குக் கா-
15. வலர் ஐய்வருக் கொருவர் திரிபுவனச் சக்ர-
16. வர்த்தி யாணையாக கடற்கரைப் பள்ளி இறையிலி ஆ-
17. கக் குடுக்கும் படிக்கு திருவுளத் தருளிய முத்துக் சலா
18. பம் வாணிகச் சோனகர் குழக்காய் நாட்டிப் படுத்து
19. ................................................... எல்லை கா-
20. ட்டியுங்..............வாறெல்லாம் ..............யாண்டு



21. ...............விளங்கு முயர்வா வெள்ளிநாள்
22. ......................கல்லில் வெட்டுவித்தேன்...........
23. த்துத்..............மாறனை..................ரா..........கண்
24. டனனே...........................................தென்
25. னா பராக்கி ரமனே .........................யு........ஒன்றே
26. ய்யாண்டு கொள்ள வுமாக.........துல்யம்.........எழு
27. த்து.......................................சுவஸ்தி ஸ்ரீ.



**கடற்கரைப் பள்ளி**

(ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னுள்ளது. ஹிஜ்ரி 430-ல் மரணமாகிய செய்யிது அஹ்மது வலியுல்லாஹ்வின் அடக்கவிடமும் இதுவே)

**கற்புடையார் பள்ளிக் கல்வெட்டு நிலைக்கதவம் (கடற்கரைப் பள்ளிக்குரிய கல்வெட்டு)**

இக்கல்வெட்டில் குறிப்பிட்டுள்ள ''பூவின்கிழத்தி'' என்று தொடங்கும் மன்னன் சடவர்மன் குலசேகர பாண்டியன் (கி. பி. 1190 முதல் 1224 வரை) என்று மதுரை தொல் பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக்கழக

ஆய்வாளர்களான திரு. சு. இராசகோபால் எம். ஏ., திரு. செ. போசு, எம்.ஏ., ஆகியோர் கூறுகிறார்கள். குடந்தை N. சேதுராமன் தம்முடைய (Imperial Pandays) நூலில் இம்மன்னனது மெய்க்கீர்த்தியாக 'பூவின் கிழத்தி' என்று குறிப் பிட்டுள்ளதும் ஈண்டு கவனிக்க தக்கது.

இக் கல்வெட்டு காயல்பட்டினம் கடற்கரைப் பள்ளிக்கு நிலமும் மானியமும் பாண்டிய மன்னனால் வழங்கிய செய்தியை விளக்கிறது, இக்கல் வெட்டு மூலம் பவித்திர மாணிக்கப்பட்டினம் என்பதுகாயல்துறை என்ற பெயராலும்அந்த பவித்திர மாணிக்கப் பட்டினம் முத்துடைய வீரபாண்டிய பட்டினத்து வெண்திரள்கடற்கரை மணல்மேட்டுக்குமேற்கு எல்லையாக அமைந்துள்ளது எனவும் கூறுகிறது. இக்கடற்கரைப் பள்ளி முத்து சலாபம் வாணிகம் செய்து வரும் சோனகர்களுக்காக உள்ள தென்ற உண்மையும் இக்கல் வெட்டு மூலம் அறிய முடிகிறது. இக் கல்வெட்டு கடற்கரைப் பள்ளிக்கு வரியில்லாத நிலமாக மன்னரால் வழங்கப் பட்டநிலஎல்லைகளையும்வரையறுத்துக்காட்டப்படுகிறது.

கடற்கரைப் பள்ளி ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பள்ளி என்பது அங்கு அடங்கியிருக்கும் ஒருபெரியாரின் கல் லறைக்கல் (மிசான் கல்) மூலம் அறிய முடிகிறது.

### கடற்கரைப் பள்ளி, கறுப்புடையார் பள்ளி பகுதிகளில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் மக்கள் வாழ்ந்ததற்கு அடையாளங்கள் :

கடற்கரைப் பள்ளிக்கும் கறுப்புடையார் பள்ளிக்கும் இடைப்பட்ட பகுதியில் ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் மக்கள் வாழ்ந்ததற்குதடயங்கள்நிறையஇருக்கின்றன. இந்தஇரண்டு பள்ளிகளுக்கும் இடையில் அமைந்துள்ள முஹியித்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளியில் ஏழு ஆண்டுகளுக்கு முன் ஒருகிணறுதோண்டியபோது சுடுமண் உறைகளால்ஆன ஒரு கிணறு இருந்தது. தொல்பொருள் ஆய்வுக்கழகத்தைச் சேர்ந்தஒர் ஆய்வாளர் அந்த உடைந்த சுடுமண்ணாலான



கிணற்று உறைகளைஆய்ந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தியதுஎனக்கூறினார். இப்பகுதியில்அண்மையில்தொல்லியல் பேராய்வு நடந்தபோது ரோமாணிய ரவுலட் பானைஒடுகளும், சீனத்து களிமண்ணால் செய்யப்பட்ட உடைந்த பீங்கான் துண்டுகளும், வளையறுத்த சங்குகளும் மற்றும் பழமையான பொருள்களும் கிடைத்தன. இப்பகுதிக்கு அருகிலுள்ள இரட்டைக்குளத்து பள்ளியில் (மீக்காயில் பள்ளி) சில ஆண்டுகளுக்கு முன் குளத்தை விரிவுபடுத்தியபோது போர் கருவிகளும், போர் வாள்களும் கிடைத்தன.



**ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய கிணறு**

(சுடுமண் கிணற்று உரைகள் உடைந்ததால் சிமெண்டினால் கட்டப்பட்டுள்ளது.)

[முஹியித்தீன் மெட்ரிக் குலேசன் மேல்நிலைப் பள்ளி வளாகத்தில்]

கடற்கரைப் பள்ளிக்கு அருகிலும், கறுப்புடையார் பள்ளிக்குபக்கத்திலும் பலபெரியநாதாக்களின் கல்லறைகள் (மீஸான் கற்கள்) இருக்கின்றன. கடற்கரைப் பள்ளியிருந்த இடம் இப்போது கோசுமறை பகுதி என அழைக்கப்படுகிறது. இக்கோசுமறை தர்ஹாவில் சுமார் 800 வருடங்

களுக்குமுன் அடங்கியுள்ள சிலரின் மீஸான்கற்கள் இருக்கின்றன பெயர்களும் மற்ற விபரங்களும் சரியாக அறிய முடியவில்லை. இப்பகுதியில் பூமியில் புதைந்து இருந்த ஒரு பழமையான மீஸான் கல்லிலுள்ள விபரம். இந்த இறை நேசச்செல்வரின் பெயர் செய்யிது அஹ்மது பின் ஷாஹிது இப்னு முஹம்மது அப்துல்கறீம் மதனி. இவர்கள் மரணமாகியது ஹிஜ்ரி 430 (கி. பி. 1038) துல்ஹஜ்ஜு மாதம் பிறை எட்டு. இவர்கள் கடற்கரைப்பள்ளியின் இமாம் (தொழுகை நடத்துபவர்) என்று அந்த நடுக்கல்லில் (மீஸான்கல்) தெளிவாக பொறிக்கப்பட்டிருக்கிறது. இக்கல்வெட்டுமூலம் இவர்கள் வாழ்ந்த காலம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் என்பதும் இப்பகுதியில் பள்ளிவாயல் கட்டி இறைவனை தொழுது மகிழ்வுடன் வாழ்ந்தார்கள் என்பதும் புலனாகின்றன. கறுப்புடையார் பள்ளியை ஒட்டி பல கல்லறைகள் இருக்கின்றன. தொல்பொருள் ஆய்வுக்கழகத்தின் அறிக்கையில் சில கல்லறைகளின் (மீஸான்களின்) குறிப்புகளும் இடம் பெற்றிருக்கின்றன.

**காயல்பட்டினம் காட்டுமகுதூம் (ஒலியுல்லாஹ்) பள்ளி, குளக்கரை கல்வெட்டுக்கள்**

**கல்வெட்டு எண் 2 :**

1 பூமருவிய திருமடந்தெயுடனெ புவிமடந்தெயும புயத்திருப்ப
2 நாமருவிய கலைமடந்தெயும் நலம்சிறக்கும் சயமடந்தெயும் கோ
3 ளார்ந்த ... ... ... வாளார்ந்த திறம் பெறுக ...
4 மூவகைத் தமிழும் முறமையின் விளங்க ... —
5 ... ... ... வேள்வியும்
6 செய்வினை யியற்ற... ... திரிபுவனமுழு தும் யுடையானென்
7 ... ... ... ... ...னா... ...ஒரு கு-
8 டைநிழற் கீழ்த் தலமுழுதும் ... ...பபச் ... ... ... வுள்ளத்



9 து ... ... ... மனுநெறி வளர்த்து... ...மன்னு
10 யிர்க்கெலாம் ... ...தாயெப்போல்...... வாசற்
11 புறத்து... ... ...நன்நிலப்... ...வாகை
12 ... ... ... ... உரிமையில் ... ... விர
13 பாண்டிய மன்னரும்... ... ... வெண்கண்
14 ... ...முடிசூட்டி ... ... யருளிய ... ... நதிதீரத்தில்
15 வ... ... கெல்... ... ள்ள ... ...கொற்கைக்கும்... ...
16 ... ... குத்துக்கல்லுக்கும் தெற்கும் ......தென்எல்லை
17 பாண்டியப் பட்டினத்து — — — குடிப்பற்றுக்கும் — —குளத்துக்கும்
18 ... ... —இன்னான் கெல்லை பவுத்ர மாணிக்க
19 நல்லூரில் காயற் துறையில் உடையார்— —விட்ட
20 தென்வாரி— — — குளத்துப் பரிம்புக்— — ஆ
21. ... ... ... ...
22. ... ...வீரபாண்டிய நல்லூர்க்(கு) ... கீழெல்
23. கை ...ஒன்பது ...யின்முந்திரியின்··· கடம
24. குளத்துக் கெதிராக ...ஆக இன்னான் கெல்லை
25. யும் படுத்து சோனவப் பிள்ளார்ப் பள்ளிக் ... முடை
26· ... ... ... ...உள்ள பற்று...குள்
27, ... ... ...ஆன் ... —குடி
28. — —நயினார்... காலுக்கு
29. முக்காணி நீங்கலாக பெருவழி ... இக்குளத்தில்—
30. நீர் நக்கலும்— புறமான— பற்றும்—துக்கும்
31. சிலாக்— புஞ்சை நஞ்சை— மாமர
32. வடைகள் — அளவுக்கு— முப்பதாவது பா
33 சன முதலுக்கெ... இவ்வோலை பிழபாடாக கொண்
34. டு கைய்யாண்டு — கல்லிலும் செம்பிலும் வெட்—
35. டி தாழ்வற நடத்திப்போதவு—துடையான்எழுத்து-உ
36. துல்யம்... தென்னவனெ... ம்—

## காட்டு மகுதூம் ஒலியுல்லாஹ் [தர்ஹா] பள்ளி கல்வெட்டு

## (குளக்கரை அருகில்) கல்வெட்டு எண் 2

''பூமருவிய திருமடந்தை'' என்று தொடங்கும் இக் கல்வெட்டு முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்காலத் தைச் சார்ந்தது. இந்த சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி காலம் கி. பி. 1216 முதல் 1244 வரை என்பதை குடந்தை N. சேதுராமனின் (Imperial Pandyas) நூல் மூலம் அறிய லாம், மதுரை தொல் பொருள் ஆய்வுக்கழகத்தைச் சேர்ந்த ஆய்வாளர்கள் திரு. சு. இராசகோபால், திரு. செ. போசு ஆகியோர்களும் இக்கல்வெட்டை ஆய்ந்து கி. பி. 1216 யிலிருந்து கி. பி, 1240 குள் வெட்டப்பட்டது என்று கூறு கிறார்கள்.



காட்டு மகுதூம் ஒலியுல்லாஹ் தர்ஹா

இக்கல்வெட்டில் கொற்கை, வீரபாண்டியன்பட்டினம், பவித்ரமாணிக்கப்பட்டினம், காயல்நகர், முக்காணிபோன்ற ஊர்களின் பெயர்கள் தெளிவாக இடம்பெற்றுள்ளன. இக் கல்வெட்டு பவித்ரமாணிக்க நல்லூரில் காயல் துறை என வும், இக்காயல்துறை வீரபாண்டியபட்டினத்துக்கு அருகில் உள்ளது எனவும், பவித்திரமாணிக்கப்பட்டினமே காயல்



நகராக இருந்தது என்பதையும் தெளிவாக உணர்த்துகிறது இக்கல்வெட்டில் இப்பள்ளிக்கு வழங்கப்பட்ட இறையிலி நிலத்தின் மிகப்பரந்த எல்லைகளையும் அவற்றில் உட் பட்ட நஞ்சை' புஞ்சை நிலங்களின் விபரங்களையும் தெளி வாகக் கூறியுள்ளது.

இக்கல்வெட்டு சோனவப்பிள்ளார் பள்ளிக்கு என்று கூறுகிறது. எனவே சோனவப்பிள்ளார் பள்ளி என்று கல் வெட்டு குறிப்பது இஸ்லாமியர்களின் தொழுகை பள்ளி யையே என்பது புலனாகிறது. அல்லாமல் பிலால் என்றச் சொல்லை பிழார் என்று திருப்புல்லாணி கோயில் கல்வெட் டில் வெட்டப்பட்டிருப்பது பதிவு செய்தவர் விட்ட பிழை யாக இருக்கலாமென சிலர் நினைப்பது பொருந்தாதது என்பது இதன் மூலம் விளங்குகிறது.

இக்கல்வெட்டில் இடம்பெற்றுள்ள ''சோனவப் பிள் ளார்ப்பள்ளி'' என்ற தொடர் மூலம் ஓர் உண்மை தெற் றெனப் புலனாகின்றது. ''சோனவப்பிள்ளார்'' என்ற சொல் புதிதாக தமிழகம் வந்த இஸ்லாமியரை உணர்த்தி நிற்கின்றது. ''பிள்ளார்''என்பது ''பிள்ளை'' என்ற சொல் வடிவம், ''ஆர்'' விகுதி பெற்று நின்றது. அக்காலத் தமி ழகள் வந்தாரை மதித்துப் போற்றும்மாண்பினர்என்பதை தமிழுலகம் அறியும். தம் தாயகத்துக்கு வந்தவர்களை மதித்துப் போற்றித் தம் ஒருமைப்பாட்டு உணர்வோடு, அந்த இஸ்லாமியர்களை, ''சோனகப்பிள்ளை'' என்று அன்புடன் அழைத்துப் பெருமை படுத்தி, மதித்துப் போற் றியுள்ளனர் என்ற தெளிதவான உண்மையைச் சோனவப் பிள்ளார் என்பதுஉணர்த்தி நிற்கிறது. ''பிள்ளை''என்பது பொதுப் பெயராக இன்றும் வழங்குவதுகண்கூடு. ''பிள்ளை என்னும் சொல் உறவை மட்டுமல்ல அன்பு, நட்பு- பாச உணர்வையும் உணர்த்தும் பொதுச்சொல் இவ்வடிப் படையில்தான்அன்றையதமிழர், தமிழகம் வந்த இஸ்லாமி யர்களை அன்புடனும் நட்பு பாராட்டியும் ''சோனகப் பிள்ளை'' என வழங்கியுள்ளனர். இன்றும் கேரளத்தில் முஸ்லீம்களை ''மாப்பிள்ளை'' என்று அழைக்கப்படுவதும்

தமிழ்நாட்டில் தம்வீட்டிற்கும் வரும் மருமகனை ''மாப் பிள்ளை'' என்று எல்லா இனத்தவரும் அழைத்து வருவதும் இவ்உண்மையை உணர்த்தும். எனவே சோனவப்பிள்ளார் என்பது சோனக முஸ்லிம்களை மட்டும் உணர்ந்தி நிற்கும் சிறப்புபெயராகும்.

இக் கல்வெட்டில் ''சோனவப்பிள்ளார்ப்பள்ளி''என்று குறிப்பிடப்பட்டுள்ளது. திருப்புல்லாணிக்கோயில் கல்வெட் டில் இடம் பெற்றுள்ள ''பவித்திர மாணிக்கப்பட்டின கீழ் பால் சோனகச்சாமந்த பள்ளியானபிழார்ப்பள்ளி''என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

முஸ்லிம் மக்கள் தமிழகத்தின் பழங்குடி மக்கள் என்ப தற்கு ஆதாரமாகப் பதின்மூன்றாம் நூற்றாண்டின் முற் பகுதியில் முஸ்லிம்களுக்கு நன்கொடை வழங்கப்பட்ட செய்தியை திருப்புல்லாணிக்கோயில் கல்வெட்டு ஒன்றில் குறிப்பிடப்பட்டுள்ளது என்று டாக்டர் ம. மு. உவைஸ் அவர்கள் தம்முடைய இஸ்லாம் வளர்த்த தமிழ் என்னும் நூலில் கூறுகிறார்கள். பாண்டிய அரசன் மாறவர்மன் காலத்தில்பௌத்திரமாணிக்கபட்டினத்துசோனகச்சாமந்த பள்ளிக்கு வரிவிலக்காக, மானியமாக கொடுத்த குறிப்புக் களைப் பெற்று விளங்குகிறது திருப்புல்லாணிக்கோயில் கல்வெட்டு என்றும் இக்கல்வெட்டுக் கூறும் சோனகச் சாமந்தப் பள்ளியினையே இபுனு பதூதா பத்தனில் பார்த் ததாகக் குறிப்பிடுகிறார் என்பதில் எள்ளளவேனும் ஐய மில்லை என்றும்எம்.ஐ மரைக்காயர் அவர்கள் தம்முடைய தமிழகத்தில் மார்க்கோபோலோ இபுனு பதூதா என்னும் நூலில் கூறுகிறார்கள்.

டாக்டர் உவைஸ் அவர்கள் கூறும் காலமும், காட்டு மகுதூம் பள்ளியிலுள்ள கல்வெட்டு காலமும் ஒன்றே. அல்ஹாஜ் எம். ஐ. மரைக்காயார் கூறுகின்றபடி பௌத்திர மாணிக்கப்பட்டினத்து சோனகபிழார்ப்பள்ளிக்கு வரிவிலக் காக் கொடுத்ததையே, காட்டு மகுதூம்பள்ளி கல்வெட்டும் குறிப்பிடுகிறது. எனவே திருப்புல்லாணிக் கல்வெட்டுகுறிப்



பிடுவது பவித்திரமாணிக்கப்பட்டினமாகிய காயல்பட்டி னத்தை என்பது நன்கு புலனாகிறது.

மகுதூம் பள்ளி தர்ஹாவில் பல இறைநேசச் செல் வர்கள்'அடங்கியுள்ளார்கள். அவர்களின் ஒருவர் மகான் மகுதூம் வலியுல்லாஹ். இவர்கள் ஹிஜ்ரி 446ல் அரபு நாட் டில் ஹுசைன் (ரலி) அவர்கள் வம்சத்தில் பிறந்தவர்கள். நம் அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் இவர்களின் கனவில் காட்சி அளித்து உத்திரவிட காயல்பட்டினம் வந்தார்கள். மகுதூம் வலியுல்லாஹ் ஏர்வாடி செய்பிது இப்றாஹிம் வலியுல்லாஹ் அவர் களின்சிறியதந்தையுமாவார்கள். இவர்கள் பல சிறப்பான மார்க்க சேவைகளைச் செய்துள்ளார்கள் பல அற்புதங் களையும் நிகழ்த்தியுள்ளார்கள். இவர்கள் ஹிஜ்ரி 539 - ல் (கி. பி. 1133) காலமாகி அடங்கியுள்ளார்கள். இன்றும் இவர்களின் தர்ஹாவில் டாக்டர்களால் கைவிடப்பட்ட (நோயாளிகளும்' வஞ்சனை, சூனியம், பேய் பிடித்தவர் களும் தங்கி இப்பெரிய நாதாவின் துஆவினாலும், அல் லாஹ்வின் அருளாலும் சுகம் பெற்றுச் செல்கிறார்கள்.

அல்லாஹ்வின் அருள் நேச செல்வர்களுக்கு அற்புதம் (கராமத்) செய்யும் ஆற்றலுண்டு என்பதற்கு திருகுர் ஆனிலும், ஹதீதிலும் ஆதாரங்கள் இருக்கின்றன. அல் லாஹ்வினால் அருளப்பட்ட கராமத் என்னும் அற்புதம் நிகழ்த்தும் ஆற்றலை வலிமார்கள் மறைத்தும் வைக்கலாம். வெளிப்படுத்தவும் செய்யலாம். காட்டு மகுதூம் வலியுல் லாஹ் தர்ஹாவுக்கு அருகிலுள்ளகடலோரத்தில்பால்அப்பா சீனி அப்பாமன்னர் அப்துல்லா போன்ற பல நாதாக்களின் கல்லறை நடுகற்கள் இருக்கின்றன. ஆனால் நடுகற்களில் எவ்வித குறிப்பும் கண்டு கொள்ள முடியவில்லை.

## காட்டு மகுதூம் ஒலியுல்லாஹ் (தர்ஹா) பள்ளி கல்வெட்டு

### கல்வெட்டு எண் 1. (பள்ளிக்கும் தர்ஹாவுக்கும் இடையில்)

மதுரை தொல் பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக்கழக அறிக்கைப்படி இக் கல்வெட்டு உதய மார்த்தாண்ட மன்னனது ஆட்சியில் கி.பி. 1387யில் ரிவெட்டப் பட்டது. இக்கல் வெட்டு மூலம் காயல்பட்டினம் முஸ்லிம்களுக்கும் உதயமார்த்தாண்ட மன்னருக்கும் இருந்த நெருக்மான தொடர்பு தெரிய முடிகிறது.

இக்கல்வெட்டில் சோனாடு கொண்டான் பட்டினத்து பள்ளிக்கு உதய மார்த்தாண்டப் பெரும்பள்ளி எனப் பெயரும் கொடுத்து ஆவ்வூரில் காழியாரான அபுபக்கருக்கு உதயமார்த்தாண்ட காழியார் எனப் பெயரும் கொடுத்து, இந்தப் பள்ளிக்குச் சுதந்திரமாக இந்த சோனாடு கொண்டான் பட்டினத்துறையில், ஏற்றுமதி இறக்குமதி செய்யும் பொருளில் விலைப்படி உள்ள முதலுக்கு நாலுபணத்துக்கு கால்பணமாக உள்ள விழுக்காடு பள்ளி வாசலுக்கு வழங்கப்படல் வேண்டுமென்று ஆணையிடப் படுகிறது.

### காயல்பட்டினம் பெரிய குத்பாப்பள்ளி மையவாடி கல்வெட்டுகள்:

காயல்பட்டினத்தின் முதன் முதலாக கட்டப்பட்ட பள்ளி பெரிய குத்பாப்பள்ளி [அல்ஜாமியுல் கபீர்]. இப்பள்ளியை கெய்ரோவிலிருந்து வந்த முஹம்மது கல்ஜியும் மற்றும் பெரிய நாதாக்களும் ஹிஜ்ரி 228-ல் [கி. பி. 843] கட்டினார்கள் என்பதை பழைய சரித்திர குறிப்பேடுகள் மூலம் அறிகிறோம். முஹம்மது கல்ஜி அவர்கள் இப்பள்ளி மையவாடியில் அடங்கியுள்ளார்கள். இவர்களுக்கும் இவர்களுடன் வந்த மற்ற நாதாக்களுக்கும் கந்தூரி விழா சிறப்பாக கொண்டாடப்பட்டது என்பதையும் அறிகிறோம். கி. பி 1300-ல் சுல்தான் ஜமாலுத்தீன் இப்பள்ளியை புதுப்பித்து பெரிய அளவில் கட்டத்துவங்கி, இவர்களின் மகனார் கி. பி. 1329-ல் கட்டி முடித்தார் என்பதை இப்பள்ளியில் உள்ள கல்வெட்டு மூலம் இன்றும் அறிய முடிகிறது. இக்கல்வெட்டு அரபி மொழியில் வெட்டப்பட்டிருக்கிறது.





ஹிஜ்ரி 228-ல் (கி.பி. 843) கட்டப்பட்ட பெரிய குத்பாப் பள்ளியின் பூர்வீக பகுதி

இப்பள்ளியை புதுப்பித்துக் கட்டிய காலத்திற்குப்பின் ஆதியில் இப்பள்ளியைக்கட்டிய முஹம்மது கல்ஜி மற்றும் நாதாக்களுக்கு நடந்த கந்தூரி விழா (நினைவு விழா) விடுபட்டிருக்கலாமென்பது வரலாற்று ஆசிரியர்களின் கருத்து. அவர்களின் மீஸான் கற்களும் காலப்போக்கில் மண்ணில் புதைந்திருக்கலாமென்பதும் அறிஞர்களின் கருத்தாகும். பெரிய குத்பாப் பள்ளியின் இரு பெரிய மையவாடிகளிலும் பல ஆயிரக்கணக்கான இறை நேசச் செல்வர்களும், பல கலைகளிலும் புகழ்பெற்ற பெரியார்களும் அடங்கியுள்ளார்கள். பல மீஸான்கற்கள் பூமியில் புதைந்து விட்டன. பல பள்ளியில் சுவர்களிலும், மையவாடியின் சுவர்களில் வைத்து கட்டப்பட்டிருக்கின்றன, சில பள்ளியில் புதிதாக விஸ்தரிக்கப்பட்ட அடித்தளத்தில் போட்டு பூசப்பட்டிருக்கின்றன என்பதையும் காணுகிறோம்; கேள்விப் படுகிறோம். இன்றும் சில மிஸான்கற்கள் சிறப்பாக காட்சி அளிக்கின்றன. எடுத்துக்காட்டிற்காக மூன்று நடுகற்களை மட்டும் ஆராய்வோம்.



பெரிய குத்பாப்பள்ளியின் பெரிய மையவாடி
முஹம்மது கல்ஜி மற்றும் நாத்தாக்கள்
அடங்கியுள்ள இடம்



பெரிய குத்பாப்பள்ளி மையவாடி





பெரிய குத்பாப் பள்ளி மையவாடி

**நடுகல் எண் 1**

ரசீதுத்தீன் மன்னான் ... ... ... ... ஹிஜ்ரி 502
... ... ... ... ... ...

மகான் ரசீதுத்தீன் மன்னான் என்பவர் ஹிஜ்ரி 502-ல் [கி. பி. 1108] மரணமாகி அடங்கியுள்ளார்கள் என்பது மட்டும் அறிய முடிகிறது. மற்ற எழுத்துக்கள் எல்லாம் தேய்ந்து விட்டன.

**நடுகல் எண் 2**

[சதுக்கை பின்புறச் சுவர் அருகில் இருக்கும் மீஸான் கல்]
முதல் மூன்று வரிகள் அரபு வடிவம்
... ... ... யாண்டு வெள்ளிக்கிழமை... ... ...
நேரத்தில் ... ... அடக்கம் ... ... ... வகுதை
யான தென் காயல்பட்டணத்து ... ... ... மன்னவற்கு
மருகர் காழி ... ... ... ... யான செம்பி நாடான்
... ... என்பார் ... ... ... மறைவிடம்.

வகுதையான தென் காயல்பட்டினத்தைச் சேர்ந்த ஒரு பெரியாரின் மறைவிடம் என்ததை அறிய முடிகிறது.

## நடுகல் எண் 3

[மையவாடியின் கிழக்குப்பகுதி]

முதல் ஐந்து வரிகள் அரபு வடிவம். சில வரிகள் அழிவுற்றது பௌத்திரமாணிக்கப்பட்டினமாம் வகுதைத்துறை காயற் கதிபதியான நிலக்கிழவர் மறைவிடம் ... ... கொல்லம் ... ... தெய்தி ... ... கட்டியெடுப்பித்த சுவர்.

பௌத்திர மாணிக்கப் பட்டணமாம் வகுதைத்துறை காயற்கதிபதியான நிலக்கிழவர் ஒருவரின் மறைவிடம் என்பதை அறிகிறோம்.

தென் காயல், வகுதை, பவித்திர மாணிக்கப்பட்டினம் என்பன காயல்பட்டினத்தைக் குறிக்கின்றன என்பதையும், 900 ஆண்டுகளுக்கு முன்பே பெரிய குத்பாபள்ளி மையவாடிகளில் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறார்கள் என்பதும் இங்குள்ள மீஸான் கற்கள் (கல்லறை நடுகற்கள்) நமக்கு எடுத்து இயம்புகின்றன. லெப்பை அப்பா வலியுல்லாஹ், காசீம்புலவர் வலியுல்லாஹ், ஆகியோர்களின் தர்ஹாகுகளும் இம் மையவாடியில் அமைந்திருக்கின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது. தமிழக தொல்பொருள் ஆய்வுக்கழக அறிக்கையிலும் வேறு சில மீஸான் கற்களின் குறிப்புகள் இடம் பெற்றிருக்கின்றன.

## காயல்பட்டினம் சிறுபள்ளி :

## [சின்ன ஜும்ஆ பள்ளி கல்வெட்டுகள்]

சிறுபள்ளி சுமார் 740 வருடங்களுக்கு முன் சிறிய சிறிய பள்ளியாக கட்டப்பட்டதென்றும் சுமார் 360 வருடங்களுக்கு முன் ஆட்சியிலிருந்த நெய்னார் ஒருவர் இப் பள்ளியை பெரியதாக மாற்றி அமைத்தார் என்றும் அறிகிறோம். இப்பள்ளியின் தென்பகுதியில் ஏழு நாதாக்களின் மீஸான் கற்கள் இருக்கின்றன. இக் கல்வெட்டுகள் தமிழக தொல்பொருள் ஆய்வுக்கழக அறிக்கையில் இடம்பெற்றுள்ளன.

1. ஷெய்கு ஹஸன் முதலியார் (ரஹ்) - ஷஹீது - ஹிஜ்ரி 794 ஜமாத்துல் ஆகிர் பிறை 22 - ஞாயிற்றுக்கிழமை





சின்ன ஜும்ஆ பள்ளியின் புதிய அமைப்பு

2. அறபு முதலியார் என்ற ஸஃதுத்தினின் மகன் செய்யிது அஹ்மது (ரஹ்) ஹிஜ்ரி 670 - ஜமாத்துல் ஆகிர் பிறை 17 திங்கட்கிழமை
3. ரமழானின் மகள் அஹ்மது நாச்சி ஹிஜ்ரி 806 துல்ஹஜ்ஜீ பிறை 9 - புதன்கிழமை
4. முஹம்மதுவின் மகன் ஸஃதுவின் மகன் அலியின் மகன் மௌலானாசித்திக் (ரஹ்) ஹிஜ்ரி 812 ரமலான் பிறை 9, புதன்கிழமை.
5. ஸஃதுத்தினின் மகன் செய்பிது அஹ்மதுவின் மகன் அப்துல் மலிக்(ரஹ்) ஹிஜ்ரி 812 ஷவ்வால் பிறை4 -புதன்கிழமை
6. செயயிது அஹ்மது முதலியார் மகள் பீவிமறியம் ஹிஜ்ரி 822 - ரஜப்பிறை 8 - வியாழக்கிழமை
7. உதுமான் காஹிரின் மகன் ஷெய்கு அபூபக்கர் (ரஹ்) ஹிஜ்ரி 853 - ரபிவுல் அவ்வல் பிறை 22 - புதன்கிழமை

இந்த இறைநேசச் செல்வர்கள், இறைநேசச் செல்வியர்களின் மீஸான்கற்கள் பள்ளியின் உட்பகுதியில் அமைந்துவிட்டதனால் இன்றும் எழுத்துக்கள் வாசிக்க முடிகிற

அளவிற்கு அழகாக அமைந்திருக்கின்றன. பேர் மஹ்மூது வலியுல்லாஹ் அவர்களின் அடக்கவிடமும் இப்பள்ளியின் வடபுற மையவாடியை ஒட்டிய சங்கப்பகுதியில் அமைந் திருக்கிறது. சிறிபள்ளி பழுதுபட்டுவிட்டதனால் இப்போது உடைக்கப்பட்டு பெரிய அளவில் நவீன முறையில் கட்டப் பட்டு வருகிறது.

## காயல்பட்டினம் யூசுப் ஒலியுல்லாஹ் (பள்ளி) தர்கா - கல்வெட்டு – வாயிற்படி கீழ்த்தளம்

1 ... ...... ... ... ...
2 ... ... ... சரம சமர கேசரி ... ...தே
3 னாஞ் செயசூரப் பாண்டிய தெவற் ஆணைக் கியன்ற
4 ......நீல நிவந்த சோதிகொண் டொளிர்வ தான நிலத்-
5 திடை காயல் நயத்துறை வழுதிதன் புரிசையின் மேற்
6 காகயொப்புறுந்தலமான விப்பவுத்திர மாணிக்கவூர்...ண்
7 யரியணை யில்வீற்று கொடிகுடை... ...மீனவன் ஆ
8 னவற்கு ... ... ... ... ... ...றொ-
9 முகைச் சாலை ... ... ... வாழ்கவென்ன வாழி-
10 யுங்கூறி திருமொழிகொடுக்க ... ... ... பூஞ் சோ-
11 லைவெண்மணன்மேட்டினது அருகில்... ...பள்ளியின்
12 சீர்த்தி ... ... ... ... வள்ளலின் ... ...
13 ... ... ... ...இம்மை பயனு மறுமைக் குறுதியும்
14 மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய ... ... ...
15 குள் இறுக்கும் படிக் கல்வெட் ... ... செவ்வடிக்கு
16 யிவை என் எழுத்து ... ... ... தன்மம் ... ...
17 யரு பதின் ... ... ... யஎ ஆவது ... ... ...
18 யாண்டு ... ... ... ... இவர்கள் குடுத்த
19 இறையிலி தன்மம் ... ... ... ... தென்னா
20 பாண்டியனே ... ... ... ...கண்டனனே ... ... இவ்
21 வூர் இவன்பக்கல் ... ... ... ... ... பீடம்
22 ஒன்றும்... ... ...ரை... ...உசரத்து இரண்டும்
23 இதனொடும் படும் ... ... று ... ...உ... ...ஆறு
24 ... ...க்குறி... ...கற்பதித்த பள்ளிப் பாகம்



25 பணிக்க... ... மூ... ...யிலட்டியென் ... ...எழுதி
26 னென்... ... ...தெற்கும் நால்பால் எல்லை
27 சிலாலெகை செய்து கல்நட்டு ———————— யார்க்கு
குடுத்தோம்————

ஷெ பள்ளி நடுகல் (மீஸான்கள்) எழுத்து வரிகள்:
... மாணிக்கப்பட்டின சீகொமற பாண்டிய தெவற்குப் பரிந்து பணிவிடை சமர்புரி மேலவன் சோனவச் சாது புதை குழி
... திரு நொந்தா விளக்கேற் றனம்... ...என்(று)

## காயல்பட்டினம் யூசுப் ஒலியுல்லாஹ் [பள்ளி] தர்ஹா கல்வெட்டு [வாயிற்படி]

இக்கல்வெட்டு யூசுப்ஒலியுல்லாஹ் பள்ளிக்கு பாண்டிய மன்னனால் நிலமும், மானியமும் வழங்கிய விபரத்தை கூறுகிறது. இக்கல்வெட்டு ஜெயசூரபாண்டிய மன்னனால் வெட்டப்பட்டது. எனவும் இப்பள்ளியை விரிவுபடுத்துவ தற்காக செலவு தொகையும் வரியிலலா நிலமும் (இறை யிலி நிலமும்) கொடுக்கப்பட்டது எனவும். தெரியவருகிறது இக்கல்வெட்டு காயல்பட்டினத்தை பவுத்திரமாணிக்கபட் டினம் எனவும் காயல்துறை எனவும் சுட்டிக்காட்டுகிறது. இக்கல்வெட்டு பதிமூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்ததாக தெரிகிறது.

## காயல்பட்டினம் சிவன் கோயில் கல்வெட்டு- குறிப்பு:

1. ... ... ... ... ... ... ...
2. ... ... ... ... ... ... ...
3. ... ... ... ... ... ... ...
4. ... ... ... ... ... ...கலைகள்
5. ... ... ... ...நால்வரும் ... இவ(ர்)
6. களிலெ நிலையா ... ... திருப்பதியம் விண்ண
7. பஞ் செய்ய ... ... நிசதம் நெல்லு மு(க்)
8. ...குறுணிநிவந்தனமாய் ...நெல்லுப்பெறவும் ...இட்(டு)
9. ... ... ... ... ... விடங்க(ன்)
10. ... ... ... ... ... ...

11. ... ... ... ... அம்பலவன்சதா சிவனுக்(கு)
12. ... ... ...நெல்லு... குருணி ய சா ... ...
13 ... தென்காயற்... சிவக்கொழுந்து சீருடை கழவான
14 ... ...பெற்று... உள்ளூர்பண்டாரத்...தெய்
15. ... கடவர்... ... ... கழஞ்சு(ம்)
16. ... ... ... ... ... இதனொ
17. டுங் கூட ...பவித்திர மாணிக்க மானவிவ் வூரி(ல்) எழுந்த
18. இவன் ... திரவியமும் கொண்டு ... இறை
19. ... ... உள்ளிட்டதா மிக்கொயில் ...திரி
20. புவன சக்கரவர்த்திகள் ... எழுந்தருள் வித்-
21. தது ... பாண்டியற்கு யாண்டு ...
22. ... ... ... ... ... ...
23. ... ... ... ... ... ...
24. ... ... ... ... ... ...
25. ... ... ... ... ... ...

### காயல்பட்டினம் சிவன் கோயில் கல்வெட்டு :

இக்கல்வெட்டு திரிபுவன சக்கரவர்த்தியான சடைய வர்மன் விக்ரம பாண்டியன்காலத்தினதாகும். இவருடைய ஆட்சியின் காலம் கி. பி. 1401 - 1422. காயல்பட்டினத்தி லுள்ள பழமை வாய்ந்த சிவன் கோயிலில் காணப்படுகின்ற இக்கல்வெட்டும் காயல்பட்டினத்தை தென்காயல் எனக் குறிப்பிடுவதுடன் பவித்திரமாணிக்கமான இவ்வூர் என வும் நிறுவியுள்ளது. இக்கோயிலுக்கு மானியமாக நெல்லும் பொருளும் வழங்கப்பட்ட செய்தியையும் கோயில் திருப் பணிகள் செவ்வனே நடைபெறபண்டங்கள் வழங்கப்பட்ட செய்தியையும் இக்கல்வெட்டு மூலம் உணரப்படுகிறது.





கொடி மர சிறு நெய்னார் பள்ளி
[பெரிய சம்சுத்தீன் ஒலியுல்லாஹ். சின்ன சம்சுத்தீன் ஒலியுல்லாஹ், அப்துற்றகுமான் ஒலியுல்லாஹ் ஆகியோர்களின் அடக்க இடங்களும்]

### 1 காயல்பட்டினம் கொடி மரப்பள்ளிக் கல்வெட்டு :

1. சுபமஸ்து பூமிசை வனிதை மார்பினில் பொலிதர
2. நாமிசை கலைமகள் நலமுற விளங்க புயவரை மீது
3. சயமகற் புணரக் கயலிணை யுலகிற் கன்ணெனத்
4. திகழ்தரத் சந்திர குலத்து வந்தவ தரித்து முந்தயர்

5. தவத்துறு முளையென வளர்ந்து தென்கலை வடகலை
6. ஓர்ந்துத் தெளிவுற தெரிந்து மன்பதை புரக்க
7 மணியணி முடி புனைந்து சங்கர சரண பங்கசம் சூடி
8. வீரபாண்டியபாட்டினத்துள் திகழ்ஆர்கலியோதக்கரை...ல்
9. தரளவண் மணி தேங்கு புரிசையங் கிருந்து தனிக்
10 குடைதிகழ் புரி பவ்த்ர மாணிக்க பட்டினத் துறுபெரும்
11. செயமா துறையும் காயற் பட்டினங் திக்ழ்தரு துருக்க
12. நெயினாப் பள்ளி விழாவணி நடாத்தி வழாவகை நடாத்தற்கு
13. தென்காயல் நாட்டு மண்மக்க ளுவப்ப தொழுகை அர்த்த
14. மண்டபமும் இடைநாழி பெருமண்டபமும் அலம்பு நீர் வாவியு(ம்)
15. செய்து திருப்பணி செய்து சோனகப் பள்ளி ——— -
16 சிறீஅரி தேவரான பாண்டிய தேவர்க்கியாண்டுஇருபத்
17. தெட்டாவதின் மேலாம் எதிரது ————————ற்று இருபத்தொன்றாம்
18. தியதி பூரணனையும் வெள்ளிக் கிழமை சோதிநாள் ———————யத்து
19, தென்வாரி நாட்டுப் பொருநை பாயும் உத்தர தீரத்து உமரிக்
20. காட்டெல்லை யுட்படு மாத்தூர் காணிக்கு———பராக்
21. பாண்டிய தெவற்கு எல்லை யான புன்னக்காயற்கு உட்பட்——————
22. வடக்கீள் எல்கை ——————— நன்செயும் புன்செயும் மேடுங் குளனும்
23. மாவடை மரவடை பட்டடை கொடித் தோட்டமுஞ் ... ... ...
24. செக்கிறை மற்று முள்ள ஸமஸ்த ப்ராப்திகள் யாவும் முப்பதாவது



25. பாசன முப்பெரு முதலுக்கு தேவதான மாக விட்டது இம்
26. மரியா தைபிலெ இவ்வோலைபிடிபாடாகக் கொண்டு ————
27. உள்ளளவும்
28· கையாண்டு செம்பிலும் கல்லிலும் வெட்டியது இதனால்
29. ப்ள்ளியிற் றொழுகைப் பணிகள் எவையும் முறைபோ
30. றாழ்வற நடாத்திப் போதவும் பாற்க————இவை
31. கொற்கை பராக்ரம மாறன் சிறீயரீ பாண்டிய தென்னவன்
32. எழுத்து — — — துல்யம் — — — பவ்த்ர மாணிக் கம் பட்டினப்
33. பள்ளிக் இறுக்கும்படி கல்வெட்டிக் குடுத்தன் சுவஸ்தி சிறீ
34. — — — — — — சந்திராத்தவல்
35. — — — வரியில்லார் கணக்கிலும் தவிர்த்து
36. கைய்யாண்டு கொள்ளவும் துல்யம்— — ஸ்வஸ்திசிறீ

**காயல்பட்டினம் கொடிமர சிறுநெய்னார் பள்ளி கல்வெட்டு :**

சுப மஸ்து பூமிசை வனிதை'' என்று தொடங்கும் கல்வெட்டு அரிகேசரி பராக்கிரம பாண்டியன் கல்வெட்டு என தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழக ஆய்வாளர்கள் திரு. சு. இராசகோபால், எம். ஏ., திரு. செ. போசு, எம்.ஏ., கூறுகிறார்கள். இப்பாண்டிய மன்னனின் ஆட்சி காலம் கி. பி· 1422 - 1461. டாக்டர்

K. V ராமன் எழுதியுள்ள பாண்டியர் வரலாற்று நூலில் இக்கல்வெட்டின் மெய்க் கீர்த்திப்பகுதி ஏழுவரிகளுடன் முழுமெய்க்கீர்த்தி அச்சாகியுள்ளது.

இக்கல்வெட்டு பராக்கிரமபாண்டியன் மன்னனால் வெட்டப்பட்டது என்பது தெளிவாகின்றது. இக்கல்வெட்டு காயல்பட்டினத்தை தென்காயல் நாடு எனவும், பவித்ர மாணிக்கப்பட்டினம்எனவும்காயல்பட்டினம் எனவும்தெளிவாகச்சுட்டிக்காட்டுகிறது, அக்காலத்தில் காயல்பட்டினம், பவித்ர மாணிக்கப்பட்டினம்என்னும்பெயரோடு, பாண்டிய மன்னனின் அரசுக்கோட்டமாகத் திகழ்ந்துள்ளது என்ற உண்மையை இக்கல்வெட்டு மூலம் உணரமுடிகிறது, இக்கல்வெட்டு பவித்ரமாணிக்கப்பட்டினத்து (காயல்பட்டினத்து) சோனகப்பள்ளிக்கு (கொடிமரசிறுநெய்னார் பள்ளிக்கு) மக்கள் மகிழ்ச்சியாக தொழுதுவரவும், விழா நடத்திவரவும் நிலமும் மானியமும் பராக்கிரம பாண்டிய மன்னனால் வழங்கப்பட்ட கொடையை விளக்குவதாகவுள்ளது.

இப்பள்ளியில் பெரியசம்சுத்தீன் வலியுல்லாஹ், சின்ன சம்சுத்தீன் வலியுல்லாஹ், அப்துற்றகுமான் வலியுல்லாஹ் ஆகியோர்களின் தர்ஹாக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஆண்டும் இம் மூன்று ஒலிமார்களின் கந்தூரி வைபவமும் சிறப்பாக நடைபெறுகின்றன. இப்பள்ளி மையவாடியில் ஜமாலுத்தீன் வலியுல்லாஹ் அவர்களின் மகன் மகான் செய்கு அலி அவர்களின் அடக்கவிடம் இருக்கிறது. இவர்கள் காலமாகியது ஹிஜ்ரி 951 (செப்டம்பர் 16 தேதி கி. பி. 1544) என்று தமிழக தொல்பொருள் ஆய்வு கழக அறிக்கைமூலம் அறிகிறோம்.



**சுல்தான் செய்கு மாஃபர் அவர்களின் நடுகல் கல்வெட்டு:-**

இவர்களின் மீஸான் கல்லில் அரபி எழுத்துக்கள் தெளிவாக பொறிக்கப்பட்டிருக்கின்றன. இவர்களின் அடக்கஸ்தலம் காயல்பட்டினம் பஞ்சாயத்துபோர்டு கட்டிடத்திலிருந்து கோமான்தெருவிற்கு செல்லும்வழியில் இருக்கிறது. காயல்பட்டினம் மஹ்லறா அரபிக்கல்லூரியின் முன்னால் முதல்வர் மர்ஹூம் அல்ஹாஜ், சாகிப்தம்பி ஆலிம் மஹ்லறா பேராசிரியர் சைபுத்தீன் ஆலிம் ஆகியோர்களின் வீடுகளுக்கண்மையில் இம் மாபெரும் மன்னரின் கல்லறை இருக்கிறது. சுல்தான் செய்கு மஃபர் அவர்களின் மரணம்



சுல்தான் செய்கு மாஃபர் அவர்களின் அடக்கவிடம்

ஹிஜ்ரி 628 (கி. பி. 1231) என்றுமீஸான்கல்லில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. செய்கு மாஃபர் காயல்பட்டினத்தை தம் தலைநகராகக் கொண்டு மாஃபர் பகுதியை ஆண்ட சிறந்த மன்னராக தெரிகிறது.

## காயல்பட்டினம்
## மகுதூம் பள்ளிகல்வெட்டுகள்



மகுதூம் பள்ளி சுமார் 725 வருடங்களுக்கு முன்கட்டப்பட்ட பள்ளி என அறிகிறோம். இப்பள்ளி மையவாடியில் ஹிஜ்ரி 700க்கு முன் மறைந்த சில பெரியவர்களின் மீஸான்கற்கள்இருக்கின்றன. ஆனால்எழுத்துக்கள் தேய்ந்து விட்டதனால் விபரங்கள் அறியமுடியவில்லை பலகல்லறை நடுகற்கள் (மீஸான்கற்கள்) சாய்ந்தும், புதைந்தும் கிடக்கின்றன, அவைகளை ஆய்ந்து விபரங்கள் எடுக்க வேண்டியது அவசியம். செய்கு அலி நெய்னா என்றநுஸ்கி வலியுல்லாஹ்அவர்கள் ஹிஜ்ரி 995-ல் காலமாகி இங்கு அடங்கியுள்ளார்கள். இவர்கள் சிறுவயதில் சுமார் இருபது ஆண்டுகள் லண்டனில் வாழ்ந்தவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. பாலப்பா என்ற அஷ்ஷெய்கு முஹம்மது ஸாரி புன்லபன் வலியுல்லாஹ், லுகவி முஹம்மது லெப்பை ஆலிம் வலியுல்லாஹ் போன்ற இறைநேசச் செல்வர்கள் பலர் இம்மையவாடியில் அடங்கியுள்ளார்கள். காழிஅலாவுத்தீன் வலியுல்லாஹ் அவர்களின் பாட்டனாரும் இங்கு அடங்கியுள்ளார். இவர்களின் முன்னோர்கள் தான் இப்பள்ளியைக் கட்டினார்கள் எனக்கூறுகிறார்கள்.



## காயல்பட்டினம் அஹ்மதுநெய்னார்பள்ளி கல்வெட்டுகள்:-

அஹ்மது நெய்னார் பள்ளியை ஒட்டிய காழி அலாவுத்தீன் அப்பா தைக்காவில் ஐந்து பெரியார்களின் கல்லறை நடுகற்கள் இருக்கின்றன. மீஸான் கற்களின் குறிப்புகள் அரபியில் மிகவும் தெளிவாக இருக்கின்றன.



1. அப்துற்றசீத் இப்னுஅப்துல் கையிப் இப்னுஅலாவுத்தீன்
மரணம் ஹிஜ்ரி 971
2 செய்யிது முஹம்மது வலி இப்னு அலாவுத்தீன்
மரணம் ஹிஜ்ரி 924
3. செய்கு பாஸில் செய்யித் காழி அலாவுத்தீன்
மரணம் ஹிஜ்ரி 973
4. செய்யிது அலாவுத்தீன் இப்னு முஹம்மது
மரணம் ஹிஜ்ரி 937
5. மரியம் பின்தி செய்யிது அலாவுத்தீன்
மரணம் ஹிஜ்ரி 950

இந்தஐவர்களும்முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லாம் அவர்களின் பரம்பரையில்வந்தவர்கள். ஐவரும் சிறந்த வலிமார்கள், காழி அலாவுத்தீன் அப்பா அவர்கள் வலியாகவும் குத்பாகவும் விளங்கினார்கள். இவர்களும் நாகூர் ஷாஹுல்ஹமீது பாதுஷாநாயகமும் சமகாலத்தவர் என்பது குறிப்பிடதக்கது.



இரட்டைக் குளத்து பள்ளி
[மீயிக்காயில் பள்ளி]
சாலார் மரைக்காயர் வலியுல்லாஹ்
அவர்களின் அடக்கவிடமும்

**காயல்பட்டினம் இர ட்டைக்குளத்துப்பள்ளி கல்வெட்டு:-**

இரட்டைக்குளத்துப்பள்ளியும்காயல்பட்டினத்திலுள்ள பழமையான பள்ளிகளில் ஒன்று. இப்பள்ளியிலிருந்து மேல் மாடிக்குச் செல்லும் வழியில் தென்புற வாயிலில் ஒரு கல் வெட்டு இருக்கிறது. இந்நூலை எழுதிமுடியும் தருவாயில் தான் இக்கல்வெட்டைப்பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. ஹிஜ்ரி 848ல் (கி. பி. 1444) அடங்கியுள்ள சாலார்மரைக் காயர் என்ற மகானின் கல்லறை நடுக்கல்லும் இங்கு இருக்கிறது. இப்பள்ளியின் வடபுறத்தில் ஓர் இறைநேசச் செல்வி அவர்களின் அடக்கஸ்தலமும் இருக்கிறது. இப் பள்ளியின் குளக்கரையை அகலமும் ஆழமும் படுத்தும் போது பண்டைக்கால போர்வாள்களும், போர்க்கருவிகளும்



கிடைத்தன. சதக்கத்துல்லா அப்பா அவர்கள் மிகுதியாக தியானத்திலிருந்ததும் இப்பள்ளியே என்பது குறிப்பிடத் தக்கது.

காயல்பட்டினத்தில் மிகுதியான பள்ளிகளில் கல் வெட்டுகளும், மீஸான் கற்களும் இருக்கின்றன. அப்பகுதி யிலுள்ளவர்கள் இவைகளை முறைப்படி ஆய்ந்து குறிப்பு எடுப்பது சிறப்புடைமையாகும். காயல்பட்டினத்தில் கிடை த்த கல்வெட்டு மற்றும் மீஸான் கற்களில்குறிப்புகள் மூலம் தென் காயல், வகுதை, பவித்திரமாணிக்கப்பட்டினம் என் பன காயல்பட்டினம் என தெளிவாக தெரிய முடிகிறது. மேலும் காயல்பட்டினத்தில் உள்ள பெரிய குத்பாப் பள்ளி, கடற்கரைப் பள்ளி, கறுப்புடையார் பள்ளி போன்றவை, ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பள்ளி வாயில்கள் என்றும் அறிய முடிகிறது.



**முஹியித்தீன் மெட்ரிகுலேசன் மேனிலைப்பள்ளி**
(ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய கடற்கரைப் பள்ளிக்கும் கறுப்புடையார் பள்ளிக்கும் இடையில் அமைந்துள்ளது)

# கன்னித் தமிழும் காயல் பதியும்

தமிழ் நாட்டின் முதல் அரபுக் குடியேற்றமாகிய காயல் பட்டினம் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது "அரபு வளநாடு கோடி கோடி புடைக் கொள் நகர் காகிறூர்" என வரகவி காசீம் புலவர் நாயகம் கூறுகிறார்கள். "வேத அறிவும் அமலும் அகலாது ஐந்துபொறிமலம் அழித்தபுனிதர்மேவும் திருப்பதி" எனத் திருப்புகழின் சிறப்புப்பாயிரம் போற்றுகிறது" கன்னித்தமிழ்க்காயல், மெஞ்ஞானக் களஞ்சியமாகவும் தமிழ் புலவர் கோட்டையாகவும் விளங்குகின்றது. இங்கு பைந்தமிழில் வல்ல புலவர் பலர் தோன்றி இறவாத பெருநூல்களை இயற்றியுள்ளார்கள்.

## பல்சந்த மாலை:

இஸ்லாமியத்தமிழ் இலக்கியப்பரப்பில் தோன்றிய நூல்கள் பல. அவற்றுள் இன்று நமக்குக் கிடைத்த நூல்களில் மிகவும் பழமையானது பல்சந்த மாலை என்னும் இலக்கியமாகும். இப்பல்சந்த மாலையில் ஒரு சில பாடல்களே நமக்குக் கிடைத்துள்ளன பல்சந்த மாலைச் செய்யுட்களை உதாரணச் செய்யுட்களாகக் கொண்ட களவியற் காரிகை என்னும் நூலைப் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள் 1931 ல் பதிப்பித்துள்ளார்கள். இந்நூல் வச்சிர நாட்டு வகுதா புரியில் அரசு புரிந்த அஞ்சுவண்ணத்தவர் மரபினனாகிய ஒரு முகமதிய (முஸ்லிம்) மன்னனைக் குறித்துப் பாடப்பெற்றதாகும். வகுதாபுரியை இக்காலத்தில் காயல்பட்டினம் என வழங்குவர். பல்சந்தமாலைக் குறிப்பிடும் இம்மன்னர் காயல்பட்டினத்தை ஆட்சி புரிந்து காயல்பட்டினத்தில் உள்ள பெரிய ஜூம்ஆ பள்ளியைக் கட்டிய சுல்தான் ஜமாலுத்தீன் ஆவார். இம்மன்னர் பாண்டிய நாட்டை கி. பி. 1293 -ல் இருந்து (ஹிஜ்ரி692) ஆட்சி செய்ததாக வரலாறு மூலம் அறிகிறோம்.



In the year (692 A. H. ) 1293 A. D. Dewar (Sundra-Pandian) died and his wealth and Possessions fell into the hands of shaikh Jamaluddin who succeeded him, obtained an accession of 700 bullock loads of Jewels, "(History of Tirunelvelley by Bishop caldwell)

கி,பி. 1293 ல் சுந்தரபாண்டியன் இறந்ததும், பாண்டிய நாட்டின் ஆட்சிப் பொறுப்பு பெருஞ்செல்வக் குவியலுடன் சுல்தான் ஜமாலுத்தீன் கையில்கிட்டியது, என பிசப் கால்டுவெல் கூறுகிறார். இந்த கூற்றைப் பாரசீக வரலாற்று ஆசிரியர்வாஸாப்அவர்களும்உறுதிசெய்கிறார்.பேராசிரியர் வையாபுரிபிள்ளை அவர்கள் வச்சிரநாடு, வகுதாபுரி, வகுதைஎன்பவை காயல்பட்டினத்தைக் குறிக்குமெனஎழுதியுள்ளார்கள்.

காயல்பட்டணம்பெரியகுத்பா பள்ளி மையவாடியில் இரு கல்லறைக்கற்கல் (மீஸான் கற்கள்) வகுதை என்பது காயல்பட்டினம் தான் என்பதை தெள்ளத் தெளிவாக தெரிவிக்கின்றன. ஒரு மீஸான்கல்லில்" பௌத்ரமாணிக்க பட்டினமாம் வகுதைத்துறை காயற்கதிபதியான நிலக்கிழவர் மறைவிடம்" என்று எழுதப்பட்டிருக்கிறது. இன்னொரு மீஸான் கல்லில், "வகுதையான தென் காயல்பட்டினத்து ......மன்னவருக்கு மருகர் காழி...... செம்பிநாடான் ...... என்பார் மறைவிடம்". என்று பொறிக்கப்பட்டு இருக்கிறது. சில ஆசிரியர்கள், பல்சந்த மாலை, சுல்தான் தகீயுத்தீனைப் புகழ்ந்து பாடியதாக தெரியவருகிறது என்றும் அவர் குலசேகரபாண்டியனுக்குப் பின்அரியாசனத்தில் அமர்ந்து ஆட்சி செய்தார் என்றும், எழுதுகிறார்கள். ஆனால் டாக்டர் கால்டுவெல் அவர்களும் மற்ற வரலாற்று ஆசிரியர்களும் சுந்தர பாண்டிய தேவர் கி. பி. 1293ல் இறந்தப் பின் சுல்தான் தகீயுத்தீன் அவர்களின் மூத்த சகோதரர் சுல்தான் ஜமாலுத்தீன் பாண்டிய நாட்டை ஆண்டதாக ஆதாரபூர்வமாக எழுதுகிறார்கள் சுல்தான் ஜமாலுத்தீன் அவர்

களும் சுல்தான் தகீயுத்தீன் அவர்களும் காயல்பட்டினத்தில் வாழ்ந்தவர்கள். காயல்பட்டினம்பெரியகுத்பாப்பள்ளியைசுல் தான்ஜமாலுத்தீன்கட்டினார் என்பதுதமிழகதொல்பொருள் ஆராய்ச்சிக் கழக அறிக்கையின் மூலமும் அறியலாம். டாக்டர் ம. மு. உவைஸ் அவர்கள் தம்முடைய இஸ்லாம் வளர்த்த தமிழ் என்னும் நூலில் தகீயுத்தீன் அப்துல் ரஹ்மான் அவர்கள் மலிக்குல் இஸ்லாம் ஜமாலுத்தீன் என்பவரின் சகோதரர் என்றும் ஜமாலுத்தீன் அவர்கள் ஓர் அரபுச் சிற்றரசர் என்றும் முதன் முதல் தகீயுத்தின் அப்துர் ரஹ்மான்காயலிலே ஜமாலுத்தீன் அவர்கள் நிறுவிய வியாபார நடுநிலையத்துக்கு அதிபதியாகக் கடமை ஆற்றினார் என்றும் கூறுகிறார். பல்சந்த மாலை குறிக்கும் மன்னர் சுல்தான் ஜமாலுத்தீன் அல்லது சுல்தான் தகீயுத்தீனாக இருந்தாலும் அப்புகழ் அவர்கள் வாழ்ந்த காயல்பட்டினத்திற்கேசாரும்என்பது குறிப்பிடத் தக்கது. சுல்தான் ஜமாலுத்தீன் அவர்களின்பரம்பரையினர் இன்றும் காயல்பட்டினத்தில் இருக்கின்றனர் என்பதும் அவர்களின் (சில்சிலா) குடும்ப வம்ச வழிபட்டியல் அவர் களின் கைவசம் இருக்கின்றன என்பதும் குறிப்பிடதக்கது.

பல்சந்தமாலையில் முஸ்லிம்களைக் குறிக்க யவனர், சோனகர், அஞ்சுவண்ணத்தர் என்னும் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இரண்டாம் நூற்றாண்டில் கிரேக்கர்களையும்,ரோமர்களையும் யவனர் என்றேதமிழ்ர் கள் அழைத்துள்ளார்கள். பின்புவாணிபத்தின் பொருட்டு தமிழகம்வந்தஅரபியர்களையவனர்என்றஅடைமொழியால் பண்டையத் தமிழர் அழைத்துள்ளனர்.யவனர் என்றசொல் சோனகர்என்றுமருவிவிட்டதுஎன்றும் கூறுகின்றார்கள். எகிப் திலிருந்து முதல்முதலாகமுஹம்மது கல்ஜியின் தலைமையில் காயல் வந்த முஸ்லிம்களுக்கு மதுரையை ஆண்ட மன்னன் குறிப்பிட்ட நிலத்தைப் பட்டயம் மூலம் வழங்கினார். அந்த ஊருக்கு ''சொன்ன நகர்'' அதாவது அரசனால் குறிப்பிட் டுச் சொல்லப்பட்ட இடம் என்று பெயர் ஏற்பட்டது அதி லிருந்து அங்குவாழ்ந்து வந்த மக்களுக்கும், அங்கிருந்து பிற



ஊர்களுக்குச் சென்ற மக்களுக்கும் சோனகர் என்று பெயர் ஏற்பட்டது என சில வரலாற்று ஆசிரியர் கூறுகிறார்கள். "கால" என்ற அரபிச் சொல்லுக்கு "சொன்னான்" என்ற பொருள் இருப்பதால் இந்தசொன்ன நகருக்குக்காயல்என்ற பெயர் ஏற்பட்டதென்றும், அதுவேகாயல்பட்டணம்என்று ஆகியது என்றும் சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றார்கள். அஞ்சு வண்ணத்தார் ஒரு வணிகர் குழுவினர் என்றும், சுயேச்சையுடன் வாழ்ந்த குழுவினர் என்றும் ஐவகைச்சாதி யினர் என்றும் பலவேறு விதமாகசரித்திர ஆசிரியர்கள் கூறி உள்ளனர்.

அஞ்சு வண்ணத்தார் பற்றிய மற்றொரு செய்தியும் வழக் கில் உள்ளது. அந்தக் காலத்தில் அரபு நாட்டிலிருந்து காயல் வந்த ஐந்து வமிசத்வைச் சேர்ந்தவர்களை அஞ்சு வண்ணத்தார் என்று அழைந்ததாகவும் கூறப்படுகிறது. கி. பி. 843 ல் முஹம்மது கல்ஜி அவர்களுடன் ஆசிம் வமிசத் தாரும்,பக்கிரி வமிசத்தாரும்,பாரூக்வமிசத்தாரும், உமையா வமிசத்தர்ரும், இராணுவ யுத்தர்களும் தமிழகத்திலுள்ள காயலுக்கு வந்தனர். இதுபோன்று கி. பி. 1292 ல் காய லுக்கு சுல்தான் ஜமாலுத்தீன் அவர்களுடனும் இந்த ஐந்து வகைவமிசத்தார்களும்வந்தார்கள்எனச்சொல்லப்படுகிறது. இந்த ஐந்து குழுவினரும் பின்னர் அஞ்சு வண்ணத்தவர் எனப்பட்டனர் என்பதே அச்செய்தியாகும்.

பல்சந்தமாலையில் முஸ்லீம்களைக் குறிக்கசோனகர் அஞ்சு வண்ணத்தர் என்னும் சொற்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. காயல்பட்டினம் கறுப்புடையார்ப் பள்ளிக் கல்வெட்டில் "கறுப்புடையார் சோனகப் பள்ளி" என்றும் "அஞ்சு வண்ணத் தொழுகை" என்ற குறிப்பும் இருக் கின்றன. (இந்நூலில் பார்க்க - காயலின் கல் வெட்டுகள் என்ற தலைப்பை) அஞ்சு வண்ணத்தார் என் பது ஐந்து வேளை தொழுகும் முஸ்லிம்களைக் குறிக்கும் எனப் புலனாகிறது. ஐந்து வேளை தொழுகைக்கு ஒவ் வொரு முறையும் 'அல்லாஹ்' என்று பாங்கு சொன்னதும் அஞ்சு வண்ணத்தார் பள்ளிக்குச் சென்று தொழுது வந்

தனர் என்பதைப் பல்சந்த மாலை ஆசிரியர் அந்நூலில் சிறப்பாகவும், சுருக்கமாகவும் எழுதியுள்ளார்

''வானது நாணம் கொடையாலுலகை வளர்த்தருளும் சோனகர் வாழுஞ் செழும்பொழில் சூழ்ந்துபார்'' என்ற பல்சந்த மாலையிலுள்ள இரண்டு அடிகளின் கருத்தாவது ''முஸ்லிம்களாகிய சோனகர் வாரி வாரி வழங்கும்அளவுக்கு வழங்கமுடியவில்லையே என்று வானம் நாணியது.பல் சந்த மாலையின் மற்றொரு நான்கு அடி செய்யுளையும் அதன் ஆழ்ந்த கருத்தை கவனிப்போமாக.

''வில்லார் நுதலியும் நீயுமின் றேசென்று மேவுதிர் சூது
எல்லா முணர்ந்தவ ரேழ்பெருந் தரங்கத் தியவனர்கள்
அல்லா வெனவந்து சத்தியநந்தா வகை தொழுஞ்சீர்
நல்லார் பயிலும் பழனங்கள் சூழ்தரு நாட்டகமே''

சோனகர் வாழும் அந்த ஊரில் பல சோலைகள் உண்டு அந்த சோலைகளில் நல்லார்கள் வாழ்கின்றனர். எத்தகைய நல்லவர்கள் என்றால் அல்லாஹ் என்ற ஒலி கேட்டவுடனே வந்துஅவர்கள் செய்தசத்தியம் தவறாது (கலிமாவென்னும் மூலமந்திரம்) நாளொன்றுக்கு ஐவேளை அல்லாஹ்வைத் தொழும்நல்லவர்கள்.அவர்கள் யவனர்கள் என்ற சோனகர் கள். ஏழு பெருங்கடல்களையும் கடந்து செல்பவர்கள்.வியா பாரத்தின் உபாயங்கள் அனைத்தையும் இரகசியங்கள் நன்கு உணர்ந்தவர்கள்.அத்தகையோர் வாழும்இடத்தைவில்போன்ற வளைந்த நெற்றியைஉடையவரும், நீயும் விரைவாகச் சென்று அடைவீர்களாக எனக்கூறினார். சோனகர் பட் டணம் என்ற காயல்பட்டணத்தில் வாழ்ந்த முஸ்லிம்களின் உயர் பண்பை பல்சந்த மாலை சிறப்பாக எடுத்து இயம்பு கிறது. இப்பல்சந்த மாலையை எழுதிய முஸ்லிம் புலவர் எந்த ஊர் என்பது தெரியவில்லை. காயலைச் சேர்ந்த வராக இருக்கலாம் என யூகிக்கப்படுகிறது.

**ஆயிரம் மசலா:**

இந்நூலின் முழுப்பெயர் ''ஆயிரம் மசலா'' என்று வழங்கும் 'அதிசய புராணம்' என்பதாகும். இப்பெய ரில் உள்ள ஆயிரம் மசலா என்பது, ஆயிரம்வினாக்களைக்



குறிக்கும். இவ்விலக்கியத்தின் முதற்பக்கத்தில் இஃதுநபிகள் நாயகம்முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர் கள் திருவாய் மலர்ந்தருளியஹதீதுகள்எனக்குறிப்பிடப்பட் டிருக்கிறது.எனவே ஆயிரமசாலாவிற்கான பதில்கள்ஹதீது களை அடிப்படையாகக்கொண்டுள்ளது என்பதைஅறிகிறோம்.

ஆயிரமசலாவை இயற்றியவர் வண்ணப்பரிமளப் புலவராவர். நூலாசிரியரின் குறிப்பை நூலின் முகப்பில் மைந்த பாடலில் இவ்வாறு குறிக்கப்பட்டுள்ளது.

''புயலாய்ந்த மதுரைகீழ்பாற் பொருந்திய சுலையுமானிற்
செயலாய்ந்த முல்லாமியா செயிதுரை செய்யவிந்நூல்
இயலாய்ந்த முதலி செய்து இசுஹாக்கென்னும்
வகுதை நாடன் பயஹாம்பரருள்சேர் வண்ணப்பரிமளம்
பகரலுற்றான்''

இப்பாடலின் மூலம் நூலாசிரியரின் இயற்பெயர் செய்து இஸ்ஹாக் என்றும் அவர் வகுதை நாட்டைச்சார்ந்தவர் என்றும் அறிகிறோம். மிகுதியான புலவர்கள் வகுதை என்பது காயல் என்று பாடியிருப்பதனால் நூலாசிரியர் காயல்வாசி என அறிகிறோம். அன்றியும் காயல்பட்டினத் திலுள்ள கல்வெட்டுக்கள் மூலம் வகுதை என்பது காயல்பட்டினம் எனவும் அறிகிறோம். இந்நூல் கி. பி. 1572 (ஹிஜ்ரி 980) மதுரையில் செந்தமிழ் அறிஞரின் சங் கத்தில் அறங்கேற்றப்பட்டது என அறிகிறோம். நமக்கு முழுமையாக கிடைத்துள்ள பழமையான இஸ்லாமிய தமிழ் இலக்கிய நூல் ஆயிரம் மசலாவாகும். ஆயிரம்மசலா ஒரு நீதி இலக்கியத்தைப்போல் விளங்குகிறது. இதில் அடங்கியி ருக்கும் கருத்துக்கள் இஸ்லாமிய மார்க்கப்போதனைகளா கவும் வாழ்க்கை நெறிப்படி இஸ்லாம் காட்டும் நல்வழி முறைகளாகவும் உள்ளன. ஆயிரம் மசலா வகுத்துக்காட் டும் வழியின் கண் நடப்போருக்குரிய நன்மைகள்பலவென ஆசிரியர் கூறுகிறார்.

## மிஃறாஜ் மாலை

அண்ணலார் முஹம்மது நபி(ஸல்) அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த ஓர் அற்புத நிகழ்ச்சியே மிஃறாஜ் என அழைக்கப்படுகிறது. நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் நபித்துவம் பெற்று ஏறத்தாழ 12 ஆண்டுகளுக்குப் பின்னர் மிஃறாஜ் என்னும் விண்ணேற்றப்பயணம் நிகழ்ந்தது. இச்சிறப்பான விண்ணேற்றப் பயனத்தின் போது தான் இஸ்லாமியர்கள் மீது ஐவேளைத் தொழுகை அல்லாஹ் வினால்முதன்முதலில்கடமையாக்கப்பட்டது திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மங்கை நகரில்(மேலச்செவ்வல்) பிறந்த ஆலிப்புலவர் ஹிஜ்ரி 990 ல் மிஃறாஜ் மாலையை இயற்றினார். தமிழிலக்கிய உலகில் இஸ்லாம் தழைத்தோங்கத் தொடங்கிய போது பிறசமய இலக்கியங்கள் போன்று காவியச்சுவை நன்கு அமையப்பெற்று விளங்கிய முதல் இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் மிஃறாஜ் மாலையாகும். இந்நூல் தோன்ற காரணமாகயிருந்தவர்கள் காயல்பட்டினத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை ஆலிப்புலவர் விளக்குகிறார்.

''மண்டலம்மென் காயல்வளர் முகம்மதப்பு
மரைக்காயர் மரபி லானோர்
திண்டிறத்தி லிப்பெருநூல் விளங்கவெனப்
பெருந்தலீல்கள் செய்கை யாலும்
அண்டர்தரு வெனக்கொடுக்கும் அஞ்சுவண்ண
முசுலிம் களவர்கள் முன்னே
கொண்டல்முகம் மதுநபிதம் மிகுறாஜை
இசைத்ததமிழாற் கூற லுற்றேன்



காயல்பட்டினத்தில் வாழ்ந்த முகம்மதப்பு மரைக்காயர் மரபில் வந்தோரிடம் பெற்ற அரபியிலுள்ள மிஃறாஜ் நூலை ஆசிரியர் அக்காலத்தில் காயல்பட்டினத்தில் வாழ்ந்த இறைநேச செல்வர் செய்கு முஹம்மது காழி அலாவுத்தீன் ஒலியுல்லாஹ் அவர்களிடம் விளக்கம் பெற்று மிஃறாஜ் மாலையை தமிழில் இயற்றியதை அவருடைய வாழ்த்து பகுதியில் அமைந்த பாடல் தெரிவிக்கிறது.

''களிந்தசிறை வண்டுலவக் கமலம் விள்ளுங்
காகிரியில் வாழ்செய்கு முகம்ம தின்பா
லளித்தவவு லாதிறகு லறிஞர் பீரா
மடல்மகுதூம் காலியலா வுத்தீ னன்பாற்
றெளித்தவறி விவையெவர்க்குள் தெரியந்தென்றே
திருத்துமிகு மிகுறாஜென் னுங்கித் தாபில்
விளைத்தஹறு பதையறபா லோதி யோதி
விரிதமிழ்நூ லுரையாக்கி விளக்கி னாரே.

சுமார் 450 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஆலிப்புலவர் காயல்பட்டினத்திற்குக்காயல் என்ற தமிழ்பெயரும் காஹிர் (காகிரி) என்ற அரபி பெயரும் இருந்தன என்பதை தங்களுடைய செய்யுட்கள் மூலம் அழகாக வர்ணித்துள்ளார்.

**கவிஞர் ஷாமு ஷிஹபுத்தீன் வலியுல்லா நாயகம் :**

காயல்பட்டினத்திலே பிறந்து அங்கேயே ஹிஜ்ரி 1121 றஜப் 21-ல் காலமாகிக் காயல்பட்டினம் அப்பா பள்ளியில் அடக்கப்பட்டிருக்கும் மெஞ்ஞானி, கவிஞர் ஷாமு ஷிஹா புத்தின் வலியுல்லா நாயகம் அவர்கள். ஆசாரங்கள் என்ற பெயரால் நடைபெற்ற அனுசாரங்களை எல்லாம் வன்மையாகக் கண்டித்து பாடியுள்ளார். அரபுத்தமிழில் ஆயிரத்துக்கதிகமான பாமாலைகளைஇயற்றியுள்ளார்கள். அனேக பாமாலைகள் கையெழுத்துபிரதிகளாகஇருந்துசெல்லரித்து அழிந்து விட்டன. வெளிவந்துள்ள பாமாலைகள் பற்றிய விபரத்தை மட்டு இதனடியி தருகிறேன்.-

1. றஸூல் மாலை 2. அதபு மாலை 3. நெஞ்சறிவு மாலை 4. தோகை மாலை 5, பெரிய ஹதீதுமாணிக்க மாலை 6. சின்ன ஹதீது மாலை 7. நான்குயார்கள் 8. நாயதுல் இத்தி ஸார் மாலை 9. உலமா மாலை 10 நபி மாலை 11. ஸூரதுல்குர் ஆன் மாலை 12. புத்தி மாலை 13 கல்யாண பித் அத்து மாலை 14. நஸீஹத்து மாலை 15. குத்பா மாலை 16. ஹனபிமத்ஹபுமாலை 17. மஃரிபா மாலை 18. புகையிலை விலக்கு மாலை 19. அற்கான் மாலை 20. மின்ஹாஜ் மாலை 21. தன்பாக் மாலை கந்தூரி பித் அத்து விலக்கு மாலை 23. மீறுன் மாலை 24. ஹதீது மாலை.

**சீதனக்கொடுமை**

''எல்லா பித்ஞ' வுக்கும் தலைகேள்;
இழிவாம் கைக்கூலி யாமெனவே
நல்லா ரடங்கலும் சொல்லலுற்றுர்
நிறைசேர் முஸ்லிம் களறிவீர்களே!''

[பித்ஞ — வம்பு]



(2)

''வழக்காய் கைகூலி வாங்குவோர்கள்
வண்டன் 'இப்லீசு' தொண்டென
இழுக்கொண் டணுகாத நல்லோர்கள்தான்
இனிய 'நஸீஹத் தாய் இயம்பலுற்றார்''
[இப்லீசு-சாத்தான்: நஸீஹத்-நல்லுபதேசம்]

(3)

''ஆகா திந்தக்கைக் கூலிவாங்கி
ஆணுய்ப் பிறந்தவ னவன்தனக்கு
ஆகா தன்மைபயல் போலவே
ஆகி முன்சபை ஏறுகிறுன்''

(4)

''இந்தப் பணத்திஞல் வரும் துன்பத்தை
எழுதி முடியாது, வாங்கவேண்டாம்
முந்தி அறியாமல் நீவாங்கினால்
முனியும் உடைமையைக் கொடுத்திடுவாய்''

நமது நாட்டிலே கைக்கூலி என்றும் சீதனம் என்றும் வரதட்சனை என்றும் ஒரு கேவலமான முறை பரவலாக இருந்து வருகிறது. இதை இஸ்லாம் வன்மையாக கண்டித்துள்ளது. இது மார்க்கத்திற்கு விரோதமானதென பல மார்க்க அறிஞர்கள் தீர்ப்பளித்துள்ளனர். ''சீதனம் ஒரு சாபக்கேடு. சீதனம் வாங்குகிறவர்களை சமூக பிரஷ்டம் செய்ய வேண்டும்'' என்று மகாத்மா காந்தி கூறுகிறார். இதை ஒழிப்பதற்குக் கடுமையான சட்டம் இயற்ற நமது அரசும் திட்டமிட்டுள்ளது. பெண்ணுக்குச் சீதனம் (மஹர்) கொடுக்க வேண்டுமென கூறுகிறது இஸ்லாம். ஆனால் நடப்பதோ நேர்மாற்றம் பெண்ணுக்கு நகை போடுவது, வீடுகட்டிக் கொடுப்பது, திருமண விருந்து வைப்பது இவை எல்லாம் மணமகனின் கடமை என இஸ்லாம் கூறுகிறது. ஆனுல் அப்படிநடப்பதில்லை. இதைத்தான் கவிஞர் ஷாமு வலிநாயகம் அவர்கள் எல்லா வம்புகளுக்கும் தலையான

வம்புஎன்றும், கைக்கூலிவாங்குகிறவர்கள். 'ஷைத்தானி'ன் தொண்டர்கள் என்றும் கூறி, இப்படி வாங்கும் கைக்கூலியால் வரும் துன்பங்களை எழுதி முடியாது என்றும், தெரியாமல் வாங்கியிருந்தால் திருப்பிக் கொடுத்து விடும்படியும் மேற்கண்டகவிதைகளில்நல்லுபதேசம் கூறியிருக்கிறார்கள்.

**கலப்படம்**

பாலில் நீர் விட்டு விற்பது மாபெரிய குற்றம். அதே பேன்று நெல்லில் பதரைக் கலப்பதும் குற்றமாகும். அரிசியிலே தண்ணீரை விட்டு விற்பது, தவறான வழியில் பணம் சேர்பது இவை எல்லாம் பெருந்தண்டனைகளுக்குரிய குற்றங்களாகவும். இதுபற்றி கவிஞர் நாயகம் அவர்கள் எச்சரிக்கிறார்கள், பின்வரும் கவிதையிலே:-

''பாலில் நீர் விட்டு விற்பவரும்
பதரை நெல்லுடன் கலப்பவரும்
காலியரி சினில் நீரிட்டோருங்
கள்ளப் பணங்காசு செலுத்து நரு
மேலோன் 'லஃனத்' திலாகியென்றும்
வேகு நரகத்தி லாவாரென்றும்
'ஆல' 'நபியுல்லா' 'வும்மத்' திலே
அறிவுள் ளோர்சில ரெடுத்துரைத்தார்

[லஃனத் — சாபம்; ஆல - அகிலம்; நபியுல்லா-இறைத்தூதர், உம்மத் - கூட்டம்]

**நிலத்தை திருத்துதல்**

நிலத்தை திருத்துவது சமூக சேவைகளில் முக்கியமானதாகும். இது பற்றி கவிஞர் ஷாமு வலிநாயகம் அவர்கள் பின்வருமாறு பாடியுள்ளார்கள்:-

''நடக்கும் பாதையிற் றடங்கடமா
யனந்த மேடுகள் படுகுழிகள்
முடக்கும் வேலிகள் முனைக்கொம்புகள்
முள்ளு மரமிப்போற் பள்ளங்கண்டாற்
படுக்கும் நிலம்போல யொப்பமாக
பணங்கா சுகள்விட்டும் வருத்தப்பட்டும்
தடையின்றி நன்றாய்த் திருத்துவென்றே,
தயவுள்ள வறிவாளர் சொன்னர்''



வட்டி விலக்குப் படலமும், மூக்குத்திப் படலம், வளையல் ஊஞ்சல் படலம், குளிக்கும் துறைகளில் நடக்கும் ஒழுக்கக் கேடுகள் படலம், மௌலூதுப் படலம் இன்னும் பலபொருள்கள் பற்றிய படலங்களும் கவிஞர் வலி நாயகம் அவர்கள் பாடிய பாமாலைகளில் அடங்கியுள்ளன. அரபுத் தமிழிலே வெளிவந்த முததாவது இலக்கியப் படைப்புகள் கவிஞர் ஷாமு ஷிஹாப்புத்தீன் வலி நாயகம் அவர்கள் இயற்றிய பாமாலைகளேயாகும்.

**சேகாதி நயினுர்ப் புலவர்**

இவர் காயல்பட்டினம் சுல்தான் செய்யிது ஜமாலுத்தீன் வழிவந்த பிரபு செய்யிது அப்துல் காதிர் நயினரின் புதல்வர், ஹிஜ்ரி 1122-ல் 21 படலங்களையும் 947 விருத்தப்பாக்களையும் கொண்ட ''திருமணக் காட்சி'' என்ற நூலே இயற்றிஞர்.

சேகாதி புலவரின் முன்னோர் இன்னார் என்பதைப் பின் வரும் செய்யுள்களில் சுட்டிக் காட்டுகிறார் கண்ணகுமது மகுதூம் முகம்மது புலவர்:-

''கணிக்கருங் காரணம்
காட்(டு) ஒலிமார்களும்
பணிக்கரும் ரத்னப்
பரீட்சை யோர்களும்
பரவிவாழ் காயற்
பட்டண மென்னும்
தரையினைய நேகந்
தங்கங் கொடுத்து
வாங்கி குடிபதி
வாழ் வுண்டாக்கும்
ஓங்கிய கீர்த்தியுள்ள
செய்யிது சுல்தான் ஜமாலுத்தீன்......

காயல்பட்டினத்திலே வலிமார்களாகிய இறைநேசச் செல்வர்களும் பெரிய மாணிக்கக்கல் வர்த்தகர்களும் பரவி வாழ்கின்றனர் என்றும்சுட்டிக்காட்டியுள்ளார் புலவர்

**பனி அஹமது மரைக்காயர் புலவர் :**

''சீருப்புராண''த்தை உரணிக் கூட்டத்தார் படலத்துடன் முடித்துவிட்டார் உமறுப்புலவர். பனீ அஹமது மரைக்காயர் புலவர் ''சின்ன சீரு.'' என்று ஒரு காப்பியத்தைப் படைத்து ''சீரு'' வுடன் இணைத்து முழுப் பெருங்காப்பியமாக்கினார். 39 படலங்களையும்1869 விருத்தப்பாக்களையும் அடக்கியவை ''சின்ன சீரு.'' உமறுப் புலவரின் ''சீருப்புராணம்'' 5027 விருத்தப்பாக்களைக் கொண்டது. இவ்விரண்டும் இணைந்து 6896 பாக்களைக் கொண்ட முழுக்காப்பியமாக வெளி வந்தது. காயல்பட்டினம் ஷெய்கு அலிலெப்பை ஆலிம் எனும் அரபி இலக்கிய மேதையின் அரபி மூல நூலின் தழுவலே ''சின்ன சீரு'' என்று புலவர் மரைக்காயர் கூறுகிறார். பனீ அஹமது மரைக்காயரின் தந்தை பெயர் சுலைமான். பாட்டனார் பெயர் ஜமாலுத்தீன். நூலறிவும் நுண்ணறிவும் ஒருங்கே பெற்றவர் புலவர் மரைக்காயர். பொருள் நயம் கருத்து ஆழம் எல்லாம் ஒருங்கமைந்தவை அவரின் கவிதைகள். கடவுள் வாழ்த்திலே இறைவன் மீது பின் வருமாறு புகழ் பாடுகிறார்:-

''உண்மையா யுணர்வாயவ் வுணர்வொளியா
யவ்வொளிக்கு ளொளிவா யெங்கும்
அண்மையாய் சேய்மையதா யருமையா
யெளிமையதாய் யகிலந்தானாய்
பெண்மையுமாண வமயுவலியு மல்லாதா
யெல்லாமாய் பேசற் கொண்ணு
தண்மையா யெங்குநிறை பரம்பொருளா
கியபதியைத் தாழ்ந்து வாழ்வோம்.
......

"சின்ன சீரு'' வைப் பரிசோதித்துப் பதிப்பித்தவர் யாழ்ப்பாணப் பரிகாரி மரைக்காயர் என்ற உதுமான் லெப்பையின் குமாரர் பக்கீர் முகிய்யிதீன் என்பவராவார். அது ஹிஜ்ரி 1272-துல் ஹஜ்ஜி (கி.பி. 1856)-ல் வெளியிடப் பட்டுள்ளது.



**கவிஞர் நூஹ் வலியுல்லா**

காயல்பட்டணத்தில் பிறந்து ஹிஜ்ரி 1156 றபீஉல் அவ்வல் 24-ல் நாஞ்சில் நாட்டைச் சேர்ந்த பூவாறில் காமாகி அங்கேயே அடங்கப்பட்டிருக்கும் நூஹ் வலியுல்லா அவர்களின் ''வேத புறானம்'' தமிழ் முஸ்லிம் உலகெங்கும் புகழ் பெற்று விளங்கும் ஒரு அரிய காப்பியம். 21 பாடல் களையும் 474 பாடல்களையும் கொண்ட காப்பியம் இது. 'இல்முன்னிஸா' என்பது 'வேதபுராணத்' திலுள்ள படலங் களில் ஒன்று. இது பெண்கள் சம்பந்தமான மடலம்.ஊடல் கூடல் பற்றி ஞான வழி நின்று பல கருத்துகளை கூறியுள் ளார்கள் கவிஞர் வலி நாயகம் அவர்கள். இது பற்றி ''கலைக்களஞ்சியம்' 194 -வது பக்கத்தில் பின்வருல் குறிப்பு காணப்படுகிறது.

நூஹ் வலியுல்லா அவர்கள் 'இல்முந்நிஸா' பாடல் என்ற பெயரில் ஒரு கவினத நூல் இயற்றியுள்ளார்கள். அதில் முதற் சாதிப் பெண்பற்றி பாடியுள்ள ஒரு பாடல் வருமாறு:-

''திருவன அழகு பூத்துத்
தெய்வத் துவமின் ஞர்க்கு
மருமணங் கமழ் கஸ்தூரி
வாசமும் மெய்ய தெல்லாம்
கருணை செங்கமலக் கண்ணுள்
கடிந்தசொல் செவியிற் கொள்ளாள்
தருவெனும் கொடையா ளார்க்கும்
தயவு சற்குணத்தி ஞளே.''

வலியுல்லா அவர்கள் 14 கலைகளிலும் 18 மொழிகளிலும் வல்லவர் ''செப்புமொழி பதினெட்டுடையாள்'' என்டு பாரத நாட்டுக்கு இலக்கணம் கூறுகிறார் பாதியார். அப்படியான 18 மொழிகளையும் பேச எழுத கவிஞர் நாயகம் அவர்களுக்கு தெரிந்திருந்து ஒரு அற்புதமே. காயல்பட்டணம் சதக்கத்துல்லா நாயம் அவர்கள் இடமும் காயல்பட்டணத்தில் பிறந்து பறங்கி பேட்டையில் அடங் கப்பட்டிருக்கும் மஹ்முது தீபி நாயகம் அவர்கள் இடமும் கல்வி கற்று பல துறைகளில் தேர்ச்சி பெற்றார்கள்.

''வேத புராண''த்திலே கபட ஞானிகள் பற்றி பின்வருமாறு எச்சரிக்கிறார்கள் நூஹ்வலி நாயகம் அவர்கள்;-

''கஞ்சாச் சாராய மபினுங்கள்ளுங்
கள்ள மாய்த்தின்று கவிழ்ந்திருந்து
அஞ்ஞா 'முஷாகிதா' தனிலிருந்து
அமுதம் வாங்கினு னுண்டேனென்பர்
நெஞ்சாற் நீர்க்கோழி ஜலத்திற்குள்ளே
நெடுநே ரமாக மூச்சடக்கித்
துஞ்சாய் பெருமூச்சை விட்டதுபோற்
றுய்ய நபியிற சூலோதினர்.''

(முஷாஹிதா-தனிமை)

உண்பது சாராயம், கள்ளு, அபின்; புகைப்பது கஞ்சா. ஆனுல் பேசுவதோ ஞானம். இதைத்தான் போலிவேஷம் எனக்கூறுகிறார்கள் கவிஞர் நாயகம் அவர்கள்.

வரகவி காசீம் புலவரும் கவிஞர் நூஹ் வலியுல்லா அவர்களும் பள்ளித் தோழர்கள். இருவரும் காயல்பட்டணத்திலுள்ள திருவடிக் கவிராயர் இடம் தமிழ்க் கல்வி பயின்று பாண்டித்யம் பெற்றனர். பொன்னுனி அரபுக் கல்லூரியில் சில காலம் தலைமை ஆசிரியராகவும் இருந்து பணிபுரிந்துள்ளார்கள் கவிஞர் நூஹ் வலியுல்லா நாயகம் அவர்கள்.

**வரகவி காஸிம் புலவர் ஒலியுல்லாஹ்:**

காயல்பட்டணத்தில் பிறந்து வாழ்ந்து அங்கேயே ஹிஜ்ரீ 1177 துல்கஃதா 12ல் காலமாகி பெரிய குத்பா பள்ளிக்கு அடுத்துள்ள தைக்காவில் அடங்கப்பட்டிருக்கும் வரகவி காஸிம் புலவர் அவர்களின் 'திருப்புகழ்' தமிழ் கூறும் நல்லுலகெங்கும் புகழ் பெற்ற ஒரு காப்பியம் இப் பெரும் புலவர் பற்றி ''கலைக் களஞ்சியம்'' 433 வது பக்கத்தில் பின்வரும் குறிப்பு காணப்படுகிறது:-

''காஸிம் புலவர் (கூ. 17 ஆம் நூ) காயல்பட்டினத்தை சேர்ந்தவர். சிறந்த தமிழ்புலவர். பல்வகைச் செய்யுள்களு மியற்றியுள்ளார். இவர் முகம்மது (ஸல்) அவர்களை தமிழிலே பாடிய சந்தபாக்கள் 'திருப்புகழே' ன வழங்குகின்றன. இப்பாக்கள் செம்பகமாக அமைந்தவை என சவ்வர்துப் புலவர் பாடியிருக்கிறார்''



காஸிம் புலவர் காயல்பட்டணத்தில் திருவடிக்கவிராயர் இடம் கல்வி பயின்றுக் கொண்டிருந்தார். ஒரு நாள் கவிராயர் அருணகிரி நாதரின் 'திருப்புகழை' பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அதிலுள்ள சொன்னயத்திலும் பொருள் நயத்திலும் சொக்கி இருந்த கவிராயர் 'திருப்புகழை' ப்போன்றுஒரு நூல் யாராலும் கொண்டு வர முடியாது என ஒரு முறைக்கு பல முறை சொல்லிக் கொண்டிருந்தார். மாணவராக இருந்த காஸிம் புலவர் 'என்னால் முடியும்' என்றார்கள். ''நீ எங்கே? அருணகிரி நாதர் எங்கே? உன்னுல் முடியாது காஸிம்!'' என்று கவிராயர் எவ்வளவோ தடுத்தும், ''உங்கள் ஆசி இருந்தால் என்னுல் முடியும்' என்று பிடிவாதமாகக் காஸிம் புலவர் கூறவே, கவிராயர் ஆசி கூறி அனுமதியளித்தார்.

காயல்பட்டணம் குத்பா பெரிய பள்ளியில் பல நாட்களாக தவமிருந்தார் காஸிம் புலவர். தலைப்பு அடியின் தலைப்புச் சொல்லை எம் பெருமானுர் (ஸல்) அவர்கள் சொல்லித்தர வேண்டுமென்பதுதான் அவர்களின் தவத்தின் நோக்கம். ஒரு நாள் பெருமானுர் (ஸல்) அவர்கள்தோன்றி 'பகரும்' எனக் கூறி பின்வருமாறு முதல் அடியை ஆரம்பிக்கிறார் காஸிம் புலவர் பெருமான்:-

''பகருமுருவிழி அருவிலி வெருவிலி
சிறிது மொருதலை பயிலிலி துயிலிலி
பருவி ஞுணர்விலி துணையிலி இணையிலி விரிவான'

இப்படியே 141திருப்பாக்களைக் கொண்ட ''திருப்புகழை' ப்பாடி முடித்து திருவடிக் கவிராயரிடம் சமர்பித்ததும் கவிராயர் முழுதும் படித்து அகமகிழ்ந்து பின்வரும் சாற்றுக்கவியை எழுதிக் கொடுத்தார்

''வடிகட்டுச் சங்கத் தமிழ்ப்புலவீ
ரேழுவான் கடந்த
முடிகட் டழகர் திருப்புகழ்
வாரி முகந்துகொண்டு
படிகட்டுலகப் பரப்பை யெல்லாஞ்
சுற்றிப் பார்த்துவிண்மேற்
கொடி கட்டித் தாவுநல் காசீம்
புலவர் கொழுங்கவியே.,'

தனக்குவமையில்லாத தனிப்பெரும் பரம்பொருளின் திருவருளால் பாரகத்தில் தோன்றிய திருநபியை 'குறைஷி' குலதிலக மதின நகர்தனில் அரசு புரியும் முகம்மது நபி இறசூலே' என வியந்து விளித்து வேண்டுகிறார்.

**நாட்டுப்பற்று:**

காசிம் புலவர் நாட்டுப் பற்றும் மொழிப்பற்றும் மிகுந்து விளங்குகின்றார். கோசல நாட்டை வர்ணிக்க வந்த கம்பர் 'காவிரி நாடன்ன கழனி நாடு' எனக் கூறு வதைப் பாராட்டுவர். சீறுபாடிய செந்தமிழ் தமிழ் புலவர் உமறும் நாட்டுப்பற்றை நன்கு புலப்படுத்துகின்றார். காசிம் புலவர் அரபுநாட்டுப் பாலைவனத்திலே தண்டமிழ் நாட்டுச் சோலை வளத்தைக் காட்டுகின்றார்.

திருநபி பிறந்து வளர்ந்த மக்கமா நகரத்தையும் வாழ்ந்து சிறந்த மதினமா நகரத்தையும் வர்ணிக்கும் போது தமிழ்நாட்டுத் திருநெல்வேலியாகவும் மதுரையாக வும் தீட்டி மகிழ்கின்றார்.

''சலசமுகை கிழியவாறு கால் வண்டுழப்ப அழி
நறவு அருவிகடவுள் நதி நீரென்று வட்ட வளர்
சடைகள் பிணிமுடவிய நென்மூடெங்கும் முத்துக வெண்
நிலவாலே
சலில மலர் குமுத நறுநீலங் கறித் தெருமை
முலை முறுகி ஒழுகிவிடு பாலுண்டு அனப்பெடைகள்
சலசரமொய் பழன மதிஞ மண்டலத்துறையும்
இறசூலே''30

தாமரை முகை அவிழும்படி வண்டுகள் இசை எழுப்பி இதழ் விரிக்கின்றன. மலர் சிந்தும் தேன் ஆறுகப் பாய்கிறது; நெற்கள் தழைத்து வளர்ந்து நன்ருக விளைந்து முத்துக்களைச் சிந்துகின்றன. நீர்ப்பூக்கள்,



குமுதம், குவளை முதலிய மலர்கள் மலர்ந்துள்ளன. தேன் பிலிற்றும் இந்நறுமலர்களைக் கறவை எருமைகள் கடித்து வயிறு புடைக்கத் தின்னுகின்றன. கன்று முட்டா மலே மடிபெருகிக் காம்பு முறுகி பால் சுரக்கின்றது. வாவியில் நீந்தும் அன்னப்பேடுகள் தண்ணீரைப் பிரித்துப் பாலருந்துகின்றன. இப்பகுதியில் தாமரை,குமுதம் குவளை முதலிய மலர்களும், நெல்லும், அன்னப்புள்ளும் எருமை யும் காட்சி வழங்கின்றன. இவை தமிழ் நாட்டிலே உள்ளவை பாலைப்பொருட்களல்ல.

**மொழிப் பற்று :**

''சீர் பெறுந் தமிழ்
''பாலைத் தேனைப் பாகைப் போல், ஒப்பார்
சொல் பாடற் தமிழ் மாலை''
''பசிய தமிழ் வலர்
தண்டமிழ் தெரிபுலவர்

முதலிய தொடர்களால் தமிழின் இனிமையையும் தமிழ் நூல்களின் அருமையையும் தமிழ்ப் புலவர்களின் பெருமை யையும் விதந்துரைக்கின்ருர்.

இலக்கியப் பேழையாக இன்பச் சோலையாக அருட் பெருக்காக இருக்கும் திருப்புகழைப் படிப்பதனுல் ஏற்படும் பெரும் பயன்களைப் பின்வரும் பாடல் உணர்த்தும்.

''பார்பெறுந் தண்டாச் செல்வப் பயன்தரும் கல்வி யுண்டாம் ஏர்பெறுஞ் சுவனத்(து) உய்க்கும் இன்ப வீடெய்தும் மற்றும் கார்பெறும் செங்கையெங்கள் கபீ(பு) இறசூலுல்லா மேல் சீர்பெறும் தமிழால் சொன்ன திருப் புகழ் கூறு வோர்க்கே.'' நாமும் நாளும் படித்து நற் பயன் பெறுவோமா!

**உமறு வலியுல்லா நாயகம்**

தாயல்பட்டணத்தில் ஹிஜ்ரி 1216 துல்கஃதா 14-ல் மரணமாகி அங்கேயே அடக்கப் பட்டிருக்கும் உமறு வலி யுல்லா நாயகம் அவர்கள் அரபியிலும் தமிழிலும் பெரும் புலவர். மதீனவில் ஐந்து வருட காலம்'போதனாசிரியராக

இருந்துள்ளார்கள். அச்சக்கரையிலுள்ள சாலிஹ்மலையில் 14 வருட காலம் கடும் தவம் புரிந்துள்ளாரகள். அவர்க ளுக்கு ஆண் மக்கள் ஆறு; மகள் ஒன்று. தைக்காசாஹிபு நாயகம் என்று பெரும் புகழ் பெற்ற தைக்கா ஷெய்கப்துல் காதிர் நாயகம் அவர்கள் உமறு வலியுல்லாஹ் அவர்களின் ஆண் மக்களில் ஒருவர். இரத்தினக்கல் வாணிபத் தொழி லிலும் ஈடுபட்டிருந்தார்கள். வலி நாயகம் அவர்களின் அரபிக் கவிதைகளிற் சில,அரபு நாடுகளிலுள்ள கலாசாலை களில் இலக்கியப் பாடங்களாகப் போதித்து வரப்படுகின் றன. அரபுகள் மத்தியில் நாயகம் அவர்களுக்குத் தனிமதிப் புண்டு.

''திருமெஞ்ஞானப் புலம்பல்' என்று போற்றப்படும் அவர்களின் ஞானக் கவிதைகள் தமிழ்க் கவிதைகளில் தலை சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. அவற்றிலிருந்து சில அடிகளை இதனடியில் தருகிறேன்:-

'எல்லாருங் கூடி யிருக்குங் களரியிலே
வல்லானைக் கண்டு மகிழ்ந்திருப்ப தெந்நாளோ?

(2)

''பொன்னாசை மண்ணாசை பெண்ணாசை மேவாமால்
தன்னாசை யாலுளைந்து சார்ந்திருப்ப தெந்நாளோ?

(3)

''உன்னாசை யென்னாசை யொன்றோடொன்று பிணங்காமல்
உன்னாசை யையுணர்த்தி யொடுங்குவது மெந்நாளோ?

(4)

'காணுஞ் சொருபமெல்லாங் கத்தன் 'மலுஹரெ'ன்று
பேணி 'ஷுஹூது'செய்து பெலப்படும்நாளெந்நாளோ?

இப்படியாக 115 திருப்பாக்கள் பாடியுள்ளார்கள் உமறுவலியுல்லாஹ் நாயகம்அவர்கள்.''கல்பைக்கழுவினால் கரை சேரலாம்'' என்று தொடங்கும் பத்து அடிகளை



கொண்ட ஒரு கீர்த்தனையும் நாயகம் அவர்கள் பாடியுள் ளார்கள். அரபியில் அவர்கள் இயற்றிய கவிதைகளில் தலை சிறந்தவை ''அல்லபல் அலிபு'' ம் ''இலாஹீ கம் துபக்கீனி'' யுமாகும். 51 வருட காலம் வாழ்ந்த வலிநாய கம் அவர்கள் பெரும் வித்தகராகவும், வர்த்தகராகவும் இருந்து இகபரம் இரண்டுக்கும் பெரும் பணி புரிந்துள்ளார் கள்.

**அருள்வாக்கு ஷேக்னாப் புலவர்**

இவரின் இயற் பெயர் ஷெய்கப்துல் காதிர். தந்தை யின் பெயர் நெசவு சம்சுத்தீன். காலங்குடியிருப்பு இலக் கண வியாக்கியான சமஸ்கிருத பண்டிதர் மகா வித்வான் மீறான் கனி புலவரிடத்தில் படித்தவர், 190 பாடல்களைக் கொண்ட ''தருமஷபா அத்து மாலை'' யைப்பாடியுள்ளார் இதற்குமுன் நூலளித்தவர் 'காயல்பட்டணம் உமறுலெப்பை மைந்தர் வேதவாய்மைப் புலவர் நூஹ் லெப்பை என்பவ ராகும். இதற்கு தியாகமீந்தவரின் பெயரை ஜெகதலம் புகழும் காயல்பட்டணம் சுலைமான் லெப்பை மகன் மகு தூம் பிள்ளை மகன் சம்சுத்தீன் மகன் ஷெய்கப்துல் காதிர் என்று இந்த நூலில் கண்டிருக்கிறது. இந்த நூல்இயற்றிய காலம் ஹிஜ்ரி 1239 என்று கூறியுள்ளார் புலவர். 'கடவுள் துதி' யிலிருந்து ஒரு திருப்பாடலை மட்டும் இதனடியில் தருகிறேன்!-

''பொறையறி வொழுக்க மன்பேர்
புகழுயர் செல்வங் கல்வி
நிறை நெறி வணக்கம் யாவு
நிரம்பிய மத்தூ சென்போ
னறைசெறி சுவனம் பெற்ற
நற்சரி தத்தைப் பாட
விறைவனே மறுவொன்றில்லா
வேகனே துணை செய் வாயே''

இதே காலத்திலே வாழ்ந்தவர்தான், புலவர் நாயகம் என்று புகழ்பெற்ற ஷெய்கப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர், அவர்களையும் 'ஷேக்னாப் புலவர்' என்று மக்கள் அழைத்தனர். இவ்விருவரும் வேறு என்ப தற்கு இந்தக் குறிப்பு கொடுத்துள்ளேன்.

**புலவர் நாயகம் ஒலியுல்லாஹ் :**

இயற்பெயர் ஷெய்கப்துல் காதிர் நயினார் லெப்பை இவர் பிறந்த ஊர் காயல்பட்டினம். தந்தையின் பெயர் ஹபீபு முஹம்மது மரைக்காயர். தந்தை ஒரு பிரபல இரத்தினக்கல் வியாபாரி.

கவிச்சக்கரவர்த்தி கம்பனை விட அதிகமானபாடல்கள் பாடியவர் புலவர் நாயகம் அவர்கள். 6786 திருப்பாடல் களைக் கொண்ட ''புதூஹ்ஷாம்'', 2565 பாடல்களைக் கொண்ட ''காரணப் புராணம்'', 2044 பாடல்களைக் கொண்ட ''திருமணி மாலை' 1340 பாடல்களைக்கொண்ட ''குத்பு நாயகம்'', இவை தவிர ''கோத்திர மாலை'' ''சொர்க்க நீதி'' ''நாகையந்தாதி' ''மக்கா கலம்பகம்'' ''சத்ரு சங்காரம்'' சீட்டு கவி, சித்திர கவி, நாகபந்தம் இப்படியாக பல இலக்கியங்களைப் படைத்துள்ளார்கள்.

'த' என்ற அட்சரத்தை மாத்திரம் உபயோகித்து புலவர் நாயகம் அவர்கள் இயற்றிய வெண்பாவை இதனடியில் தருகிறேன்:-

''தூதாதி தாதுதைத்தே
  தொத்தோதி தத்தை துதி
தாதாதி தத்தத்தித்
  தாதீதா—தாதா
துதைதொத்தத் தத்தத்தா
  தூத்தாதித் தாதீ
ததைதத்தித் தித்தத்தேதா''

''நாகையந்தாதி'' யிலிருந்து ஒரு பாடல் இதோ:-

காத்திகைத் தேதத்த தத்தை
  கொக் கொக்கக் கதத்துக் கொத்தி
காத்திகை தேதத்த கத்தி
  தக்கீ தத்த கத்துக் கொத்துக்
காத்திகைத் தோதொத்தித் தாதுகத்
தித்தித்த காதத்தைத் தெக்
  காத்திகைத் தேதத்தித் தூதத்த
நாகைக் கத்தா துதியே''



''புதூஹ்ஷாம்'' புராணம்ஹிஜ்ரி1236-ல் பூர்த்தி செய்யப் பட்டது இதிலுள்ள 6786 விருத்தப்பாக்களில் 965 விருத்தப் பாக்கள் எம்பெருமானார் (ஸல்) அவர்களின் இறுதி கால சம்பவங்களை எடுத்துக் கூறுகின்றன. உமறுபுலவரின் ''சீறாபுராணத்தில்'' விடுபட்டவை ''சின்ன சீறா'' விலும், அதிலும் விடுபட்டவை ''புதூஹ் ஷாமி'' லும் இடம் பெற் றுள்ளன. இப்படியாக ''சீறாபுராணம்'' புலவர் நாயகம் அவர்களால் முழுமையாக்கப்பட்டது, ''சீறாப்புராண''த் தின் கையெழுத்துப்பிரதிகளைஎல்லாம் திரட்டி அச்சியற்றி வெளியிட்ட பெருமையும் புலவர் நாயகம் அவர்களையே சாரும்.

இஸ்லாத்தைப் பற்றியும் இஸ்லாத்தில் தோன்றிய பெரியார்களைப் பற்றியும் பேசுவனவாக அமைந்துள்ளன இஸ்லாமிய அடிப்படையில்தோன்றிய தமிழ்இலக்கியங்கள். இக்கூற்றுக்கு சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்த காப்பி யங்களுள் ஒன்று 'திருக்காரணப்புராணம்'. இங்கே ஒரு பாடலில் இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுள் ஒன்று ஒரு பாடலில் மிகச் சிறப்பாக அமைக்கப்பட்டிருப் பதைக் காணலாம். இஸ்லாத்தில் முக்கிய இடத்தை வகிப்பது நம்பிக்கை. அல்லாஹ் மீதும், மலாயிக்கா என் னும் வானவர்கள் மீதும், நபிமார் என்னும் தீர்க்கதரிசிகள் மீதும், இறுதி நாள் மீதும். நன்மைதீமைகள் அல்லாஹ் பக் கல் நின்றும் உள்ளவை என்பதன் மீதும் விசுவாசம் கொள் வது முதன்மையான தாகும். இதனையே அரபு மொழியில்

ஆமன்து பில்லாஹி வமலா இக்கதிஹி வறுஸுலிஹி
வல்யவ் மல்ஆகிரி வல்கத்றி கைறிஹி
வஷற்றிஹி மினல்லாஹி தஆலா

என உச்சரிப்பர். இதனைத் தமிழில் மொழி பெயர்த்து சேகுனாப் புலவர் தமது திருக்காரணப் புராணத்தில் ஒரு பாடலாக அமைத்துள்ளார். இவ்வறபு வாக்கியத்தைத் தமிழில் மொழி பெயர்க்கும் பொழுது நபி என்னும் ஒரே ஒரு அறபுச் சொல்லை மாத்திரமே பாடலில் இடம் பெறச் செய்துள்ளார். இக்கருத்துக்களடங்கிய பாடல் இதுதான்,

நாயகனொருவனுண்டு நனிபுகழிமையோருண்டுந்
தூயநால் வேதமுண்டுந் தூலக்கிய நபிமாருண்டு
மாயதோர் காலமுண்டு மடர்வினையிரண்டுண்டென்று
நேயநல் லுறுதியுள்ளோர் நினைப்பரோ வேறுமாதோ.

(மேலை நாகூர்புக்க படலம் : 42)

அல்குர்ஆன் கருத்துகளும்ஆங்காங்கே திருக்காரணப் புராணத்தில்இடம்பெற்றுள்ளன. ஆகாயம், ஒளிப்பரப்பும் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மழை, நிலம், கடல், மலை முதலிய அனைத்தையும் படைத்தவன் இறைவனான அல்லாஹ்வே. அவனே அவ்வவற்றிற்குரிய நிலை பெயராமல் இயங்கச்செய்யும் ஆற்றல்படைத்தவன். அவனல்லால் வேறு நாயகன் இல்லை.சிலைகளுக்கு எவ்வித சக்தியும் இல்லை. இத்தகைய கருத்துக்களை அமைத்து இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

வானமும் கதிரும் சோதி மதியமு முடுவுங் காரும்
மானிலம் கடலும் வெற்பு மற்றுள படைப்புந் தத்தங்
கோனிலை பெயரா தாகக் கொண்டவனொருவனல்லால்
தானிலை யெடாத வன்கல் லுருவினந் தகைய தன்றால்

(புத்துக்கள் வசனித்த படலம் : 66)

எல்லோராலும் போற்றப்படுபவர் யாவர் என்பதற்கு வரை விலக்கணம் வகுத்துள்ளார் ஆசிரியர் தமது காப்பியமான திருக்காரணப்புராணத்தில். அல்லாஹ்வை தொழுதல் வேண்டும். அவன் கட்டளைக்கிணங்க விரதம் அனுட்டிக்க வேண்டும். அவனை எப்பொழுதும் புகழ்ந்து துதிக்க வேண்டும். நற்குணத்தை உடையவராய் ஒழுகுதல் வேண்டும். நல்லறிவும் நல்லுணர்வும் இருத்தல் வேண்டும் அவனிடத்திலே தான்நாம் அழுது நமது வேண்டுகோளைக் கேட்க வேண்டும். அவன் நாட்டப்படியே எல்லாம் நடைபெறும் என்ற திடமான நம்பிக்கை இருத்தல் வேண்டும். இங்ஙனம் மாதவத்தில் ஈடுபடுவோரை உலகுஎன்றென்றும் போற்றும். இக்கருத்துக்களையே சேகுனாப் புலவர் தமது காப்பியத்தில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.



தொழுகையும் விரதமுந் துதியும் நற்குணத்
தொழுகையும் நல்லறி வுணர்வும் நாதன்பால்
அழுகையு நாட்டமு மணைந்து மாதவத்
தெழுகையுங் கொண்டுல கெவரும் போற்றுவார்

(மதுபான் தண்டனைப் படலம் : 4)

பொறுமையின் சிறப்பு ஒரு பாடலில் போற்றப்பட்டுள்ளது இகழ்ந்தவரையும் வஞ்சித்தோரையும் தீமை புரிந்தவரையும் பாவ நெறியிற் சென்று குற்றம் புரிந்தவரையும் அறிவிற்கப்பாற் பட்ட கிரியைகளில் ஈடுபட்டோரையும் நல்லறிவுப் புகட்டி நல்லொழுக்கம் உடையவராகச் செய்யும் பணி போற்றற்குரிய பெரும் பணியாகும். அங்ஙனம் அவர்களுக்கு நல்வழி காட்டுமாறு எல்லாம் வல்ல இறைவனான அல்லாஹ்வை இரந்து கேட்பர். இறைவன் நல்லருள் பாலிக்கவே அவனைப் புகழ்வர். அத்தகையோர் மேலோராவர். அத்தகைய பொறைவுடமையும் பெரிதும் பாராட்டப்பட வேண்டிய தொன்றாகும். அத்தகைய பொறைவுடமையின் சிறப்பை இத்தகையது என்று அளவிட்டுக் கூறமுடியாது என இவ்வாறு ஒரு பாடலில் பொறை நலங் கூறப்பட்டுள்ளது.

இகழ்ந்தவ ரேனும் வஞ்சித் திகலின ரேனும் தீமை
நிகழ்ந்த வரேனும் பாவ நெறியின ரேனும் குற்றம்
அகழ்ந்தவர்க் கறிவு தோன்ற ஆதியை இரந்து கேட்டு
புகழ்ந்தவர் மேலோர் என்னும் பொறைநலம் பகர்தற் பாலேர்

(உபாத்துப் படலம்)

மக்கட் பேற்றின் மகிமை பற்றியும் ஆசிரியர் கூறத்தவற வில்லை. பொன்னை மிகுதியாகப் பெற்றிருந்தாலும் அதனால் எவ்வித பயனுமில்லை. பொருளைத் தேடி பாதுகாத்து வைத்திருந்தாலும் அதனால் எத்தகைய பயனும் ஏற்படுவதில்லை. சொல் வளம் மிக்கவராய்ச் சொல்லாட்சியுடைய வாக்கு வல்லமைப் பெற்றவராய் இருப்பதிலும் எவ்வித பலனுமில்லை. பெரும் புகழை மக்களிடையே தேடிக் கொண்டவராய் இருந்தாலும் அதனால் பெறப்படும் பயன் ஏதுவுமில்லை. நல்லதிர்ஷ்டமும் நல்லபலனும்

உடையவராய் இருந்தாலும் அவற்றால் பெறக்கூடிய நன்மை எதுவும் இல்லை. சிறந்த அறிவினை உடைய பேரறிஞர்ராயினும் அத்தகைய நிலமையினாலும் எவ்வித நற்பலனும் கிடைக்தப் போவதில்லை. இவ்வாறு விவரித்த ஆசிரியர் பயனுடைய ஒன்றையும் குறிப்பிட்டுள்ளார். முற்கூறியவையெல்லாம் இருந்தும் நல்லபலனைத்தருகின்ற புதல்வர் இல்லாவிட்டால் அந்நன்மைகள் வரா என்பதே புலவரின் கொள்கை. இக்கருத்தினையே சேகுனாப்புலவர் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

பொற்பல னுடையரேனும் பொருட்பல னுடையரேனும்
சொற்பல னுடைய ரேனும் துதிபல னுடைய ரேனும்
நற்பல னுடைய ரேனும் நனியறி வுடைய ரேனும்
இற்பல னாகு மைந்தர் இல்லவர் இல்லா ராமே
(லாகூர் புக்க படலம் : 24)

அதே படலத்திலுள்ள மற்றொரு பாடலின் அதே கருத்துக்களை வேறு விதமாகஆசிரியர் குறிப்பிட்டுள்ளதை காணலாம், செல்வத்தை செல்வம் என்று கூறமுடியாது. சீர்மையைச் சீர்மை என்று சொல்ல இயவாது. ஒருவன் பெற்றக் கல்வியை கல்வி என்று குறிப்பிடுவது தவறாகும். இவ்வாறு அவற்றின் பயனின்மையைக் குறிப்பிட்ட ஆசிரியர் அவை பயனுடமை ஆவதற்கு பிள்ளை வரம் வேண்டும் என்று இறைவனைப் பிராத்தித்தல் அவசியம் என்று இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

செல்வமுஞ் செல்வ மன்றே சீர்மையும் சீர்மை யன்றே
கல்வியும் கல்வி யன்றே கைகொள்கா தலனி லாதலால்
நல்வினைப் பயனு முண்டே நாயக ஆதி பாலிற்
பல்வள மக்கள் எற்குப் பயன்பெற விரத்தல் தேண்டும்
(லாகூர் புக்க படலம் : 24



**உதுமான் நயினார்ப்புலவர் :**

இவர் ஏறத்தாழ 100 வருடங்களுக்குமுன் காயல்பட்டினத்திலே பிறந்து வாழ்ந்தவர். தந்தையின் பெயர் ஷாமு நயினா லெப்பை.

முத்து வாணிபம் செய்தார். சென்னையில் வர்த்தகம் செய்து கொண்டிருந்த சந்தர்ப்பத்தில் அங்கேயே திருமணமும் செய்து கொண்டார்.

இவர் 400 வண்ணங்கள், பதங்கள், 'ஸலவாத்து'ப்பாட்டு ஆகியவை பாடியுள்ளார். இவர் பட்ட கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாமல் போகவே சிறை செல்ல நேரிட்டது. சிறையில் அடைப்பட்டுக் கிடந்தசந்தர்ப்பத்தில் "ஆயெந்தன் பொங்காரமே;" என்று கௌதுல் அஃழம் குத்புல் அக்தாப் முஹிய்யித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றழி) அவர்கள் மீது ஒருகவிபாடினர். அதன் காரணமாக குத்பு நாயகம் அவர்கள் கடன் கொடுத்தவர் கனவிலும் சிறை மேலாளர் கனவிலும் தோன்றி நல்லுரைகூற அடுத்த நாளே கடன் கொடுத்தவர் சிறைக்கு நேரில் சென்று புலவரை மீட்டிக் கொண்டு வந்தார் என்று கூறப்படுகிறது.

உதுமான் நயினார்ப்புலவர் சென்னையிலேயே காலமாகி சென்னை அங்கப்ப நாயக்கன் தெருவிலுள்ள மஸ்ஜிதுல் மஃமூர் பள்ளி வாசலில் அடக்கம்செய்யப்பட்டுள்ளார்.

**மாப்பிள்ளை லெப்பை ஆலிம் வலியுல்லாஹ்**

இயற்பெயர் செய்யிது முஹம்மது. தந்தையின் பெயர் வெள்ளை அஹமது லெப்பை ஆலிம். காயல்பட்டினத்தில் ஹிஜ்ரி 1232 முஹற்றம் 18-ல் பிறந்து கீழக்கரையில் ஹிஜ்ரி 1316 ரஜப்பில் காலமான மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் அரபியிலும் அரபுத் தமிழிலும், தமிழிலும் பலவகையான நூல்களைப் படைத்துள்ளார்கள். பாளி, சமஸ்கிருதம். உர்தூ, பாரசீகம் மொழிகளிலும் ஆலிம் அவர்களுக்கு பாண்டித்யம் இருந்தது. அவர்கள் இயற்றிய நூல்களில் சில பின்வருமாறு.

1 பத்ஹுஸ்ஸலாம் 2. பத்ஹுத்தையான் 3. பத்ஹுல் மதீன் 4. மகானீ 5. ஙனீமத்துஸ்ஸாலிகீன் 6. மனாகி

புல் மவாஹிபு 7. மவாகிபுல் மஜீத் 8 அஸ்றாறுஸ்ஸலாத் 9. அஸ்றாருல் மாவாயிமு 10. றாதிபதுல் ஜலாலிய்யா 11. குத்பாநூறானிய்யா 12. குத்பாராபியா 13. மிஃறாஜ் குத்பா 14. ஹத்யா மாலை 15 தலைபாத்திஹா 16. மஃரிபதுத் தாலாட்டு 17. தோழிப் பெண்பதிகம்.

இவைதவிர இமாம் ஹஸன், இமாம் ஹுஸைன், கதீஜா நாயகி, இமாம் ஷாபீ, றிபாயி நாயகம் ஸிந்தாஷா மதார் வலி, தொண்டி அபூபக்கர் வலி நயினார் முகம்மது வலி புகாரித்தங்கள்காயல்பட்டணம்தைக்காசாஹிபு, கீழக்கரை தைக்காசாகிபு சாதுலி நாயகம் ஆகியோர்கள்மீது'மௌலிதுகளும் 'மின்ஹத்துஸ்ஸரந்தீபு மௌலிது' உள்பட வேறுபல புகழ்பாக்களும் இயற்றியுள்ளார்கள்.

திருமக்கா நகரிலே அரபிகள் ஒரு கூட்டம் கூட்டி மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களுக்கு 'குத்புஸ்ஸமான்' என்ற விருதைசூட்டினார்கள். காயல்பட்டணததில்வைத்து 'ஷைகுல் காமில்' என்ற காதிரிய்யா தரீகாவின் உயரிய விருது அவர்களுக்கு வழங்கப்பட்டது. தமிழகத்திலும் இலங்கையிலும் பல அறநிலையங்களை நிறுவியுள்ளார்கள். 33 செய்யுள்களைக் கொண்ட 'ஹத்யா மாலை' யிலிருந்து ஒரு பாட்லை மட்டும் இத்னடியில் தருகிறேன்:-

''கானலைத் தண்ணீ ரெனக்கருதி
 கண்ட பலனேது தாகமல்லால்
மானுர்க் கலவியர் பொருளாசையில்
 மயங்கித் தயங்கியே புத்தியற்று
வீணை யுளறியே வாணுளெல்லாம்
 வெட்டி ஏழவுக்காய்த் தேடித்தேடி
போனுர்கள் கோடி கோடிகோடி
 போன இடமெங்கே? தடங்களெங்கே?''

**கண்ணகுமது மகுதூம் முகம்மது புலவர்**

காயல்பட்டினம் நெசவுத் தெருவிலுள்ள மகுதூம் பிள்ளையின் குமாரரான இவர், 911 திருப்பாக்களைக் கொண்ட ''நூறுமசாலா'' வை இயற்றியுள்ளார். இது



ஹிஜ்ரி 1281-ல் அச்சியிடப்பட்டுள்ளது. 'பத்ஹுல் மிஸ்ரு' என்ற வசன நூலையும் இயற்றியுள்ளார்.

''ஹக்கு பேரில் புகழ்பத்து'' ''ஹக்குபேரில் சதநாமத்துதி'' ''ஹக்கு பேரில் பதிகம்'' மக்காப்பதிகம்'' ''பகுதாதுப் பதிகம்'' ''நாகூர்ப்பதிகம்'' ''காகிறூர்ப்பதிகம்'' ''முஹிய்யிதீன் ஆண்டவர்கள் பேரில் திருப்புகழ்,'' முஹிய்யிதீன ஆண்டவர்கள் பேரில் ஒருபா பஃது' '''திருஞானப்பத்து'' இப்படியாகப் பல பொருள்களிலும் கண்ணகுமது புலவர் காப்பியங்கள் படைத்துள்ளார்.

ஹிஜ்ரி 1270 முதல் 40 வருடகாலமாக தேடுவாரற்றுக் கிடந்த இஸ்லாமியத் தமிழ் நூல்களை எல்லாம் சேகரித்துப் புதுப்பித்துத் தந்துள்ளார் புலவர். சென்னைப் பல்கலைக் கழக புத்தக பரிபாலனத் தலைவராக இருந்து பெரும்பணி புரிந்துள்ளார். ஹிஜ்ரி 1321-ல் அவர் எழுதிய ஒரு பதிப்புரையில் ''இது வரை 20 கோடி வாக்கியங்கள் மட்டில் பலவித பாடல்கள் அச்சிட்டுள்ளோம்'' என்று கூறுவதிலிருந்து அவரின் இலக்கியப் பணியின் பெருமையை அறிய முடிடிறது. இயல், இசை இரண்டிலும்வல்லவர். அறுபதுக்கு மேற்பட்ட இஸ்லாமியத் தமிழ் இலக்கிய நூல்களைப் புதுப்பித்துப் பதிப்பித்துத் தந்துள்ளார். வசன நடையில் குத்பு நாயகம் அவர்களின் சரித்திரத்தையும்எழுதியுள்ளார். அவரின் இலக்கியப்பணி இல்லையெனில் அனேக இலக்கிய நூல்கள் வெளிவர முடியாமல் மூலப்பிரதிகள் குப்பைக்குப் போயிருக்கும். இவருக்கு தமிழ்கூறும் முஸ்லிம் நல்லுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இவரின்'காகிறூர்ப்பதிகத்திலுள்ளகாப்புச் செய்யுளை மட்டும் இதனடியில் தருகிறேன்:-

''சீரார் விளக்கந்தே ரொலிமா ரோடுகலை
நேரார் விளக்குமுளோர் நித்தமுமார்—பேராக
வோதுபுகழ் காகிறெனு மூர்ப்பதிக மொன்றுசொலக்
காதலுறு மாதியருள் காப்பு''.

## விளக்கு முகம்மது முஹியித்தீன் லெப்பை ஹாஜியார் புலவர்

காயல்பட்டினம் விளக்கு அஹமது முஹியித்தீன் லெப்பையின் திருக்குமாராகிய விளக்கு முகம்மது முஹியித்தீன் லெப்பை ஹாஜியார் புலவர் படைத்துள்ள "சாதுலி நாயகம்" ஒரு அருமையான காப்பியம். இதுயாழ்ப்பாணம் மு. சுலைமான் லெப்பைப்புலவரால் பரிசோதித்து 1914 வெளியிடம்பட்டுள்ளது. சித்திரகவிகளும் வண்ணங்களும் ஏராளமாகப் பாடியுள்ளார் புலவர்,

1. நபிநாயகம் பேரிற்பாடல்கள் 2. அறிய விதியான நபிமார் நாமங்கள் 3. நபி நாயகம் தலைமுறை 4. பதுரிய்யீன்கள் பேரிற் பாடல், 5, முஹிய்த்தீன் ஆண்டவர்கள் பேரில் முனுஜாத்து 6. சாதுலி நாயகம் பேரிற் பஃறொடை வெண்பா 7. முஹம்மது பாஸியவர்கள் பேறிர் பதியவர்கள் பேரிற் பதிகம் 8. முஹம்மது பாஸியவர்கள்பேரில் தகவல் 9. புகாரித்தங்கள் பேரில் விருத்தம் 10. சுலைமான் லெப்பை வலியுல்லா பேரில் முனுஜாத்து 11. பெரிய ஷெய்குணு பேரிற் பதிகம் 12. சின்ன ஷெய்குனு பேரிற் விருத்தம் 13. சாதுலி நாயகம் பேரில்கீர்த்தனம் 14 செய்திப்ருஹிம் வலியுல்லாஹ்பேரில் கீர்ததனம்15. உமரொலியுல்லா பேரிற் கீர்த்தனம்.

இப்படியாக பல பொருள்களிலும் இலங்கியப் படைப்புகளை ஆக்கித்தந்துள்ளார் விளக்கு ஹாஜியார் புலவர்.

"சாதுலி நாயக" த்திவிருந்து ஒரு பாடலை மட்டும் இதனடியில் தருகிறேன்:-

"ஒருமைமயி னெழுந்த நாட்டத்
துயர்மொழித் தொகையி னெல்லா
மருமையிற் படைத்துச் சீவ
வந்தரங் கத்தின் கோன்மைப்
பெருமையிற் புரிந்து வாய்மை
பிசகற விளங்கா நிற்குந்
திருமயப் பொருளைப் போற்றி
தினந்தினம் வாழ்த்து வாமே"



## அஹமது நயினர் லெப்பை ஆலிம் புலவர்

காயல்பட்டணம் சின்னநெயினுர் லெப்பை ஆலிமின் குமாரராகிய இவர் "தாய் மகளேசல்" என்ற நூலை இயற்றியவராவார். இது தாய்க்கும் மரணமான அவளின் மகளுக்குமிடையில் கனவில் நடைபெற்றதாகக் கூறப்படும் ஒரு உரையாடல்.

"மையவெல்லுங் குழல்களெல்லாம் வன்னி
நெருப் பெரிவதேது மகளே!
அதுகேள் வார்த்துமுடிமலர் சூடிவிளையாடி
வெளியே நின்றேன் ருயே!

"உன் கருங்கூந்தல் ஏன் வெந்து காணப்படுகிறது" என தாய் கேட்க "அநுவா! நான் வார்ந்து பூ அணிந்து கொண்டை முடித்து நாலு பேருக்கு முன்காட்சிகொடுத்து பலன் அது தாயே!" எனமகள் விடை பகர்கிறாள்.

## காயல்பட்டணம் ஷிஹாபுத்தீன் சாஹிபு.

183 திருப்பாக்களைக் கொண்ட "பீருசா அம்மாள் ஹதிது" என்ற கவிதையை இயற்றியவர். அதிலுள்ள 'காப்பு' செய்யுள் வருமாறு:-

"பெண்ணினத்தோரீடேற்றம்பெற்றுருக்கப் பேசுகின்ற
நன்னுதலாள் பீருசா நற்கதையை - வண்ணமுடன்
ஞாலந் தனிலெளியே னன்பா யுரைப்பதற்குக்
காலமணு காக்கடவுள் காப்பு."

**ஜைனுத்தீன் புலவர்**

காயல்பட்டணம் உவைஸ் நயினார் குமாரராகிய ஜைனுத்தீன் புலவர் நபிகள் நாயகம் (ஸல்)அவர்கள் பேரில் 75 பாடல்களைக் கொண்ட ஒரு 'முனாஜாத்' தும் பல பல பொருள்களில் கீர்த்தனைகளும் பாடியுள்ளார்கள். ஒரு காப்புச் செய்யுள் இதோ:-

''திருநனி வதித்தவச்ர தேகசோ தியிற்கஸ்தூரி
மருநனி தலைப்பெய்தெங்கு மணக்குமெவ் வுயிர்
களிற்குங்
கருநனி முகம்மதெங்கோன் கருணைவேட் டிசையிப்பா விற்
கொருநனி தனிவஸ்தாய யுவுடையவ காப்பு நீயே''

மேற்கண்ட புலவர்கள் தவிர வேறுபல புலவர்களும் காயல்பட்டணத்தில் நூற்றுக்கணக்கானவர் வாழ்ந்து பல இலக்கியங்கள் படைத்துள்ளனர். அவற்றில் பல செல்லுக்கிரையாகிவிட்டன. மற்றும் பல இலக்கியங்கள் தேடுவாரற்று கிடக்கின்றன. இவற்றையெல்லாம் தேடிச் சேகரிக்க ஒரு கூட்டு முயற்சியாலே முடியும். என்சொந்த முயற்சியால் திரட்டிய மற்றும் சில காயல் புலவர்களைப் பற்றிய நாமாவளிகளை மட்டும் இதனடியில் தருகிறேன்.

**காயல்பட்டணம் ஷாமு நயினார் லெப்பை ஆலிம்புலவர்**

''நெஞ்சறிவு மாலை'' யைப்பாடியவர். 50 திருப்பாக்களைக் கொண்ட நூல் இது. ஹிஜ்ரி 1300-ல் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

**காயல்பட்டணம்மஃமூதுப் புலவர்**

பீர் முகம்மதின் புதல்வராகிய இவர் ''மதுரவாக்கிய கீர்த்தனா சங்கிரகம்'' இயற்றியுள்ளார்.

**காயல்பட்டணம் செய்யிது முகம்மதுல் காதிரீ**

இவரை 'ஷெய்கு முகம்மது ஹக்கீம் சாஹிபு' என அழைப்பர். ''ஞான பிரசன்னாக ரத்தினம்'' இயற்றியவர்



**காயல்பட்டணம் தைக்கா முகிய்யிதீன் லெப்பை ஆலிம் புலவர்**

தைக்கா உமறு வலியுல்லாஅவர்களின் திருமகனாராகி தைக்கா முகியித்தீன் லெப்பை ஆலிம் புலவர், பல கீர்த்தனைகளை பாடியுள்ளார்.

**காயல்பட்டணம் முகம்மது லெப்பை ஆலிம்**

செய்யிது முகம்மது புகாரித்தளங்கள் மீது அரபுத்தமிழில் ''ஆனந்தக்களிப்பு'' பாடியுள்ளார்.

**காயல்பட்டணம் சின்ன உவைசுனா லெப்பை ஆலிம்**

அரபுத் தமிழில் ''ஹகீகத்து மாலை'' இயற்றியுள்ளார்.

**காயல்பட்டணம் ஷெய்கப்துல்காதிர் லெப்பை ஆலிம் ஹாஜி**

'வெள்ளாட்டி மஸ் அலா' என்னும் நூலை இயற்றியவர் இதில் 659 கேள்விகளும் அவற்றிற்கு விடைகளும் இடம் பெற்றுள்ளன.

திருக்குர்ஆனுக்கு முதன் முதலாக அரபுத்தமிழ் விரிவுரை எழுதியவர்கள் காயல்பட்டணத்திலுள்ள பின்வரும் மூன்று அறிஞர்களாவார்.

**காயல்ப்பட்டணம் ஹபீபு முகம்மதுஆலிம்**

ஹிஜ்ரி 1296-ல் அரபுத்தமிழில் ஒரு 'தஃப்ஸீர்' வெளியிட்டார்கள். இதன் பெயர் ''புதுஹாதுற் றஹ்மானிய்யா பீதஃப்ஸீர்லாமிற்றப்பானிய்யா'' என்பது. இந்நூலில் திரு குர்ஆன் வாசகங்கள் அரபு மொழியில் பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு வரியின் அடியிலும் அந்தந்த வரியின் தமிழாக்கம் அரபுத் தமிழில் காணப்படுகிறது. ஒவ்வொரு பக்கத்தின் விளிம்பிலும் விரிவான வியாக்கியானங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பக்கத்தில் மூன்றில் ஒருபகுதி இவ்வியாக்கியானங்களால் நிரம்பியிருக்கிறது.

**காயல்பட்டணம் ஹாபிழ் முகம்மது அல்காஹிரீ**

இவ்வறிஞர் எழுதிய தஃப்ஸீர் கி. பி. 1884 - ல் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

**காயல்பட்டணம் ஆலிம் பாழில் நூஹ்**

இவ்வறிஞர் எழுதிய தஃப்ஸீர் கி. பி. 1911 ல் வெளியிடப்பட்டுள்ளது.

தமிழ் மணம் பரப்பிய காயல் செம்மல்கள் இன்னும் பலர் உளர். அன்னார்களைப் பற்றிய விரிவான ஆராய்ச்சிகள் அவசியம். இஸ்லாமியத் தமிழ் ஆய்வுக் குழுவினர் இதில் போதிய கவனம் செலுத்துவார்கள் என்றும் இதற்கு இஸ்லாமியப் புலவர்களும் தமிழக அரசும் எல்லா வகைகளிலும் துணை புரிவார்களென்றும் நம்புகிறேன்.

காயல்பட்டின மார்க்க அறிஞர்கள் அரபித்தமிழை உண்டாக்கி இஸ்லாமிய இலக்கியத்தை அதில் மலரச்செய்தனர். அரபித்தமிழ் புதிய மொழி அன்று. அது தமிழ் தான். காயல்பட்டின அறிஞர்கள் எழுதிய அரபித்தமிழ் நூல்கள் சிலவற்றின் பெயர் பட்டியல்:

**திருக்குர்ஆன் சம்பந்தப்பட்டவை**

புதூ ஹாத்தூர் ரஹ்மானிய்யா
பி தப்ஸீரி கலாமிர் ரப்பானிய்யா — ஹபீபு முஹம்மது ஆலிம்
தப்ஸீர் பத்ஹுர் ரஹீம் — ,,
தப்ஸீர் பத்ஹுல் கரீம் — நூகுலெப்பை ஆலிம் இப்னு அப்துல் காதிர் ஆலிம்

**நபிபெருமானார் சம்பந்தப்பட்டவை :**

பத்ஹுல் மஜீது — நூகு லெப்பை ஆலிம் இப்னு அப்துல் காதிர் ஆலிம்
பத்ரிய்யா வ உஹதிய்யா — ,,
கஸீதத்துல் புர்தா தர்ஜமா — ,,
நபஹாத்துல் இத்ரிய்யா பீ ஷரஹில் வித்ரிய்யா (வித்ரிய்யா விளக்க உரை) - ,,



தர்ஜமத்து இக்தில் ஜவுஹர் (பர்ஸஞ்சி மௌலிது தர்ஜமா) —முஹம்மது அபூபக்கர் மிஸ்கீன் ஆலிம்

**மார்க்க ஒழுக்க சம்பந்தமானவை :**

பத்ஹுத்தையான் —மாப்பிள்ளை லெப்பை ஆலிம் ஒலி
மகானி — ,,
பத்ஹுல் மதீன் — ,,
பத்ஹுஸ் ஸலாம் — ,,
மஸாயிலுத்தீன் (4000 மஸ் அலாக்கள் அடங்கியது) — ஹாபிஸ் முஹம்மது லெப்பை ஆலிம்
பயானுத்தீன் — ஷைகு அப்துல் காதிர் ஒலி
நான்கு மதுஹபு விளக்கம் — பளுலுல்லாஹ் ஹபீப் முஹம்மது ஆலிம்
ஹிதாயத்துந் நஜாத் பீஹகீகத் அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் — செய்யிது முஹம்மது ஹுசைன் ஆலிம்
புதூ குஷ் ஸலாம் — செய்யிது முஹம்மது லெப்பை
பத்ஹுல் மதீன் பீ பயானி அர்கானுத்தீன் — ,,
பத்ஹுல் மஜீது —நூகுலெப்பை ஆலிம் இப்னு அப்துல் காதிர் ஆலிம்
துஹ் பத்துல் தாமியீன் பி தர்ஜீமத்தி பத்ஹில் முயீன — செண்ட் அஹ்மது முஹியித்தீன் ஆலிம்
மனாஸிக்குல் ஹஜ் —முஹம்மது லெப்பைஆலிம்

**ஜீவிய சரிதை :**

மராகிபுல் மவாஹிபு பீ மனாக்கி பி உலில் மதாகிபு (நான்கு இமாம்கள் சரிதை) —மாப்பிள்ளை லெப்பை ஆலிம் ஒலி
தப்ரீ ஜில் காத்திர் பீ மனாக்கி பி ஷைகு அப்துல் காதிர் (கௌது அஃலம் காரணச் சரிதை) —முஹம்மது சதக்கத்துல்லா லெப்பை ஆலிம்

மலூனத்து லௌதியா லிகுர்ராயி
மனாக்கிபுல் கௌதியா —ஷெய்கு ஹிழுரு முஹம்மது
(அரபியிலும் அரபித்தமிழிலும்) லெப்பை ஆலிம்
கஸஸுல் ஔலியா —நூகு லெப்பை ஆலிம் இப்னு
(ஔலியாக்கள் சரிதை) அப்துல் காதிர் ஆலிம்
மின்ஹாத்துல் ஜவாது பீ — ,,
மனாக்கிபுல் அஜ்வாத்
நபஹாத்துல் அஃபர் பீ மனாக்கிபி
குத்புல் அக்பர் (ஷாதுலி நாயகம் சரிதை) ,,

## மெஞ்ஞான நூற்கள்

இளாமுல்யவாயிது நிளாமில் அகாயித்—மஹ்மூது தீபிஒலி
ஐனுத்தவுக்கு ,,
ஹக்கீகத்துல் அஸ்ரார் (மிக உயர்ந்த ,,
தஸவ்வுப்)
மிர்அத்துல் முஹக்கிகீன் ரிஸாலா ,,
இன்ஸானுல் காமீல் விரிவுரை — ,,
துஹ்பத்துல் கிராம பீ இன்ஜா — நூகு லெப்பை ஆலிம்
ருல் மராம்(மூன்று வால்யூம்கள்) இப்னு அப்துல் காதிர் ஆலிம்
கனீமத்துஸ் ஸாலிகீன் — மாப்பிள்ளை லெப்பை ஆலிம் ஒலி
மஜ்மூஉஸ் ஸுலூக்கு —இவ்வூர் பெரியார் ஒருவர்
மிப்தாஹுர் ரஹ்மான் —ஹபிபு முஹம்மது ஆலிம்
மஆரிபுல் வுஜூது — ஷைகு அஹ்மது நுஸ்கி
ஷுஅபுத்தீன் —ஷைகு அப்துல்காதிர் ஒலி
ஜலாலியா ராத்திபு பைத்துகள் —மாப்பிள்ளை லெப்பை
விளக்கம் ஆலிம் ஒலி
அர்ராத்திபத்துல் அலிய்யதுஸ் — ஷைகு அப்துல் காதிர்
ஸுபிய்யா சூபி
ராத்திப் ஹத்தாது தர்ஜமா ,,



## பாடல்கள்

சின்ன ஹதீது மாலை —ஸாம் ஷிஹாபுத்தீன் ஒலி
பெரிய ஹதீது மாலை — ,,
ரஸூல் மாலை — ,,
நபி மாலை — ,,
புத்தி மாலை — ,,
தோகை மாலை — ,,
(இவர்கள் சுமார் நூறு மாலைகள் பாடியுள்ளார்கள்)
மெய்ஞ்ஞானப் புலம்பர் கண்ணி—உமர் ஒலி
ஞானப் பிரசன்னாக ரத்தினம் —ஷைகு முஹம்மது என்ற ஹக்கீம் ஸாஹிபு ஒலி
வேத புராணம் — நூகு ஒலி
மெஞ்ஞானத் துதி — கலீபா முஹம்மது லெப்பை ஆலிம்
காரணங் காணிது தோழி — ,,
பெஞ்ஞான அகத்தெளிவு —மாப்பிள்ளை லெப்பை ஆலிம் ஒலி
ஹதியா மாலை — ,,
ஆ வென்ன அனைத்துமாகி — ,,
கருத்தைத் திருத்தினால் காணலாம் — ,,
கிஸ்ஸத்து மதீனத்துந் நுஹாஸ் — ,,
ஸலாத்துந்நபவிய்யா வல்கௌதிய்யா—மாதிஹுல் கௌது முஹம்மது இஸ்மாயில் ஆலிம்
ரமலான் மாலை — ,,
ஷரீஅத் மாலை —ஷைகுஅப்துல்காதிர்ஒலி
தரீகத் மாலை — ,,
ஹகீகத் மாலை — ,,
மஅரிபத் மாலை — ,,
(இம்மகான் மேலும் பத்துமாலைகள் பாடியுள்ளார்கள்)
ரமலான் மாலை — நூகு லெப்பை ஆலிம்

**மற்றவை:**

பராஹீனுல் குர்ஆனிய்யா பீரத்தி — செண்டு அஹ்மது

மஸாயிலில் காதியானிய்யா (காதியானி மறுப்பு) முஹியித்தீன் ஆலிம்

குத்பாத் தர்ஜமா — நூகு லெப்பை ஆலிம்

தப்யீனுர் ரஷ்யில் கியாஸி (காதிரிய்யா தரீக்காவைத் தாக்கி பேசியோருக்கு மறுப்பு) —பாளையம் முஹம்மது அப்துல் காதிர் ஆலிம்

காயல்பட்டினம் காரணச் சரித்திரம் — ''



**புகாரிஷ் ஷரீப் ஸபை**

**(அல்மத்ரஸத்துல் ஹாமிதிய்யா இயங்குமிடம்)**





**சாகிப் அப்பா தைக்கா**

(உமர் வலியுல்லாஹ், தைக்கா சாகிப் வலியுல்லாஹ் ஆகியோர்களின் அடக்க இடங்கள்)



முஹியித்தீன் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளி



சென்ட்ரல் மேல்நிலைப்பள்ளி



சுபைதா மேல்நிலைப்பள்ளி





எல். கே. மேல்நிலைப்பள்ளி



அரசினர் பெண்கள் மேல்நிலைப்பள்ளி



K. M. T. Hospital

காயல்பட்டினம் மருத்துவ அறக்கட்டளை மருத்துவமனை.
சேவை நோக்கத்துடன் சாற்றோற்றமான பரந்த இடத்தில் நவீன
வசதிகளுடன் திறமையான டாக்டர்களைக் கொண்டு செயல்படுகிறது.